# சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு

திருவள்ளுவர் பல்கலைக்கழக முழு நேர முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ப.ஆனந்தகுமார்**

(பதிவு எண்:No.TVU/R/Ph.D./Reg./FT/Tam./SHCT/2013/6251)

நெறியாளர்

முனைவர் **கி.பார்த்திபராஜா,** எம்.ஏ.,பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை & ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635 601 வேலூர் மாவட்டம்






## திருவள்ளுவர் பல்கலைக்கழகம்

சேர்க்காடு, வேலூர் – 632 115.

செப்டம்பர் – 2017

**முனைவர் கி.பார்த்திபராஜா,** எம்.ஏ.,பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் - 635 601, வேலூர் மாவட்டம்.

# நெறியாளர் சான்றிதழ்

**“சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு”** என்னும் தலைப்பில் ப.ஆனந்தகுமார் (பதிவு எண்:2013/6251) செய்துள்ள, இந்த ஆய்வேடு திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : திருப்பத்தூர்

நாள் : 18.09.2017

நெறியாளர் கையொப்பம்

**(முனைவர் கி.பார்த்திபராஜா)**

தமிழ்த்துறைத் தலைவர்

முதல்வர்

**ப.ஆனந்தகுமார்**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்)
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் - 635 601, வேலூர் மாவட்டம்.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு"** என்னும் தலைப்பில் திருவள்ளுவர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக முழுநேரமாகச் செய்யப்பட்ட, இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் தன்னியலாக உருவானதேயாகும். இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இடம் : திருப்பத்தூர்

நாள் : 18.09.2017

ஆய்வாளர் கையொப்பம்

**(ப.ஆனந்தகுமார்)**

# நன்றியுரை

**“சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு”** என்னும் ஆய்வுத் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி வழங்கிய துணைவேந்தர், பதிவாளர், தேர்வுக் கட்டுப்பாட்டு இயக்குநர் மற்றும் திருவள்ளுவர் பல்கலைக்கழக நிர்வாகத்தினருக்கு நன்றி.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய தூய நெஞ்சக் கல்லூரிக்கு எனது நன்றி. ஏழை, எளிய மற்றும் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கும் குறிப்பாக மிகவும் விளிம்பு நிலையில் உள்ள மாணவர்களுக்கும் கல்வி வழங்கி அவர்களின் வாழ்க்கை ஒளி பெற உறுதுணையாக இருக்கின்ற இக்கல்லூரியின் அருட்தந்தையர்கள், முனைவர் அ.மரியசூசை அடிகளார், அருட்தந்தை சி.எம்.வர்கீஸ் அடிகளார், அருட்தந்தை கே.எம்.ஜோஸ் அடிகளார், இல்லத்தந்தை அருட்திரு முனைவர் சி.அந்தோனிராஜ் அடிகளார், முதல்வர் அருட்தந்தை முனைவர் தா.மரிய அந்தோணிராஜ் அடிகளார், கூடுதல் முதல்வர் அருட்தந்தை முனைவர் கே.ஏ.மரிய ஆரோக்கியராஜ் அடிகளார உள்ளிட்ட அனைவருக்கும் என் உள்ளம் நெகிழ்ந்த நன்றிகள்.

தூய நெஞ்சக் கல்லூரியில் முனைவர் பட்டத்திற்கான முழுநேர ஆய்வு நிகழ்த்துவதற்கு உள்ளம் நெகிழ்ந்து அனுமதி வழங்கிய தமிழ்த்துறைக்கும் ஆய்வுப் பணிகளில் ஊக்கமூட்டிய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் பொ.செல்வகுமார் அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். ஆய்வுத் துறையில் என்னை உற்சாகப்படுத்திய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எனது நன்றி.

ஆய்விற்கு நெறியாளராக அமைந்து, ஆய்வின் முதல் நிலையிலிருந்து இறுதி வரை அனைத்து நிலைகளிலுமே எனது ஆய்விற்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்ததோடு

மட்டுமல்லாமல், உறுதுணையாகவும் ஆக்கமும் தந்து எனது வளர்ச்சியில் மகிழ்ச்சி காணும் எனது நெறியாளர் முனைவர் கி.பார்த்திபராஜா அவர்களுக்கும், ஆய்வு மாணாக்கரைக் குடும்ப உறவுகளில் ஒருவராகப் பாவித்துப் பழகும் தோழர் ம.ஆ.சிநேகா பார்த்திபராஜா அவர்களுக்கும் எனது இதயப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு மதிப்பீட்டுக் குழுவில் ஆய்வு மதிப்பீட்டாளராக வருகை புரிந்து, ஆய்வுத் தொடர்பாகப் பல்வேறு கருத்துக்களை வழங்கிய முனைவர் ந.சிவகுரு அவர்களுக்கு நன்றி.

என்னைக் குடும்பத்தின் முதல் பட்டதாரியாகக் காண விரும்பிய தாய், தந்தை, சகோரதரர்கள் அவர்களின் பாதங்களில் என் நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன்.

என் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த பல்கலைக்கழக நூலகங்கள், அண்ணா அறிவாலயம் - பேராசிரியர் நூலகம், தூய நெஞ்சக் கல்லூரி நூலகம், முனைவர் கி.பார்த்திபராஜா அவர்களின் நூலகம், வேலூர் மாவட்ட மைய நூலகம் ஆகிய நூலகங்களுக்கும் அதன் பணியாளர்களுக்கும் என் நன்றி.

எனது ஆய்வுப்பணியில் உற்சாகப்படுத்திய சக முனைவர் பட்ட ஆய்வாளர்கள் அ.குமார், சி.க.கோவிந்தராஜ், மு.மாலா, கோ.மோகன், கு.கார்த்திகா, ஆ.ரூபா, ம.வித்யா ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை நல்ல முறையில் கட்டமைத்து தந்த வி.பி.புக் பைண்டிங் அச்சகத்தாருக்கும் எனது நன்றிகள்.

ஆய்வாளர்

**ப.ஆனந்தகுமார்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள். |
| குறுந். | - | குறுந்தொகை |
| திரி. | - | திரிகடுகம் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தொ.ஆ . | - | தொகுப்பாசிரியர் |
| தொ.ஆசி. | - | தொகுப்பாசிரியர்கள் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நந்தி. | - | நந்திக்கலம்பகம் |
| நற். | - | நற்றிணை |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| நாலடி. | - | நாலடியார் |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிப்பாசிரியர் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பழ. | - | பழமொழி நானூறு |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மணி. | - | மணிமேகலை |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| மேலது | - | மேற்குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

## ஆய்வுத் தலைப்பு

**“சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு”** என்பது ஆய்வேட்டின் தலைப்பாகும்.

## அறிமுகம்

சங்க இலக்கியங்கள் ‘பாட்டும் தொகையும்’ எனப்படும். தொகை என்பது எட்டுத்தொகையையும் பாட்டு என்பது பத்துப்பாட்டையும் குறிக்கும். தனிப்பாடல்களின் தொகுப்பு எட்டுத்தொகை என்றும் நெடும்பாடல்களின் தொகுப்பு பத்துப்பாட்டு என்றும் அழைக்கப்படுகிறது. சங்கத்தொகைப் பாடல்கள் அனைத்தும் அகம், புறமாகிய திணை பற்றிய செய்திகளைக் கூறுவதால் அவற்றைத் திணை இலக்கியம் என்றும் பதினெண் மேற்கணக்கு நூல்கள் என்றும் கூறுவதுண்டு. இவற்றில் அகப்பாடல்கள் அனைத்தும் பாத்திரக்கூற்றுகளாகவும் புறப்பாடல்கள் அனைத்தும் புலவர் கூற்றுகளாகவும் அமைகின்றன.

புலமை என்பதற்கு மெய்ஞ்ஞானம், கல்வி, அறிவு என்பது பொருள். சான்றோர்கள் ‘எமக்குத் தொழில் கவிதை’ என்று பெருமித உணர்வோடும் மக்களின் நல்வாழ்வினை மட்டும் மனதில் கொண்டு எழுத்தாற்றலையும் சொல்லாற்றலையும் பயன்படுத்தினார்கள் என்பதைச் சங்கப்பாடல்களிலிருந்து அறிய முடிகிறது. புலவர்களை ‘அறிவுத் தொழில் செய்வார்’ என்ற பொருளில் ‘புலன் உழுது உண்மார்’ என்றே குறிப்பிடும் பாடலும் உண்டு. இவற்றில் பாட்டுப்பாடுபவன் பாணன் என்றும் கூத்துகள் ஆடுவோன் கூத்தன் என்றும் கூத்தாடும் பெண் விறலி என்றும் சுட்டப்படுகின்றனர்.

சங்ககாலச் சமூக மக்களின் தொழிலாக வேட்டையாடுதல், ஆடு மாடுகள் மேய்த்தல், விவசாயம் செய்தல், குடிசைத் தொழில்கள், வாணிபம் ஆகியவை குறிக்கப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் புலவர், பாணர், பாடினியர், கூத்தர், விறலியர், பொருநர் போன்ற கலைஞர்களும் புலமைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஒவ்வொரு தொழில் செய்வோரும் தன்னுடைய தொழில் நேர்த்தியாகவும் சிறப்பாகவும் தொய்வில்லாமலும் செய்ததைப் போல புலமைத்

தொழிலில் ஈடுபட்டிருக்கும் புலவரும் கலைஞரும் அவர்களது தொழிலில் ஈடுபட்டனர்.

பெரும்பாலும் மன்னர்களையும் குறுநில மன்னர்களையும் நிலக்கிழார்களையும் போற்றிப் புகழ்ந்து பாடுவது புலவர் மற்றும் கலைஞர்களின் மரபு. ஏனெனில், தமது முன்னோர்கள் புலமைத் தொழிலை மேற்கொண்டதால் கவிஞர்களும் வாழ்க்கையை நடத்துவதற்கு வேறுவழியில்லாமல் பாடல்கள் பாட வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டனர். வள்ளல்களைப் பாடிப் பொருளைப் பெற்று உறவினர்களையும் காத்துத் தமக்கென வைத்துக் கொள்ளாமல் பலருக்கும் கொடுத்து வாழ்கின்ற புலவர் வாழ்க்கையால் யாருக்கேனும் தீமைகள் ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லை. எனவே, அவர்களின் வாழ்வு பெரிய செல்வம் படைத்த மன்னர்களின் வாழ்வைப் போல ஒத்திருப்பது புலமைத் தொழிலின் பெருமையை உணர்த்துகிறது.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியத்தில் புலமைத் தொழில் மரபினர் யாவர். அவர்கள் எவ்வாறு வாழ்ந்தனர், எத்தகைய புலமையை வெளிப்படுத்தினர் என்று அறிவது அவசியமாகிறது. சங்க காலத்தில் புலமைத் தொழில் மரபினர் பெற்றிருந்த செல்வாக்கு அதன் பின்னர் அவர்களுக்கு ஏற்பட்ட வீழ்ச்சி நிலை குறித்து ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

- புலமைத் தொழிலாளர்கள் குறித்த செய்திகள் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்பட்டாலும் அவர்களைப் பற்றிய தனித்த ஆய்வுகள் தமிழில் குறைவாகவே இருக்கின்றன.

- ஐவகை நிலங்களில் புலமைத் தொழிலாளர்கள் வாழ்ந்தாலும் எந்த நிலத்தில் அதிகமாகக் காணப்பட்டார்கள் என்று அறிதற்கு இடமிருக்கிறது.

- புலவர்கள் இனக்குழுக்களிலிருந்து நிலவுடைமையாளர்களைப் போற்ற வேண்டிய நெருக்கடி ஏற்பட்டிருக்கலாம்.

- நிலம் சார்ந்த தொழிலில் புலவர்கள் ஈடுபட்டிருந்தாலும் எவ்வாறு வறுமை நிலையை அடைந்தனர். பொருள் பெற்றபின் மற்றவர்களுக்குக் கொடுத்து

உதவ வேண்டுமென்ற எண்ணம் எவ்விதம் ஏற்பட்டது என்ற ஐயம் எழுகிறது.

- புலவர்கள் நிலவுடைமையாளர்களிடமிருந்து பொருள் பெறுவதற்கு முன்பு, பொருள் பெற்ற பின்பு அவர்களது வறுமை நிலை ஆகியவற்றிற்கிடையே ஒரு கனத்த இடைவெளி இருக்கிறது.

என்பதையெல்லாம் கருதுகோள்களாகக் கொண்டு இந்த ஆய்வு அமைகிறது.

**ஆய்வு முன்னோடிகள்**

| | | |
|---|---|---|
| காந்திதாசன்.க. | - | சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை, 2011 |
| பக்தவத்சல பாரதி | - | பாணர் இனவரைவியல்<br>அடையாளம் பதிப்பகம்<br>திருச்சி, 2015 |
| பழனிவேலு.கே. | - | சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>சென்னை, 2010 |
| ஜெயந்தி.கோ. | - | சங்க இலக்கியத்தில் அரசப் புலவர்கள்<br>முனைவர் பட்ட ஆய்வேடு<br>சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை,<br>ஜனவரி - 2008 |

**ஆய்வு எல்லையும் பரப்பும்**

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டுச் சங்க இலக்கிய நூல்களை முதன்மையாகக் கொண்டு இவ்வாய்வின் எல்லை வரையறுக்கப்பட்டுள்ளது.

**ஆய்வுத் தரவுகள்**

ஆய்வின் தரவுகள் இருவகையில் அமைகின்றன. அவை,

1. முதன்மைத் தரவுகள்

2. துணைமைத் தரவுகள்

**1. முதன்மைத் தரவுகள்**

சங்க இலக்கிய நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு, பரிபாடல் ஆகிய எட்டுத்தொகை நூல்களும் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, சிறும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, நெடுநல்வாடை ஆகிய பத்துப்பாட்டு நூல்களும் முதன்மைத் தரவுகளாக அமைகின்றன.

**2. துணைமைத் தரவுகள்**

ஆய்வு தொடர்பாக வெளிவந்துள்ள ஆராய்ச்சி மற்றும் திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள், ஆங்கில நூல்கள் ஆகியன துணைமைத் தரவுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

ஆய்வானது விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism), வரலாற்றுமுறைத் திறனாய்வு (Historical Criticism), சமுதாயவியல் அணுகுமுறை (Sociological Approach), பகுப்பாய்வு முறை (Analytical Method) ஆகிய ஆய்வு நெறிகளின் அடிப்படையில் அணுகப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பகுப்பு**

**சங்க இலக்கியத்தில் புலமைத் தொழில் மரபு** என்னும் இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்படுகிறது.

ஆய்வு அறிமுகம்
1. வாய்மொழிப் பாட்டு மரபும் எழுத்து மரபும்
2. புலவர்கள் வாழ்வும் இருப்பும்
3. புலவர் - அரசர் - சமூகம்: உறவும் முரணும்
4. புலமைத் தொழிற்பாடும் இலக்கியக் கட்டமைப்பும்

ஆய்வு மதிப்பீடு

**ஆய்வுப்பகுப்பு விளக்கம்**

**ஆய்வு அறிமுகம்**

ஆய்வு அறிமுகம் என்னும் பகுதி ஆய்வு விளக்கம், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுக் கருதுகோள், ஆய்வு எல்லையும் பரப்பும், ஆய்வுத் தரவுகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பும் சுருக்கமும் ஆகியவற்றை விளக்குகிறது.

**இயல் - 1 : வாய்மொழிப் பாட்டு மரபும் எழுத்து மரபும்**

வாய்மொழி இலக்கியம், எழுத்திலக்கியம், பாட்டுக்கும் எழுத்துக்கும் உள்ள உறவு நிலைகள், கலைஞர் தமது கூற்றில் கருத்தை வெளிப்படுத்துதல், பாணர் கூற்று, தம்மைப் பாணனோடு சேர்த்துக் கூறுதல், பாணர் குடியில் பிறந்த புலவர்கள், புலமைத் தொழில், புலவர்களின் கடமை, பாணர் பாடினியின் காலம், பாணர் பாடினியின் நிலை, பாணர் தோற்றம், எழுத்துக்கல்வி வளர்ச்சியானது, வாய்மொழிப் பாடல் நிலையிலிருந்து எழுத்து நிலைக்கான மாற்றம் ஏற்பட்டதை எடுத்துக்கூறும் நோக்கத்தோடு இந்த இயல் ஆராய்கிறது.

**இயல் - 2 : புலவர்கள் வாழ்வும் இருப்பும்**

புலவர்களின் படைப்புத் திறன், புலவர்களின் வாழ்வு முறைகள், பரிசில் வாழ்வு, புலவர்களின் மனநிலை, பிறருக்கு உதவும் மனப்பாங்கு, புலவர்களின் குணநலன்கள், செம்மை வாழ்விற்கான நல்லியல்புகள், உணர்ச்சி, மன உறுதி, மதிப்பு, புலவர்களின் உலகியல் வாழ்க்கை, புலமையோரின் சுயநலமின்மை, அரசனைக் கண்டிக்கும் துணிவு, சமூக சார்ந்த செயல்பாடுகளில் ஈடுபாடு, தெய்வத்தோடு ஒப்பிடும் தன்மை, வாய்மை தவறாது வாழ்ந்த செய்திகள் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**இயல் -3 : புலவர் - அரசர் - சமூகம்: உறவும் முரணும்**

அறிவுத்திறமை, சங்ககாலப் புலவர்கள் அறிவித்தலும் அறிவுறுத்தலும், அரசரின் சிறப்பியல்புகள், ஈகையின் தன்மை, இரவலரின் தன்மானம், புலவருக்குப் புரவலர் கொடுத்த பரிசில், பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு, ஔவையார் - அதியமானின் நட்புத்திறம், கபிலர் - பாரி நட்புறவு, புலவர் - அரசர் முரண்பாடுகள், நல்லாட்சியும் கொடுங்கோல் ஆட்சியும், வரி செலுத்துதலில் மன்னனின் பங்கு, புலவர்களை ஆதரித்தல், பாணர்களுக்கு ஆதரவு, அரசனின் மனமும் போர்க்குணமும், அரசனின் மானப்பண்பு, மானம் கருதி வடக்கிருக்கத் துணிதல், தோற்ற மன்னர்களின் நிலை, பகைவர் நாட்டில்

எரியூட்டுதல், நீர்நிலை அழித்தல், முகக்குறிப்பு அறிந்து ஈதல், இரவலரின் இளைத்த மேனி, புலவர் - பாணர் சமூக ஒருங்கிணைப்பு, பிறருக்காக வாழுதல், பகுத்து வழங்குதல், புகழ்பட வாழ்தல் என்பதைப் பற்றி இவ்வியல் ஆராய்கிறது.

**இயல் - 4 : புலமைத் தொழிற்பாடும் இலக்கியக் கட்டமைப்பும்**

சங்க இலக்கியங்கள் தொகுக்கப்பட்ட விதம், சங்க இலக்கியக் கட்டமைப்பு, புலவர் மரபு, சங்கப் புலவர்கள் கையாண்ட உத்திகள், உள்ளுறை, உவமம், இறைச்சி, படிமம், தகவல் தொடர்பியல் உத்திகள், விமர்சன உத்தி, விளம்பர உத்தி, அறிவுரை கூறும் உத்தி, வர்ணனை உத்தி, கோட்பாடு, சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு. தொடர்பியல் கோட்பாடு, வலுவூட்டல் கோட்பாடு, தகவல் கோட்பாடு, சமுதாயத்தில் இலக்கியத்தின் வெளிப்பாடு, இலக்கியம் படைக்கத் தேவைப்பட்ட சூழல் என்பதைப் பற்றி இவ்வியல் ஆராய்கிறது.

**ஆய்வு மதிப்பீடு** என்னும் பகுதியில் மேற்கண்ட சங்க இலக்கியத்தில் புலமைத் தொழில் மரபு என்னும் தலைப்பில் கீழ் முன்னுரை நீங்கலாக நான்கு இயல்களில் ஆராயப்பட்ட முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அதனைத் தொடர்ந்து பிற்கால ஆய்வு வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு மேலாய்வுக் களங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**துணை நூற்பட்டியல்**

ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்களும் கட்டுரை, ஆராய்ச்சி, திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள், களஞ்சியங்கள், ஆங்கில நூல்கள், ஆய்வேடுகள் அகரநிரலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

1.1. வாய்மொழி இலக்கியம்

**1.2. எழுத்திலக்கியம்**

1.2.1. புலவர் மரபு

1.2.2. நட்புறவு

1.3. புலவர்கள்

**1.4. பாட்டுக்கும் எழுத்துக்கும் உள்ள உறவு நிலைகள்**

1.4.1. கலைஞர்கள் பரிசில் பெற்றதைக் கூறுதல்

**1.4.2. மன்னனைப் புகழ்ந்து கூறுதல்**

1.4.2.1. பிறர் பாடும் சிறப்பிற்குரிய தன்மை

1.4.2.2. நாடு

1.4.2.3. கலைஞர்களைப் போற்றிய தன்மை

1.4.2.4. குடிப்பெருமை

1.4.2.5. மன்னரின் பெருமையினைப் பகைவர்க்கு உணர்த்துதல்

**1.4.3. கலைஞர் கூற்றில் தமது கருத்தை வெளிப்படுத்துதல்**

1.4.3.1. பாணர் கூற்று

1.4.3.2. விறலி கூற்றில் அமைந்த பாடல்

1.4.3.3. கிணைவன் கூற்று

1.4.3.4. பொருநர் கூற்று

**1.4.4. தம்மைப் பாணனுடன் சேர்த்துக் கூறுதல்**

1.4.5. கலைஞர்களின் பண்பைக் கூறுதல்

1.4.6. தம்மைப் பாணனாகப் பாவித்தல்

**1.4.7. பாணர் குடியில் பிறந்த புலவர்கள்**

1.4.7.1. ஔவையார்

1.4.7.2. காக்கைப்பாடினி நச்செள்ளையார்

1.4.7.3. நெடும் பல்லியத்தனார்

**1.4.8. கூத்தர் எனப் பெயர் கொண்ட புலவர்கள்**

1.4.9. புலமைத் தொழில்

1.4.10. புலவர்களின் கடமை

1.4.11. பாணர்கள் தமிழ்ச் சமூகத்தின் தொல்குடியினர்

1.4.12. பண்ணத்தி: பாணர்களின் வாய்மொழி இசைப்பாடல்

1.4.13. பாணர் பாடினியின் நிலை

1.4.14. பாணர் தோற்றம்

1.4.15. தொகுப்புரை

1.4.16. சான்றெண் விளக்கம்

# இயல் 1

## வாய்மொழிப் பாட்டு மரபும் எழுத்து மரபும்

மனித இனத் தோற்றத்திற்குப் பின்பு வாய்மொழி மரபு தோன்றியது. அதன் பின்னர் எழுத்து மரபு உருவானது. எழுத்து மரபு உலக மக்கள் தொகையில் பாதிக்குக் கீழ் உள்ள கற்றோர்களிடம் மட்டும் உள்ளது. மக்களின் அனுபவம் சிந்தனை, அறிவாற்றல், வாழ்க்கை நெறி காலத்திற்குக் காலம் மாறக்கூடியவை. மாற்றங்களை வாய்மொழி மரபுகள் வெளிப்படுத்தும். எழுத்து மரபுகள் அவற்றுள் சிலவற்றை மட்டுமே வெளிப்படுத்தும். இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்தது. ஒன்றில்லாமல் ஒன்றில்லை. ஆயினும், பழங்காலம் முதல் இன்றுவரை, மக்கள் அனைவருக்கும் பொதுவான வாய்மொழி மரபு கீழானது என்றும் சிறுபான்மை மக்களின் எழுத்து மரபு மேலானது என்றும் கருதப்படுகிறது.

நாட்டுப்புற இலக்கியங்கள் சுதந்திரமானவை. யாருடைய அதிகாரத்திற்கும் கட்டுப்பட்டதல்ல. எழுத்திலக்கியம் எழுதத் தயங்குகின்ற நேர்மைகளை வாய்மொழி இலக்கியம் பேசுகிறது. ஏட்டு இலக்கியம் தொட்டுக்காட்டாமல் விட்டுச் சென்ற இடங்களை வாய்மொழி மரபு தொட்டுச் செல்வதன் மூலம் ஒரு சமநிலை உருவாக்கப்படுகிறது. இதனால் தமிழ்க் கவிதை முழுமை பெறுகிறது.

ஒவ்வொரு மனித இனச் சமூகத்திலும் எழுத்திலக்கியமும் வாய்மொழி இலக்கியமும் ஒவ்வொரு வகையான உறவைக் கொண்டுள்ளன. இரண்டாயிரமாண்டுப் பாரம்பரியம் மிக்க தமிழ்ச் சமூகத்தில் எழுத்திலக்கியங்கள், வாய்மொழி இலக்கியத்தின் செழுமையான - வளமான பகுதிகளை உள்வாங்கிக் கொண்டு ஓங்கிச் செழித்து வளர்ந்திருப்பதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துவதை இந்த இயல் ஆராய்கிறது.

## 1.1. வாய்மொழி இலக்கியம்

ஆரம்ப நிலையில் மனிதனால் படைக்கப்பட்ட இலக்கியங்கள் ஓலைச்சுவடிகளில் பதிவு செய்யப்பட்டதற்கு முன்பு வாய்மொழியாக ஒவ்வொருவருடைய உள்ளத்திலும்தான் பதிவு செய்யப்பட்டன. பின்னர், மனிதனின் அறிவியல் கண்டுபிடிப்பான அச்சு இயந்திரத்தால் இத்தகு வாய்மொழி இலக்கியங்கள் எழுத்து இலக்கியங்களாகப் பதிவாயின.

எனவே, இலக்கியத்தின் தோற்றம் வாய்மொழியினதாக விளங்கியது. அதன் வளர்ச்சி நிலை எழுத்து இலக்கியங்களுக்கு இடையே கருத்து, கற்பனை, எதுகை, மோனை, உவமை, உருவகம், அந்தாதி என்று யாப்புக் கூறுகளில் ஒற்றுமைகள் உண்டு. ஆனால், வாய்மொழி இலக்கியத்திற்கு ஒரு குறிப்பிட்ட படைப்பாளன் இல்லை. மரபு ரீதியாகப் பாரம்பரியமாகப் பயிற்றுவிக்கப்பட்டு, பழக்கத்தினால் நிலைப்பாட்டினைப் பெறுவது. எழுத்திலக்கியமோ படைப்பாளனின் பெயரோடு இலக்கணக் கட்டமைப்புக்கு உட்பட்டு எழுதிப் பாதுகாக்கப்படுவது. படித்த – கண்ணுக்குத் தெரியாத வாசகர்கள் பொருட்டு, செந்நெறி வாழ்வுக்காகப் படைக்கப்படுவது எழுத்திலக்கியத்தில் வாய்மொழிக் கூறுகளின் தாக்கம் இடம் பெறுவதுண்டு.

## 1.2. எழுத்திலக்கியம்

காலந்தோறும் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. இவை அந்நாளில் படித்த சிலரால் ஓலை முதலியவற்றில் எழுதப்பட்டன. அச்சுக் கலையின் வருகைக்குப் பின்பு மிகுதியாகப் பதிவு செய்யப்பட்டு எழுத்திலக்கியங்களாயின. இதில் நாட்டுப்புறக் கூறுகளான வாய்மொழி இலக்கியப் பண்புகள் காணப்படுகின்றன. வாய்மொழி இலக்கியம் பேச்சு நடையில் அமைவது. இப்பண்பு எழுத்திலக்கியத்தில் காணப்படுகிறது.

“வாய்வழியாக மரபாக, பாணர் பாடல்கள் வழியாகக் கற்றறிந்த செந்நாப் புலவர்களை வந்தடைந்தவை. புலவரின் ஆக்கத்திற்குள் பாட்டியல் கூறுகளால் புனைந்து உட்செறிப்புக்கு உள்ளானவை. அவற்றைப் பிரித்தறிவது அத்தனை எளிதன்று. ஆயினும் புலவர் மரபுப் பாடல்களில் படிந்துள்ள வாய்வழி மரபுக் கூறுகளை உரியமுறை கொண்டு மீட்டுருவாக்கம்

செய்தால் பாணர் மரபு இலக்கியத்தை ஒருவாறு அடையாளம் காணலாம்”[1].

### 1.2.1. புலவர் மரபு

“புலவர் மரபின் களவுப் பாடல்களில் பெண்கள் சிறப்பிடம் பெறுகிறார்கள். தலைவி, தோழி, நற்றாய், செவிலி என்ற பாத்திரங்களாக அவர்கள் புலவர் மரபில் இடம் பெறுகிறார்கள். வாய்வழி மரபில் பெயர் சொல்லிச் சுட்டப்படாத பெண்களை, புலவர் மரபு குறிப்பிட்ட கூற்றுகளுக்கு (பேச்சு) உரியவர்களாகப் படைத்துள்ளது. இவ்வாறு பெயர் சுட்டப்படாத பெண்களின் குழுவை ‘ஆயம்’ என்று புலவர் மரபு அழைக்கிறது”[2].

சங்க காலத்தில் நாநயம் மிக்கப் புலவர்களுக்கும் நாடாளும் அரசர்களுக்கும் இடையே உயர்ந்த உணர்ச்சி, ஒத்த நட்பு நிலவியது. ‘சொல்லேர் உழவர்களாம் புலவர்கள் கொடிய வறுமையில் வாடிய நிலையிலும் கொடை உள்ளம் வாய்ந்தவர்களாக விளங்கினர்’. அவர்கள் மானமே பெரிதென எண்ணிப் பெருமிதத்துடன் வாழ்ந்தனர். ‘வில்லேர் உழவர்’களாம் வேந்தர்களோ கவியுள்ளம் கொண்டவர்களாக விளங்கினர். அவர்கள் புலவர்களால் பாடப்பெறுவதையே மிகப்பெறும் பேறாக மதித்தனர். புலவர் அரசருக்கு இடையே உள்ள உறவைப் புறநானூற்றுப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

பழந்தமிழ்ப் புலவர்கள் சான்றாண்மை நிறைந்தவர்களாக – உயர்ந்த அறத்தைப் பேணுபவர்களாக – அஞ்சாமை நிறைந்தவர்களாக – விளங்கினார்கள். அரசர்களிடம் புலவர்களுக்குப் பெருஞ்செல்வாக்கு இருந்தது. புலவர்கள் கூறும் அறிவுரைக்கும் அறவுரைக்கும் அரசர்கள் செவிகொடுத்துப் பணிந்திருக்கிறார்கள். அதனாலேயே சிறந்த பாடல்கள் அக்காலத்தில் தோன்ற முடிந்தது.

“வாழ்தல் வேண்டிப் - பொய் கூறேன், மெய் கூறுவல்”[3] என்று செம்மாந்த நடையில் முழங்குகிறார் மருதனிளநாகனார். “பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச் செய்யா கூறிக் கிளத்தல் எய்யாதாகின்று எம்சிறு செந்நாவே”[4] என்பது வாழ்க்கை முழுவதும் வாய்மையறம் பேணி வாழ்ந்து வந்த வண்பரணர் என்னும் புலவரின் கூற்று. வள்ளல் குமணனைப் பாடிப்

பரிசில் பெற்று வந்த பெருஞ்சித்திரனார்,

"இன்னோர்க்க என்னாது என்னொடும் சூளாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே"[5]

என்று தமது மனைவியிடம் கூறுகிறார். 'பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி, ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி' வாழ்ந்தவர் அவர் என்பதை உணர முடிகிறது. மேலும், அவரது புலமையை மதிக்காமல் இளவெளிமான் பொருள் கொடுக்க முனைந்த போது அதனை மறுத்து, 'காணாது ஈத்த இப்பொருட்கு யான் ஒரு வாணிகப் பரிசிலன் அல்லென்' என்று கூறும் உறுதிபடத் தெரிவிக்கிறார்.

### 1.2.2. நட்புறவு

அதியமான் நெடுமான் அஞ்சிக்காகப் பெண்பாற் புலவரான ஔவையார், தொண்டைமான் என்ற பகை வேந்தனிடம் தூதாகச் சென்ற நிகழ்ச்சி அவரது அஞ்சாமைப் பண்பை எடுத்துரைக்கின்றது. ஔவையார் உள்ளிட்ட பெண்பாற் புலவர்கள் முப்பதின்மர் சங்க காலத்தில் இருந்து பாடல் இயற்றினர்.

வள்ளல் பாரியின் வாழ்வோடு தமது வாழ்வைப் பிணைத்துக் கொண்டவர் கபிலர் என்ற பெரும்புலவர். அந்த வள்ளல் மாண்ட பிறகு அவனுடைய பெண்கள் இருவருக்கும் உதவியாக வாழ்ந்தவர் அவர். வள்ளல் பேகனின் அக வாழ்க்கையில் சிக்கல் எழுந்த போது, அவனுடைய மனைவி கண்ணகிக்காகப் பரிந்து, கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் என்னும் நான்கு புலவரும் பேகனிடம் வேண்டிப் பாடிய உருக்கம் நிறைந்த பாடல்கள் புறநானூற்றில் (143-147) உள்ளன. இதே போல், கோப்பெருஞ்சோழனுக்கும் அவனுடைய மக்களுக்கும் பகைமை மூண்டபோது அது போராக மூளாதபடி தடுத்தாட் கொண்டவர் புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர். அந்தச் சோழ மன்னனுக்கு உயிர் நண்பராக விளங்கியவர் பாண்டிய நாட்டுப் புலவர் பிசிராந்தையார். ஒருவரை ஒருவர்

காணாதபோதும் அவர்களுக்கு இடையே ஆழமானநட்பு நிலவியது. ‘

தன் மக்கள் செயலால் மானம் பொறாத கோப்பெருஞ்சோழன் துறவு பூண்டு வடக்கிருந்து உயிர் துறக்க நினைக்கின்றான். சான்றோர் பலர் அம்மன்னனைச் சூழ இருந்தனர். எனினும் சோழனது எண்ணம் பிசிராந்தையார் பால் ஒன்றியிருந்தது. ‘ஆந்தையார் பாண்டி நாட்டுப் பிசிர் என்னும் ஊரினரே’ ஆயினும் அவர் என் உயிரை ஓம்பும் உண்மை நண்பர். செல்வக் காலத்தே அவர் வந்து என்னைக் கண்டதிலர். காணாராயினும் அல்லற் காலமாகிய இப்போது வந்து என்னாக் காணாது இரார். காண்பதற்கு விரைந்து வருவார். நீவிர் ஐயம் கொள்ளல் வேண்டா. அவருக்கு ஓர் இடம் ஒதுக்கி வைப்பீராக என்று கூறினான் சோழன்.

‘‘தென்னம் பொருப்பன் நன்னாட்டுள்ளும்
பிசிரோன் என்பஎன் உயிரோம் புனனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லன் மன்னே’’[6]

என்றும்,

‘‘இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே’’[7]

என்றும் சோழன் பாடியதற்கேற்ப சோழன் உயிர் துறந்து நடுகல் ஆன சில நாட்களில் பிசிராந்தையாரும் வந்து சேர்கிறார். அவனது நடுகல்லைக் கண்ட புலவர் பெருவருத்தமுறுகிறார். தாமும் வடக்கிருந்து உயிர் துறக்கிறார். இதனைக் கண்ட பொத்தியாருக்கு உண்டான வியப்பு ஒருபாட்டாக மலர்ந்துள்ளது.

‘‘நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது துணிதல்
அதனினும் மருட்கை யுடைத்தே பிறன்நாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி

இசைமர பாக நட்புக் கந்தாக

இனையதோர் காலை யீங்கு வருதல்

வருவன் என்ற கோனது பெருமையும்

அதுபழு தின்றி வந்தவன் அறிவும்

வியத்தொறும் வியப்பிறந் தன்றே”[8]

எனபதன் மூலம் புலவர் நட்புறவினை அறிய முடிகிறது.

தொகுக்கப்பட்ட அகப்பாடல்கள் எல்லாம் சங்ககாலப் புலவர் மரபைச் சேர்ந்தவைகளாகும். அரசர்களைப் போற்றும் இலக்கிய மரபைச் சேர்ந்தவை. அரசவைகளில் புனைந்து பாடப்பட்டவை. செவ்வியல் பண்பும் செய்ந்நேர்த்தியும் புலமையும் புத்தாக்கமும் புனைவுகளும் நிரம்பியவை. வளர்ந்து வந்த மூவேந்தரின் ஆட்சிக்கு ஒத்த வேளாண் நாகரிகத்தைச் சேர்ந்தவை. ஏட்டு வழி மரபைச் சேர்ந்தவை. இத்தகைய எழுத்து வழி நாகரிகத்தின் வெளிப்பாடான புலவர் மரபிற்குரிய பாடுபொருள்கள் சமகாலத்திலும் எழுத்துடை வரலாற்றுக் காலத்திலும் இருந்தன. அதே போல எழுத்துடை வரலாற்றுக்கு முந்தைய காலத்திலும் (Pre – Historical) இருந்துள்ளன. இத்தகு வரலாற்றுக்கு முந்தைய கால ‘இலக்கிய’ மரபினைக் குறிக்கப் பாணர் மரபு என்ற தொடர் பயன்படுகிறது. புலவர் மரபைச் சேர்ந்த பாடல்களையே சங்க இலக்கியம் என்பது வழக்கம்.

## 1.3. புலவர்கள்

புலவர்களைக் குறிக்க பரிசிலர், இரவலர் ஆகிய சொற்களும் வழக்கில் உள்ளன. இவ்விரண்டு சொற்களும் புலவர்களும் பாணர் முதலான கலைஞர்க்கும் வழங்கப்படும் பொதுச் சொல்லாகக் காணப்பட்டன.

“மக்களால் வரிசை தந்து நன்கு மதிக்கும் உயர்ந்த பரிசுடையராதலின் இவர்களைப் ‘பரிசிலர்’ என்ற பெயரால் தமிழர் பாராட்டிப் போற்றுவராயினர்”[9] என்று வெள்ளைவாரணர் குறிப்பிடுகின்றார்.

இதே போல் இரவலர் என்னும் சொல் புலவர், பாணர் முதலான பலரையும் குறிக்கும் பொதுவான சொல்லாகவே வழங்கப்பட்டது. இங்கு இரத்தல் என்பது தற்போது குறிக்கும் பிச்சைக்காரர்கள் என்று பொருள் அன்று.

இரத்தல் என்னும் சொல்லின் பொதுவான பொருள் கேட்டல் என்பதேயாகும். எனவே, தம் திறமையை வெளிப்படுத்திச் செல்வர்களிடமும் மன்னர்களிடமும் பரிசில் கேட்போர் என்ற பொருளிலேயே புலவரும் பாணரும் இரவலர் என்றே குறிப்பிட்டனர்.

## 1.4. பாட்டுக்கும் எழுத்துக்கும் உள்ள உறவு நிலைகள்

புலவர்கள் என்போர் வெறும் பாட்டால் மன்னனைப் புகழ்ந்ததோடு அமையாமல் ஒரு நாட்டின் பண்பட்ட மரபுகளைக் கட்டிக் காக்கும் காவலராயும் வாழ்வுக்குக் கரையமைத்து ஒழுங்குபடுத்தும் பொறுப்பாளராகவும் இருந்தார்கள். இதனை நன்குணர்ந்த சங்க காலச் சமூகம் புலவர்களுக்கு மிகப்பெரிய சிறப்பளித்தது. இத்தகைய சிறப்புப் பெற்ற புலவர்கள் பாணன் உள்ளிட்ட கலைஞர்களைப் பற்றிய குறிப்புகளைத் தமது பாடல்களில் பதிவு செய்துள்ளனர். புலவர்கள் தம்முடைய பாடல்களில் பரிசில் பெற்றதைப் பதிவு செய்ததோடு கலைஞர்கள் பரிசில் பெற்றதையும் மன்னன், வள்ளல் ஆகியோர் கலைஞர்களை ஆதரித்ததையும் தம்முடைய கூற்றைக் கலைஞர்களின் கூற்றில் வைத்துப் பாடுவதையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

புலவர்கள், பாணர் என்ற பிரிவிலிருந்து வேறுபட்டவர்கள் ஆவர். வாய்மொழியாக இருந்த பாணர் மரபே சங்க இலக்கிய காலத்தில் புலவர் மரபாக உருவானது. சங்க இலக்கியத்திலே பாணர், புலவர் ஆகியோர் வேறு வேறானவர் என்பதற்குக் குறிப்புகள் காணப்படுகின்றன. மன்னர்கள் பரிசில் தரும் போது பாணர்க்குத் தாமரைப் பூவையும் புலவர்க்கு யானையொடு தேரையும் தந்து ஆதரித்தனர்.

“புலவர், சங்க இலக்கிய காலத்தின் இரண்டாம் கட்டத்தைச் சேர்ந்தவர். புலவர் என்போர் பாடுதல், ஆடுதல் போன்ற கலைகளில் தொடர்பற்றவர். அவர்கள் அறிவுத் திறத்திற்காக மதிக்கப் பெற்றவர்”[10]

என்று கூறும் க.கைலாசபதி, ‘சங்க இலக்கியம் வீரயுகத்தைச் சேர்ந்த பாணரின் வாய்மொழி இலக்கியத்தன்மை மிகுந்தது’ என்று கூறுகிறார். இவரது கருத்தை மறுத்து,

“பாணர் மரபு சங்க காலத்திற்கு முன்பு இருந்திருக்க வேண்டும். சங்க காலத்தே புலவர்கள் பாடத் தொடங்கி விட்டனர். சில வேளைகளில் புலவர்கள்

தங்களைப் பாணராகவும் விறலியாகவும் பாவித்துப் பாடும் நிலை அக்காலத்தே இருந்தது. ஆற்றுப்படைப் பாடல்கள் அத்தகைய பாவனை நிலையேயாகும். எனவே, பாணர் மரபு சங்க காலத்திற்கு மிக முந்தியது. அவை வாய்மொழிப் பாடல்கள் அல்ல என்பதே முடிவு"[11] என்று நா.செயராமன் கூறுவதன் மூலம் பாணரும் புலவரும் இருவகைப் பிரிவினர் என்பதை அறியலாம்.

சங்க காலத்தில் மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோர் பாணர் உள்ளிட்ட கலைஞர்களைப் பொன்னும், பொருளும் கொடுத்து ஆதரித்தனர். அதே போல் புலவர்களும் தம்முடைய பாடல்களில் மன்னனைப் புகழ்ந்து பாடும் போது கலைஞர்களைத் தம்முடைய பாடல்களில் பதிவு செய்ததன் நோக்கமாக இருவரும் பரிசிலர் என்ற நிலையும் பாணரின் வாய்மொழி மரபிலிருந்தே புலவரின் வரிவடிவ மரபு உருவானவை என்றும் எண்ணத் தோன்றுகிறது. புலவர்களில் ஒரு சிலர் பாணர் குடியிலிருந்து தோன்றியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. புலவர்கள் கலைஞர்களைப் பாடலில் பதிவு செய்ததன் மூலம் இவ்விருவருக்குமுள்ள உறவுநிலையைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

1. கலைஞர்கள் பரிசில் பெற்றதைக் கூறுதல்
2. மன்னனைப் புகழ்ந்து கூறுதல்
3. கலைஞர் கூற்றில் தமது கருத்தை வெளிப்படுத்துதல்
4. தம்மைப் பாணனுடன் சேர்த்துக் கூறுதல்
5. கலைஞர்களின் பண்பைக் கூறுதல்
6. தம்மைப் பாணனாகப் பாவித்தல்
7. பாணர் குடியில் பிறந்த புலவர்கள்
8. கூத்தர் எனப் பெயர் கொண்ட புலவர்கள்

என்ற எட்டு நிலைகளில் புலவர்க்கும் கலைஞர்க்கும் உள்ள உறவுநிலை பதிவு செய்யப்பட்டுள்ளன.

### 1.4.1. **கலைஞர்கள் பரிசில் பெற்றதைக் கூறுதல்**

புலவர்களும் கலைஞர்களும் தத்தம் துறைகளில் வேறுபட்டாலும் பரிசில் என்னும் துறையில் இருவரும் ஒரே நிலையில் காணப்படுகின்றனர். ஆனால், கலைஞர்களைப் போல் மிக வறுமையுள்ளவர்களாகப் புலவர்கள் சங்க இலக்கியத்தில் சித்தரிக்கப்படவில்லை. புலவர்கள், கலைஞர்களுடன் நன்கு

பழகியதால் அவர்களுக்கு மன்னன் அளிக்கும் பரிசிலைத் தம்முடைய பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

புலவர்கள் கலைஞர்கள் பெற்ற பரிசிலைத் தம்முடைய பாடல்களில் பதிவு செய்யப்பட்டதன் நோக்கமே தனக்கும் அவ்வாறு பரிசில் வேண்டும் என்ற எண்ணத்தினாலேயாகும். இதனைப் பேய்மகள் இளவெயினி என்ற புலவரின் பாடல் தெளிவுறுத்துகிறது. சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவிடம் பரிசில் பெறச் சென்ற பேய்மகள் இளவெயினி, மன்னனின் நாட்டின் வளத்தையும் பெருமையையும் கூறிய பின்பு பகைவரைப் புறமுதுகிட்டு ஓடச்செய்த அரசனின் வீரத்தைப் புகழ்ந்து அழகிய கழஞ்சுகளால் செய்த அணிகலன்களையும் பாடுதலில் வல்ல பாணனும் பொன்னலாகிய தாமரைப் பூவை வெள்ளி நாரால் தொடுக்கப்பெற்றான் என்பதை,

''மறம் பாடிய பாடினியும்மே
ஏர் உடைய விழுக் கழஞ்சின்
சீர் உடைய இழை பெற்றிசினே
………………………………
வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே''[12]

என்ற பாடலின் மூலம் அறியலாம். இப்பாடலில் கலைஞர்களாகிய பாணனும் விறலியும் பரிசில் பெற்றனர். தான் எதுவும் பெறவில்லை என்ற தன்னுடைய பரிசில் வேட்கையை மன்னனுக்கு உணர்த்துவதற்காக இப்பாடலில் கலைஞர் பரிசில் பெற்றதைப் புலவர் உத்தியாகப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகின்றது.

மன்னர்கள் தன்னை நாடி வரும் இரவலர்களுக்குப் பொன், மாலை, பொருள் போன்றவற்றை அளிப்பது வழக்கம். அவ்வகையில் மன்னர்களிடமிருந்து பாணர்கள் பொன்னாலான தாமரைப் பூவையும் அணிகலன்களையும் குதிரைகளையும் யானைகளையும் பொன்னரிமாலைகளையும் பாடினி அணிகலன்களையும் கூத்தர் பொன்னையும் பரிசாகப் பெற்றனர் என்பதை பெரும்பாலான புலவர்கள் தமது பாடல்களில் சுட்டிக்காட்டியுள்ளனர். பெரும்வேந்தர்கள் மட்டுமன்றிச் சீறூர் மன்னர்களும் பாணர், விறலியர்களுக்குப் பரிசலாகப் பொன், பொருள் அளித்ததோடு பகைவரிடமிருந்து கைப்பற்றப்பட்ட

சொல்லில் அடங்காத சிறப்பினையுடைய மேட்டுநிலத்தையுடைய சிறிய ஊர்களையும் பரிசாக அளித்தனர் என்பதை,

“ஐது அமை பாணிவனர் கோட்டுச் சீறியாழ்க்

கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய

நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்”[13]

என்ற வெறி பாடிய காமக் கண்ணியார் பாடிய பாடலின் மூலம் அறிய முடிகின்றது.

மன்னர்கள் கலைஞர்களின் வறுமை தீர பரிசில் அளித்ததோடு அவர்களின் பசிதீர உணவளித்து விருந்தோம்பலையும் செய்துள்ளனர். இதனையும் புலவர்கள் தம்முடைய பாடலில் இடம்பெறச் செய்தனர். சீறூர் மன்னனிடம் பரிசில் பெறச் சென்ற பாணர் சுற்றத்தினர் களாப்பழத்தின் புளிப்பினைப் போன்ற உறை ஊற்றப்பட்ட தயிரோடு, காய்ந்த கறித்துண்டுகளை நெய்யால் கலந்து செய்யப்பட்ட வெண்ணெல்லை அரிசி சோற்றோடு கள்ளினையும் பெற்றனர் என்பதை,

“.........வாடுஊன் கொழுங்குறை

கொய்க்குரலரிசியோடு நெய்பெய்து அட்டு

துடுப்பொடு சிவணிய களிகொள் வெண்சோறு

உண்டு இனிது இருந்த பின்றை”[14]

என்ற பாடலின் மூலம் அறியலாம். இப்பாடலின் ஆசிரியர் பெயர் பதிவு செய்யப்படவில்லை. இதே போல் ஏழு புலவர்கள் தமது பாடல்களில் கலைஞர்களுக்கு அளிக்கப்பட்ட விருந்தோம்பலைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இவ்வாறு புலவர்கள், கலைஞர் பெற்ற பரிசிலை மன்னனின் முன்னால் பாடினால் மன்னன் மனமகிழ்ந்து பரிசில் நிறைய அளிப்பான் என்ற நோக்கத்தினாலேயே இது போன்ற பாடல்களைப் பாடியுள்ளனர் என்று எண்ண முடிகிறது.

### 1.4.2. மன்னனைப் புகழ்ந்து கூறுதல்

புலவர்கள் மன்னனின் வீரம், கொடை, பரிசில் அளிக்கும் சிறப்பு போன்றவற்றைப் புகழ்ந்து கூறிப் பரிசில் பெறுவது வழக்கம். அவ்வாறு பாடும்

போது கலைஞர்களுக்கு மன்னன் ஆதரித்த சிறப்பையும் பதிவு செய்யத் தவறவில்லை. அவ்வகையில் பதிற்றுப்பத்தில் மன்னனைப் புகழ்ந்து பாடும் போது நான்கு புலவர்கள் ஏழு பாடல்களிலும் புறநானூற்றில் 22 புலவர்கள் 26 பாடல்களிலும் கலைஞர்களைப் பற்றிய குறிப்பை அளித்துள்ளனர். புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து (அ) வாழ்த்தும் போது பிறர் பாடும் சிறப்பிற்குரிய தன்மை, வளம் மிக்க நாட்டைக் கொண்ட தன்மை, கலைஞர்களைப் போற்றிய தன்மை, முன்னோரின் குடிப்பெருமை, பெருமை போன்ற பொருண்மைகளை அடிப்படையாகக் கொண்டும் பாடல்களைப் பதிவு செய்துள்ளனர்.

### 1.4.2.1. பிறர் பாடும் சிறப்பிற்குரிய தன்மை

புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து தான் பாடியதோடு அல்லாமல் பிறர் பாடும் சிறப்பிற்குரிய தன்மையை மன்னனுக்குத் தெளிவுறுத்துமாறு பாடல்களைப் பாடினர். வாரினால் இழுத்துக் கட்டப்பட்ட மார்ச்சனை என்னும் மண் தடவிய தண்ணுமையையுடைய பாடினி, உன்னுடைய படையெடுத்த தன்மையைப் புகழ்ந்து பாடுமாறு வலிமையுடையவனே என்று பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் புகழ்ந்து பாடியதை,

"............வார் உற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவின்
பாடினி பாடும் வஞ்சிக்கு
நாடல் சான்ற மைந்தினோய்!"[15]

என்ற அடிகள் மூலம் அறியலாம். இதே போல் விறலியர் பாடும் பாடலைக் கேட்டு மகிழ்ந்து அணிகலன்களைப் பரிசாக அளித்தவனே என்று ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரும் பலவித இசைக்கருவிகளைக் கொண்ட மென்சொற்கலப்பையர் வாழ்த்துவதற்குரிய சிறப்புப் பெற்றவனே என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனாரும் பாடியதன் மூலம் மன்னனைப் புகழ்ந்து பாடுவதற்கு இதனை ஓர் உத்தியாகப் பயன்படுத்தினர் என்பதை அறிய முடிகின்றது.

### 1.4.2.2. நாடு

புலவர்கள் மன்னனை வாழ்த்தும் முறைமைகளில் நாட்டின் சிறப்பைக் கூறி வாழ்த்துவதும் உண்டு. அவ்வகையில் சோழன் நலங்கிள்ளியை வாழ்த்தும் போது, வேலியின் பின்புறம் நின்று வேண்டுபவருக்கு அறமுடைய மக்கள் கரும்பைப் பறித்து எறிவர். அவ்வாறு கரும்பை எறியும் போது அவை தாமரையின் தாதினை உதிர்க்குமாறு பொய்கையில் விழும். அதனால் எழும் அலையின் ஆரவாரமானது கூத்தர் ஆடும் ஆடுகளத்தை ஒத்துக் காணப்படும். இத்தகைய இடங்களை உடையது உன்னுடைய நாடு என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியதை,

“புறஞ்சிறை மாக்கட்கு அறம் குறித்து, அகத்தோர்
புய்த்து ஏறி கரும்பின் விடு கழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தென கூத்தர்
ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே”[16]

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம்.

### 1.4.2.3. கலைஞர்களைப் போற்றிய தன்மை

மன்னர்கள் கலைஞர்களின் கலைத்திறனைப் பாராட்டி பொன், பொருளைப் பரிசிலாக அளித்ததோடு தன் அவையிலும் இடம் பெறச் செய்தனர். சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் புகழ்ந்து பாடும் போது, பொன்னாலாகிய தாமரையினை வெள்ளி நாரால் கட்டி மாலையாகச் செய்து தன்னுடைய தலையில் சூடியவராய் உள்ள பாணர்களை உன்னுடைய நாளவையில் இருக்குமாறு செய்தாய் என்று கூறியதை,

‘பாண் முற்றுக, நின் நாள் மகிழ் இருக்கை’[17]

என்ற அடிகளின் மூலம் அறியலாம். மேலும், பாணர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை ஆற்றியவனே என்று கபிலரும் ஊன்பொதியாரும் மன்னனைப் புகழ்வதன் மூலமும் பாணர்களின் பசித்துன்பத்தைப் போக்கியதால்

‘பாண்பசிப் பகைஞன்’[18]

என்று கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாராட்டியதன் மூலமும் கலைஞர்களை ஆதரித்த தன்மையை அறியலாம்.

மன்னர்கள் பகைவரை வெற்றி கொண்ட பிறகு தன்னுடைய இனத்தோடு கூடிக் கள்ளினை அளித்துப் பாணரின் சுற்றத்தைப் பாதுகாத்தமை கூத்தர்க்குக் கொடை அளித்தச் சிறப்பு போன்றவற்றைக் கூறுவதன் வாயிலாகப் புலவர்கள் கலைஞர்களைப் போல் மன்னர்கள் தம்மை ஆதரிக்க வேண்டும் என்ற நோக்கத்தை வெளிபடுத்தவேயாகும் என்பதை அறிய முடிகின்றது. இதனை, நலங்கிள்ளி விறலியருக்கு வஞ்சி எனப்படும் கருவூரையும் மதுரையும் தருவான். ஆதலால், பரிசிலரே வாரீர், அவன் புகழைப் பாடுவோம் என்று கோவூர் கிழார் பாடுவதன் மூலம் அறியலாம்.

### 1.4.2.4. குடிப்பெருமை

புலவர்கள் மன்னைப் புகழ்ந்து பாடும் போது குடிப்பெருமை கூறி வாழ்த்துவது வழக்கம். அவ்வகையில் மன்னனின் குடிப்பெருமை கூறும் போது கலைஞர்களைப் பற்றியும் சுட்டுவதாக இரண்டு புலவர்களின் பாடல்கள் விளங்குகின்றன. மலையமான் திருமுடிக்காரியை மாறோக்கத்து நப்பசலையார் புகழ்ந்து பாடும் போது,

“பகைவரின் யானையில் நெற்றிப் பட்டத்துப் பொன்னைக் கொண்டு பாணரின் தலை பொலிவு பெறும்படி வாடாத பொற்றாமரைப் பூவைச் சூட்டிய சிறந்த தலைமையினையும் புறங்கொடுத்து ஓடாத மேற்கோளினையும் உடைய முன்னோரின் வழி வந்த மரபினனே”[19] என்று குடிப்பெருமையைப் புகழ்ந்து பாடும் போது கலைஞர்க்கு அளித்த பரிசிலையும் கூறி வாழ்த்துவதை அறிய முடிகிறது.

அதே போல், காட்டிலிருந்த குமணனை வாழ்த்திப் பாடும் போது, ‘நல்ல போராற்றலையுடைய குமண! புலவராக அடுக்கப்பட்ட பண் அமைந்த நரம்பினைத் தோலால் போர்த்தப்பட்ட நல்ல யாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையும் உடைய கூத்தரது வறுமையைத் தீர்க்கும் குடியில் பிறந்தவன் நீ’ என்று குடிப்பெருமையைப் புகழந்து பாடியதை,

“பண் அமை நரம்பின் பச்சை நல்யாழ்

மண் அமை முழவின் வயிரியர்

இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே”[20]

என்ற புறநானூற்று அடிகள் மூலம் அறியலாம். இவ்வாறு மன்னரின் குடிப்பெருமையை வாழ்த்தும் போது புலவர்கள் கலைஞர்களைப் பற்றிய குறிப்பையும் பதிவு செய்துள்ளனர்.

### 1.4.2.5. மன்னரின் பெருமையினைப் பகைவர்க்கு உணர்த்துதல்

தன்னுடைய மன்னரின் பெருமையினைப் பகைவர்க்கு கூறும் போது, கலைஞர்களைப் பற்றிய குறிப்பைப் புலவர்கள் தமது பாடலில் பதிவு செய்துள்ளனர். அவ்வகையில் புறநானூற்றில் இரண்டு புலவர்கள் இரண்டு பாடல்களில் கலைஞர் பற்றிய குறிப்பைப் பதிவு செய்துள்ளனர். ஆய் அண்டிரனின் பெருமையைக் கூற வந்த உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரனின் பொதியின்மலை ஆடிச்செல்லும் விறலியால் அணுக இயலுமே அன்றி பகைவர்கள் அணுகுதல் இயலாது என்று பகை மன்னருக்கு மன்னரின் பெருமையைப் புகழ்ந்து பாடினார். இதே போல் பிட்டங்கொற்றனின் பெருமையைப் பகைவர்க்கு உணர்த்துவதாகப் பாடிய பாடலில், யானையின் தந்தத்தில் விளைந்த முத்தை விறலியருக்கும் நாரைப் பிழிந்தெடுத்த கள்ளின் தெளிவைப் பண் பொருந்திய யாழுடைய பாணர் சுற்றத்திற்கு அளித்தான். இவ்வாறு தன்னிடம் பரிசில் வேண்டி வந்தவர்க்கு மென்மையான இயல்பையும் பகைவருக்குக் கொல்லன் உலைக் களத்திலேயுள்ள உலைக்கல்லைப் போன்றவன் என்று கூறியதை,

“சிறுகண் யானை வெண் கோடு பயந்த

ஒளிதிகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து

.............................................

உலைக்கல் அன்ன, வல்லா ளன்னே”[21]

என்ற அடிகளின் மூலம் அறியலாம். இவ்வாறு மன்னனைப் புகழ்ந்து பாடுதல் என்ற துறையில் மன்னனின் பெருமையைப் பிறர் புகழ்ந்து பாடுதல், வளமிக்க நாட்டையுடையவன், பகைவருக்கு மன்னனின் பெருமையைப் புகழ்ந்து கூறுதல்

என்னும் பொருண்மையில் மன்னரை வாழ்த்திப் பாடும் போது, கலைஞர்களைப் பற்றிய குறிப்பையும் புலவர்கள் பாடலில் பதிவு செய்துள்ளனர்.

## 1.4.3. கலைஞர் கூற்றில் தமது கருத்தை வெளிப்படுத்தல்

சங்கப் புலவர்கள் கலைஞர்களின் வாழ்க்கையை நேரில் கண்டு பழகியோராதலின் அவர்களுடைய இயல்புகள் பலவற்றையும் தம்முடைய பாடல்களில் பதிவு செய்துள்ளனர். மேலும் தம்முடைய கருத்துக்களைக் கலைஞர் கூற்றில் அமைத்துள்ளனர். அவ்வகையில் புறநானூற்றில் 19 புலவர்கள் 23 பாடல்களில் கலைஞர் கூற்றுக்களாகப் பாடல்களை அமைத்துள்ளனர். அவற்றுள் பாணர் கூற்றுக்களாக மூன்று புலவர்கள் மூன்று பாடல்களிலும் பொருநர் கூற்றுக்களாக மூன்று புலவர்கள் மூன்று பாடல்களிலும் விறலி கூற்றுக்களாக ஒரு புலவர் இரண்டு பாடலிலும் கிணைவன் கூற்றுக்களாக ஒரு புலவர் ஒரு பாடலிலும் கிணைப்பொருநன் கூற்றுக்களாக ஏழு புலவர்கள் எட்டுப் பாடல்களிலும் யாழ்ப்பாணர் கூற்றுக்களாக ஆறு புலவர்கள் ஆறு பாடல்களிலும் தம்முடைய கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர். இவற்றுள் கூத்தர் கூற்றுக்களாக ஒரு புலவரும் பாடல் அமைக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### 1.4.3.1. பாணர் கூற்று

கலைஞர் சுற்றத்தினருள் குறிப்பிடத்தக்கவராக விளங்கியோர் பாணர் ஆவர். சுற்றத்தினரை வழி நடத்திச் செல்லும் ஆற்றல் பாணர்கள் பெற்றிருந்ததாலேயே கலைஞர் சுற்றத்தினரைப் பாண் சுற்றத்தினர் என்று அழைத்தனர். புலவர்கள் மன்னனைத் தாமே நேரடியாகப் புகழ்ந்து பாடாமல் கலைஞர் வாயிலாகத் தம்முடைய கருத்தை வெளிப்படுத்தினர். புறநானூற்றில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், வடமவண்ணக்கன் தாமோதரனார், மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் ஆகிய புலவர்கள், பாணர் தமது சுற்றத்தினருக்கு மன்னன் அளித்த பரிசிலையும் விருந்தையும் கூறிப் புகழ்ந்து கூறுவதாகப் பாடலை அமைத்துள்ளனர்.

பாணன் ஒருவன் தான் பெற்ற இன்பத்தைச் சுற்றத்தினருக்குக் கூறுவதாகப் பாடிய பாடலில், நல்ல மலைநாட்டையும் குதிரையும் உடைய பிட்டனும் அவன் தலைவனாகிய சேரமான் கோதையும் அவனோடு பகை கொண்ட மன்னரும் நீண்ட நாள் வாழ்வாராக. ஏனெனில் பிட்டங்கொற்றன் தரும்

உணவு குறைந்தால் அவன் தலைவனாகிய சேரமான் கோதை தரும் உணவு நம் பசியைத் தீர்க்கும். இனிமேல் உணவு தேடிப் பிறரிடம் இரங்குதல் வேண்டாம். பரிசிலரைப் பாதுகாக்கும் பிட்டனும் கோதையும் உள்ளதால் மனம் வருந்தாது, உலையை ஏற்றி சோற்றை ஆக்கி உண்க; மதுவை அருந்துக; விறலியரே மாலை சூடுக என்றும் அவர்களை வாழ்க என்று வாழ்த்துவதுவே நாம் செய்ய வேண்டுவன என்றும் பாண் சுற்றத்தினருக்குப் பாணர் கூறுவதாக வடமவண்ணக்கன் தாமோதரனார் பாடியதை,

"ஏற்றுக உலையே; ஆக்குக சோறே;

கள்ளும் குறைபடல் ஓம்புக; ஒள்இழைப்

பாடுவல் விறலியர் கோதையும் புனைக;

…………………………………………..

மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே!"[22]

என்ற புறநானூற்று அடிகள் மூலம் அறியலாம். இதே போல் பண்ணனிடத்துப் பரிசில் பெறப் போகின்ற பாணன் ஒருவன், பரிசில் பெற்று வரும் பாணரைக் கண்டு கேட்பதாகச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாடியுள்ளார். பழுத்த மரத்தை பறவைகள் நாடிச் சென்று கனியுண்டு ஆரவாரம் செய்வது இயல்பு. அவ்வாறு எழுந்த ஆரவாரத்தைப் போல் பசிப்பிணி தீர்க்கும் பண்ணன் இல்லத்தில் பலரும் உணவருந்துவதால் ஆரவாரம் உண்டாகும். அத்தகைய சிறப்புப் பெற்ற பசி நோய் தீர்க்கும் மருத்துவனாகிய பண்ணன் இல்லம் பக்கமோ? தூரமோ? என்று எங்களுக்குத் தெளியச் சொல்லுங்கள் என்று எதிரே வந்த பாணனிடம் பரிசில் பெறச் செல்லும் பாணன் வினவுவதாகச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாடியுள்ளார்.

### 1.4.3.2. விறலி கூற்றில் அமைந்த பாடல்

பாண் சுற்றத்தினருள் ஆடவும், பாடவும் தெரிந்த பெண் கலைஞர் விறலியாவார். விறலியின் கூற்றாக ஔவையார் இரண்டு பாடல்களை அமைத்துள்ளார். நாஞ்சில் வள்ளுவன் அளித்த பரிசிலைக் கண்டு குறை கூறுவது போல, கொடைத் தன்மையைப் புகழ்ந்து விறலி கூற்றில் பாடும் போது, மறந்தும் பொய்கூறாத தன்மையுடைய புலவர்களே! பலாமரங்கள் மிகுந்த நாஞ்சில் மலைக்கு வேந்தனாகிய நாஞ்சில் வள்ளுவனிடம்,

மலைப்பக்கத்தில் பறித்துச் சமைத்த இலையின் மேல் தூவுவதற்கு துவரை வேண்டி நின்றோம். அவன் பரிசிலர்க்கு உதவும் வரிசை அறிந்தவன். ஆதலால் எமது வறுமையைப் பார்த்தவுடனே மலை போன்றதொரு யானையை அளித்தான். இவ்வாறு தெளிவில்லாது கொடுக்கும் கொடையும் உலகில் உளதோ? எனக் குறை கூறுவது போல புகழ்ந்து கூறியதை,

“தடவு நிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்

மடவன் மன்ற; செந்நாய்ப் புலவீர்!

வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த

அடகின் கண்ணுறை யாக யாம்சில

……………………………………..

போற்றார் அம்ம, பெரியோர் தம் கடனே?”[23]

என்ற புறநானூற்று அடிகளின் மூலம் விறலி கூற்றாக ஔவையார் பாடல் அமைத்துள்ளார். இதே போல் பகை மன்னனிடம் அதியமான் நெடுமான் அஞ்சியின் பெருமையை விறலி கூறுவதாகவும் பாடல் அமைத்துள்ளார்.

### 1.4.3.4. **கிணைவன் கூற்று**

பாண் சுற்றத்தினருள் கிணை என்னும் இசைக்கருவியை இயக்கும் கிணைவன் கூற்றாகக் கோவூர்கிழார் ஒரு பாடலை பாடியுள்ளார். கிணைவர்கள் விடியற்காலையில் அரசரைத் துயில் எழுப்பும் பணியை மேற்கொள்பவர்கள். சோழன் நலங்கிள்ளியிடம் பரிசில் பெற்ற கிணைவன் நலங்கிள்ளியின் பெருமையைக் கூறுவதாகக் கோவூர் கிழார் பாடியுள்ளார். விடியற்காலையில் நலங்கிள்ளியின் மனையின் முற்றத்தில் நின்று இசைத்த என்னுடைய கிணைப் பறையின் ஓசையைக் கேட்டவுடன் தாமதமின்றி என்னுடைய கிழிந்த ஆடையை நீக்கிப் புதிய ஆடையை அளித்தான். அவனுடைய மனைக்கு வந்து பல நாட்கள் ஆயினும் முதல்நாள் உபசரித்ததைப் போலவே எப்போதும் உபசரிப்பதில் வல்லவன். நலங்கிள்ளி தன்னை நாடி வந்த இரவலரின் பசியை மட்டும் போக்காமல், சுற்றத்தினரின் பசியையும் போக்கும் ஆற்றல் பெற்றவன். அத்தகைய சிறப்பு பெற்ற கிள்ளியின் நாட்டில் அந்தணர்களால் வேள்விகள் ஓயாமல் நடைபெற்றன என்பதை,

“மாகவிசும்பின் வெண் திங்கள்

மூ-ஐந்தான் முறைமுற்ற

கடல் நடுவண் கண்டன்ன என்

……………………………..

உறைவு இன்யாணர்………….கிழவோனே”[24]

என்ற பாடல் அடியின் மூலம் அறியலாம். இப்பாடலில் நலங்கிள்ளியின் இரவலரை ஆதரிக்கும் பண்பும் நாட்டுச் சிறப்பையும் கிணைவன் தன் சுற்றத்தார்க்குக் கூறுவதாகக் கோவூர்கிழார் பாடலைப் பதிவு செய்துள்ளார்.

## 1.4.3.5. பொருநர் கூற்று

பொருநர்கள் வெறும் கலைப் படைப்பை வெளிப்படுத்துபவர்களாக மட்டும் அல்லாமல் சில மன்னர்களுடன் நெருங்கிய உறவு கொண்டவர்களாகவும் விளங்கினர். இதனால் புலவர்கள் தம்முடைய கருத்தைப் பொருநர் கூற்றில் வைத்து மன்னனைப் புகழ்ந்தனர். அவ்வகையில் புறநானூற்றில் மூன்று புலவர்கள் மூன்று பாடல்களில் பொருநர் கூற்றுக்களை அமைத்துள்ளனர்.

ஓய்மநாட்டு நல்லியகோடனிடம் பரிசில் பெற்ற பொருநன், தன் சுற்றத்தாருக்கு அவன் பெருமையைக் கூறுவதாகப் புறத்திணை நன்னாகனார் பாடும் போது, ஓய்மான் நல்லியாதனின் மனையின் முற்றத்தில் நின்று பாடியளவில் என்னுடைய முன்பிருந்த நிலையயைப் பிறர் அறியாதவாறு கிழிந்த என் உடையைப் பார்த்து இவன் புதியவன் பரிசில் அளிக்கத்தக்கவன் என்று கூறிப் பாம்பு சீறினாற் போன்றுள்ள கள்ளோடு சூட்டிறைச்சியையும் தந்து பிறரிடம் சென்று இரங்கி நிற்காதவாறு பரிசில் நிறைய தந்தான் என்று புகழ்ந்து கூறியதை,

“பண்ட அறிவாரா உருவொடு என் அரைத்

தொன்றுபாடு துளையொடு பருஇழை போகி

நைந்து கரை பறைந்த என்உடையும் நோக்கி

விருந்தினன் அளியன், இவன் எனப் பெருந்தகை

……………………………………………

அன்றை ஞான்றினொடு இன்றின் ஊங்கும்

இரப்பச் சிந்தியேன்"[26]

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். மற்றொரு பாடலில் கிள்ளிவளவனின் நாட்டுச் சிறப்பைக் கூறி அத்தகைய நாட்டுப் பொருநராவோம் என்று மன்னனுக்கும் தனக்குமுள்ள உறவை வெளிப்படுத்திச் சுக்கிரன் எத்திசைக்குச் சென்றாலும் விண்மீன் எங்கு நின்றாலும் எனக்கு வேண்டனவற்றைக் குறிப்பால் உணர்ந்து கொண்டு பரிசில் நல்குபவன் கிள்ளிவளவன். அத்தகைய சிறப்புப் பெற்ற கிள்ளிவளவனின் தாள் வாழ்க என்று பொருநன் தன் சுற்றத்தினருக்குக் கூறுவதாகக் கோவூர்கிழார் பொருநன் கூற்றில் பாடலை அமைத்துள்ளார். மேலும், வறுமை தீர பரிசில் வேண்டி சோழிய ஏனாதி திருக்குடுவனைக் காணச் சென்ற போது பரிசிலாகப் பெரிய யானை அளித்தது கண்டு, அவனை பழிப்பது போல் புகழ்ந்து பொருநன் கூறுவதாகக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடலை அமைத்துள்ளார். இதே போல் புறநானூற்றில் கிணைப் பொருநன் கூற்றில் ஏழு புலவர்கள் எட்டுப் பாடல்களில் அமைத்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

### 1.4.4. தம்மைப் பாணனுடன் சேர்த்துக் கூறுதல்

கலைஞர்களும் புலவர்களும் கலையை வெளிப்படுத்துவதில் மாறுபட்டுக் காணப்பட்டாலும் மன்னனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் கேட்பதில் ஒரே நிலையில் காணப்படுகின்றனர். இக்காரணத்தினாலேயே பரிசில் பெறச்செல்லும் போதும் மன்னனைப் புகழும் போதும் கலைஞருடன் தம்மையும் இணைத்துக் கொண்டனர். அவ்வகையில் மூன்று புலவர்கள் ஐந்து பாடல்களில் கலைஞருடன் தம்மையும் இணைத்துக் கொண்டு பாடல்களை இயற்றியுள்ளனர். இவற்றுள் வன்பரணரே புறநானூற்றில் மூன்று பாடல்களை இயற்றியுள்ளார். கண்டீரக் கோப்பெருநள்ளியை வன்பரணர் புகழ்ந்து பாடும் போது, காலையில் மருதப்பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் பாடுவது இசைநூல் வரலாற்றுமுறை. நள்ளியே! நீ எம் பாணர் சுற்றத்தினருக்கு வறுமை தோன்றாதவாறு பரிசிலை அளித்ததால், அத்தகைய பண் முறையை மாற்றிப் பாடினர் என்று கூறியதை,

“மாலை மருதம் பண்ணிக் காலை

கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி

வரவு எமர் மறந்தனர் - அதுநீ

பரவுக் கடன் பூண்ட வண்மையானே”[27]

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். இதேபோல் வல்வில் ஓரி அளித்த பரிசிலால் தம்முடைய தொழிலாகிய பாடுவதை எம்முடைய கூத்தர் சுற்றத்தினர் மறந்தனர் என்று கூறியதுடன், நான் அவனைப் பாடுவேன், விறலி! நீயும் ஒன்று பாடுவாயாக என்று கலைஞருடன் தம்மையும் இணைத்துப் பாடியுள்ளதை அறிய முடிகின்றது. இவ்வாறே பதிற்றுப்பத்தில் குமட்டூர்க்கண்ணனாரும் காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரும் கலைஞருடன் தம்மையும் இணைத்துப் பாடியுள்ளனர்.

### 1.4.5. கலைஞர்களின் பண்பைக் கூறுதல்

புலவர்கள் கலைஞர்களின் வாழ்க்கையை நேரில் கண்டவராதலால் கலைஞர்களின் வறுமை, இருப்பிடம், கலைவெளிப்பாடு போன்றவற்றையும் தமது பாடல்களில் பதிவு செய்ததோடு கலைஞர்களின் பண்பினையும் பதிவு செய்துள்ளனர். கலைஞர்கள் மன்னருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். வெறும் பரிசில் பெறுதல் என்ற நிலையில் மட்டும் தொடர்பு கொள்ளாது அவரது நலனிலும் அக்கறை கொண்டவர்களாகக் கலைஞர்கள் விளங்கினார்கள். தன்னை ஆதரித்த மன்னர்கள் இறந்த போது தாமும் வருந்தினர். அத்தகைய செயலைப் புலவர்கள் பாடலில் பதிவு செய்தனர்.

தனக்குப் பரிசில் தந்து ஆதரித்த சாத்தன் என்னும் மன்னன் இறந்தான் என்னும் செய்தி கேட்ட பாணன் தன் யாழின் தண்டினால் கொடியை வளைத்து பூவைப் பறித்துச் சூடிக்கொள்ளவில்லை. பாடினியும் பூவைத் தன் தலையில் சூடிக்கொள்ளவில்லை என்பதை,

“நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்

பாணன் சூடான்; பாடினி அணியாள்;

ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த

வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை

முல்லையும் பூத்தியொ ல்லையூர் நாட்டே"[27]

என்ற பாடலின் மூலம் கலைஞர்களின் பண்பினைக் குடவாயிற் கீரத்தனார் வெளிப்படுத்தியுள்ளார். இதே போல் தன்னை ஆதரிப்போர் இறந்ததால் விறலியும் கையில் அணிகலன்களை அணியவில்லை என்ற செய்தியையும் புலவர்கள் தமது பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

## 1.4.6. தம்மைப் பாணனாகப் பாவித்தல்

அகத்திணையில் தலைவன், தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாகப் பாணர், விறலி ஆகியோர் செயல்பட்டது போல, புறத்திணையில் புலவர்கள் தம்மைப் பாணனாகப் பாவித்து மன்னனைக் காணச் சென்றனர். ஆனால், இப்பாணர்கள் பரிசில் பெறும் பாணர்கள் அல்லர். தூதாக மட்டும் செல்லும் பாணர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் கண்ணகியைப் பிரிந்து சென்ற வையாவிக் கோப்பெரும்பேகனை, கண்ணகியிடம் செல்லுமாறு புறநானூற்றில் பரணர் இரண்டு பாடல்களிலும் அரிசில் கிழார் ஒரு பாடலிலும் பெருங்குன்றூர்கிழார் ஒரு பாடலிலும் தங்களைப் பாணாகப் பாவித்து பரிசில் கேட்பதாகப் பாடலை அமைத்துள்ளனர்.

குளிரால் நடுங்கிய மயிலுக்குப் போர்வை கொடுத்தவனும் அழியாத நற்புகழையும் யானையையும் குதிரையும் உடைய பேகனே! நாங்கள் பசிக்காகவோ, சுற்றத்தைப் பாதுகாக்கும் பொருட்டோ பரிசில் கேட்டு வரவில்லை. களாப்பழம் போன்றுள்ள கரிய கோடுடைய சிறிய யாழை இசைக்க அதில் மகிழ்ந்து இன்று இரவே தேரில் ஏறிச் சென்று உன் பிரிவால் வாடும் மனைவியின் நோயைத் தீர்ப்பாயாக, இதுவே, நான் உன்னிடத்தில் கேட்கும் பரிசில் என்று பரணர் கூறியதை,

"மடத்தகை மாமயில் பனிக்கும் என்று அருளிப்

படாஅம் ஈத்த கெடாஅ நல்இசை

கடாஅ யானைக் கலிமான் பேக!

பசித்தும் வாரேம்; பாரமும் இலமே;

......................................

அறம் செய்தீமோ அருள் வெய்யோ் என
இ.்.து யாம் இரந்த பரிசில் அ.்.து இருளின்
இனமணி நெடுந்தோ் ஏறி
இன்னாது உறைவி அரும்படர் களைமே"[28]

என்ற புறநானூற்று அடிகள் மூலம் அறியலாம்.

அரிசில்கிழார் பேகனிடம் கூறும் போது, சிறிய யாழில் செவ்வழிப் பண்ணை வாசித்து, உனது மலைநாட்டை பாடுவோம். அதனைக் கேட்டு, நீ அணிகலன்களையும் செல்வத்தையும் தருவாயெனில் அது எனக்கு வேண்டாம். உன் பிரிவுத் துயரால் வருந்துகின்ற மனைவியைக் காணத் தேரில் இப்போதே செல்வாயாக. அதுவே, எனக்கு நீ அளிக்கும் பரிசிலாகும் என்று கூறியதன் மூலம் தன்னைப் பாணனாக எண்ணித் தூது சென்றதை அறிய முடிகின்றது. இதே போல், பெருங்குன்றூர் கிழாரும் பேகனைத் தன்னுடன் வருமாறு கூறுவதாகப் பாணன் கூற்றில் தன்னுடைய விருப்பத்தைப் பதிவு செய்துள்ளார்.

பண்டைக்காலத்தில் புலவர்கள் மன்னரைப் பாடிப் பரிசில் பெற்றதோடு, மன்னன் அவையிலும் பகை மன்னனிடம் மன்னனின் பெருமையைக் கூறுவதிலும் சிறப்பிடம் பெற்றிருந்தனர். மேலும் அகவாழ்விலும் புறவாழ்விலும் அரசன் தவறு செய்கின்ற போது, அவனை இடித்துரைத்து அறிவுரை வழங்குவதைத் தம்முடைய கடமையாகக் கொண்டிருந்தனர். அரசர்களும் புலவர்களின் அறிவுரை ஏற்று அதன் வழிச் செயல்பட்டனர். அவ்வகையில் கண்ணகியை விட்டுப் பிரிந்து சென்ற வையாவிக் கோப்பெரும்பேகனுக்கு அறிவுரை கூறி மீண்டும் இணையச் செய்ய பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர்கள் தம்மைப் பாணராகப் பாவித்துப் பேகனிடம் தூதுசெல்வதாகத் தம்முடைய பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

## 1.4.7. பாணர் குடியில் பிறந்த புலவர்கள்

சங்க இலக்கியமானது 473 புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். சங்க இலக்கியப் புலவருள் சிலர் பாணர் மரபில் வந்தவர்களாவர். இவர்களை இனங்காணுவதில் சிக்கல் ஏற்படுகிறது. ஏனெனில் பல்வேறு புலவர்கள் தம்முடைய பாடல்களில் இசைக்கருவிகளைப் பற்றியும் கலைஞர்களைப் பற்றியும் தம்மைப் பாணராகவும் விறலியாகவும் பாவித்துக்

கொண்டு பாடியுள்ளனர். சங்க காலத்தில் புலவர்கள் தம்மைப் பாணராகவும் விறலியாகவும் பாவித்துப் பாடுவதே மரபாகவே இருந்து வந்துள்ளது. இந்நிலையில் இவரிவர் பாணர் குடியைச் சேர்ந்தவர் என்று வரையறுத்தல் இயலாது. பல்வேறு பிரிவினரும் பாடல்களை இயற்றியுள்ள காலத்தில் பாணர் வழி வந்தவரும் பாடல்களைப் புனைந்திருக்கக்கூடும். அவ்வகையில் ஔவையார் காக்கைப்பாடினி நச்செள்ளையார், நெடும்பல்லியத்தனார், பரணர் போன்றோரும் கூத்தர் என்ற அடைமொழியைத் தம் இயற்பெயருடன் கொண்ட புலவர்களும் காணப்படுகின்றனர். இவர்களின் பாடல்களின் மூலமும் பெயர்களின் மூலமும் பாணர் குடியின் வழி வந்தவர்களாக இருக்கக்கூடும் என்று எண்ணத் தோன்றுகின்றது.

### 1.4.7.1. ஔவையார்

“சங்ககாலப் பாணர் குடியினர் இசையோடு தொடர்புடைய ஆடல், பாடல் போன்றவற்றில் தேர்ச்சி பெற்றிருந்தனர். சில பாணர் குடியினர் இசைக்கலையில் மட்டுமின்றி இலக்கியக் கலையிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். அத்தகைய சிறப்புக்குரிய பாணர் குடியினருள் தோன்றியவருள் ஔவையாரும் ஒருவர். அவ்வை என்ற சொல்லானது வயதில் மூத்தவர், தாய், தமக்கை, பெண் துறவி போன்றோரைக் குறிக்கும் சொல்லாக விளங்கியது. ஔவையார் என்ற பெயரைக் கொண்ட ஆறு புலவர்கள் இலக்கியத்தில் பல்வேறு காலகட்டத்திற்குரியவராகக் காணப்படுவதாகத் தாயம்மாள் அறவாணன் குறிப்பிடுகின்றார்”[29].

சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் ஔவையார் ஏறக்குறைய கி.பி.2-ஆம் நூற்றாண்டு காலத்தினராவார். இவர் பாடியனவாக 59 பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இவற்றுள் 26 பாடல்கள் அகப்பாடல்களாகவும் 33 புறப்பாடல்களாகவும் காணப்படுகின்றன. இவரது பிறப்பு குறித்து பல்வேறு கதைகள் நிலவுகின்றன. அவற்றுள் கபிலர் அகவல் என்னும் நூல், பகவன் என்ற முனிவனுக்கும் ஆதி என்ற புலைச்சிக்கும் பிறந்த ஏழு குழந்தைகளுள் அவ்வையாரும் ஒருவர் என்று கூறுவதை,

“அருந்தவ மாமுனி யாம்பக வற்குக்
கருவூர்ப் பெரும்பதிக் கட்பெரும் புலைச்சி
ஆதி வயிற்றினில் அன்றவ தரித்த

கான்முனையாகிய கபிலனும் யானே
என்னுடன் பிறந்தவர் எத்தனை பேர் எனில்
ஆண்பால் மூவர், பெண் பால் நால்வர்
……………………………………………
நரம்புக் கருவியோர் நண்ணிடு சேரியில்
பாணர் அகத்தினில் ஔவை வளர்ந்தனள்”[30]

என்று கபிலர் அகவல் என்னும் நூல் அவ்வையாரின் பிறப்பு குறித்துக் கூறுகிறது. சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் ஔவையார் பாடிய 59 பாடல்களில் ஒன்பது பாடல்களில் அவர் பாண் குடியினர் என்பதை நிறுவியுள்ளார். குறுந்தொகையில் தலைவனின் பிரிவால் வாடிய தலைவியின் காமநோயின் உண்மையை அறிந்து கொள்ள கட்டுப் பார்ப்பது வழக்கம். கட்டு விச்சி வீட்டின் முற்றத்தில் நெல்லையிட்டு அதனை எண்ணி, அதனால் உண்டாகும் நிமித்தங்களை அறிந்து கூறுவாள். அத்தகைய கட்டுவிச்சியாகிய அகவன் மகளை அழைத்து, தலைவனின் நீண்ட குன்றத்தனைப் புகழ்ந்து பாடிய பாட்டை மீண்டும் பாடுக என்று வேண்டுவதால் இங்கு சுட்டப்படும் அகவன் மகள் என்பவள் பாணர் குடியினருள் ஒருத்தியாவார்.

“அகவன்மகளே! அகவன் மகளே!
மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங்கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே
இன்னும் பாடுக, பாட்டே அவர்
நல்நெடுங்குன்றம் பாடிய பாட்டே”[31]

என்ற குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.

புறத்திணையிலும் ஔவையார் பாணர் குடியில் பிறந்தவர் என்று நிறுவ பல பாடல்கள் காணப்படுகின்றன. இவரது பாடல்கள் அனைத்தும் அதியமான் என்ற அரசனுடன் தொடர்புடையதாக இருப்பதால் அதியமானுடன் நெருங்கிய தொடர்புடையவராக இருந்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. இவரது பாடல்களில் விறலியின் உறுப்பு வருணிக்கப்பட்டுள்ளது. அணியால்

பொலிவு பெற்ற அல்குலினையும் மடப்பத்தினையும் மைதீட்டியக் கண்ணினையும் ஒளியுடைய நெற்றியையும் உடைய விறலியே! உன்னுடைய நாட்டில் என்னுடன் போர் செய்ய வீரர்கள் உள்ளனரா எனக் கேட்ட பகை மன்னனுக்கு விறலி பதில் கூறுவதாகப் பாடலை அமைத்துள்ளார். இதே போல் கிணைப் பொருநன் கூற்றில் அதியமான் நெடுமான் அஞ்சியையும் அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியையும் புகழ்ந்து பாடியுள்ளார். அதியமானிடம் பரிசில் பெற்று மீண்டு வரும் வழியில் எதிரே வந்த விறலியை ஆற்றுப்படுத்தும் போது,

''ஒருதலைப் பதலை துங்க, ஒருதலைத்
தும்ப அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கிக்
'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார்?' எனச்
சுரன் முதல் இருந்த சில்வளை விறலி!
செல்வை ஆயின், சேணோன் அல்லன்
புரத்தல் வல்லன், வாழ்க, அவன்தானே!''[32]

என்று பதலை, தூம்பு, முழவு போன்றவற்றைத் தோளில் சுமந்து கொண்டு வந்த விறலியிடம் அதியமான் நெடுமான் அஞ்சியின் கொடையைப் புகழ்ந்து அவனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பாடலை அமைத்துள்ளார். மேலும் அதியமானிடம், யாம் அரிசி வேண்டி நின்றோம். ஆனால் என்னுடைய வறுமையைப் பார்த்த அளவில் பெரிய யானையைப் பரிசாக அளித்தான் என்று விறலி கூற்றாக அதியமான் அளித்த பரிசிலைப் பாடியுள்ளார். அதே போல் அதியமான் நெடுமான் அஞ்சியின் மார்பில் தைத்த வேலானது பெரிய பாணரின் அகன்ற கலத்தில் துளை செய்து பரிசிலரின் கையைத் துளைத்தது என்று கையறுநிலையில் பாடியதை,

''அருந்தலை இரும்பாணர் அகல் மண்டைத் துளை உரீஇ
இரப்போர் கையுளும் போகி
புரப்போர் புன்கண் பாவை சோர
அம்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று அவன்
அருநிறத்து இயங்கிய வேலே!''[33]

என்ற பாடலின் மூலம் அறியலாம். இவ்வாறு மன்னனைப் புகழ்வதற்காகவும் பரிசில் பெற்ற பொருட்களைக் குறிப்பதற்காகவும் பாடிய பாடல் விறலி, பாணர், பொருநர் கூற்றுக்களில் அமைத்துள்ளார். மேலும் இவரது பாடல்களில் பறை, தண்ணுமை, யாழ், முரசு, பதலை, முழவு, தடாரி, கிணை முதலிய இசைக்கருவிகளைப் பற்றி ஏழு பாடல்களில் பதிவு செய்துள்ளார். இத்தகைய குறிப்புகளிலிருந்து ஔவையார் பாணர் குடியில் பிறந்தவர் என்பதை அறியலாம். இதை வலுசேர்க்கும் விதமாக ஔவை சு.துரைசாமிப் பிள்ளை அவர்களும் “காக்கைப் பாடினியான நச்செள்ளையாரும் ஔவையாரும் பாண்மகளிருள் நல்லிசைப் புலமைப் பெற்ற மெல்லியற் சான்றோராவர். அவர்கள் முறையே ஆடுகோட்பாட்டுச் சேரலாதனாலும் அதியமான் நெடுமான் அஞ்சியாலும் சிறப்பிக்கப் பெற்ற திறத்தைப் பதிற்றுப்பத்தும் புறநானூறும் தெரிவிக்கின்றன”[34] என்று கூறுவதன் மூலம் அறிய முடிகின்றது. ஆனால், உ.வே.சா. இதனை மறுத்துப் புலவர்கள் கலைஞர் கூற்றில் பாடுவதைக் கொண்டு ‘ஆராய்வோர் அதனைக் கொண்டு, விறலி முதலியவர்களாக நினைத்து விரைந்து முடிவு செய்து விடுதல் மரபன்று, அங்ஙனம் பாடுதல் கவிமதமெனக் கொள்ளுதல் முறை’ என்று கூறுகிறார்.

### 1.4.7.2. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்

பாணர் குடியில் பிறந்த பெண்பாற் புலவருள் ஒருவர் காக்கைப் பாடினி நச்செள்ளையார். இவரது இயற்பெயர் நச்செள்ளையார் விருந்துவரக் காக்கையைப் பாராட்டிப் பாடியதால் காக்கைப் பாடினி நச்செள்ளையார் என்றழைக்கப்பட்டார். இதனை மறுத்துக் காக்கையூரில் பிறந்த பாடினி என்பதால் காக்கையூர் பாடினி என்றழைக்கப்பட்டார். இப்பெயரே காலமாற்றத்தில் காக்கைப் பாடினியார் என்று அழைக்கப்படுகின்றது என்று இரு கருத்துக்கள் இவரது பெயருக்கு வழங்கி வருகின்றது. இவர் பாடிய பாடல்களாகக் குறுந்தொகையில் ஒரு பாடலும் பதிற்றுப்பத்தில் 10 பாடல்களும் புறநானூற்றில் ஒரு பாடலும் என மொத்தம் 12 பாடல்கள் காணப்படுகின்றன.

காக்கைப்பாடினி பாடிய பதிற்றுப்பத்திலுள்ள 10 பாடல்களில் விறலியைப் பற்றி ஆறு பாடல்களிலும் பாணரைப் பற்றி இரண்டு பாடல்களிலும் கூத்தரைப் பற்றி ஒரு பாடலும் இவர் பாணர் குடியில் பிறந்தவர் என்பதற்கான குறிப்புகள் காணப்படுகின்றன. இவரது பாடல்களில் கலைஞர்களின் உடல் வருணனை, மன்னனை வாழ்த்துதல், கலைஞர்களின் கலைத்திறன் போன்றவை

வெளிப்படுகின்றன. ஒளி பொருந்திய நெற்றியினையும் மடப்பம் பொருந்திய பார்வையையும் ஒளிமிக்கப் பற்களையும் அமுதம் போன்ற சொற்களைச் சொல்லும் சிவந்த வாயினையும் தளர்ந்த நடையினைக் கொண்டவர் விறலியர் என்று குறிப்பிடுகின்றார். மேலும், இத்தகைய சிறப்புடைய விறலியர், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் புகழ்ந்து பாடினால் பகைவரிடமிருந்து கைபற்றப்பட்ட பொருளைத் தனக்கொன்று வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் பரிசிலாகத் தரும் இயல்புடையவன். அத்தகையவனைக் காணச் செல்வோமா என்று பரிசில் பெற்ற விறலி பரிசில் பெறாத விறலியை ஆற்றுப்படுத்திப் பரிசில் பெற அழைப்பதாகப் பாடலை அமைத்துள்ளார்.

பாணரைப் பற்றிக் குறிப்பிடும் போது பாணர் பேரியாழில் பாலைப் பண்ணை அமைத்து தழிஞ்சிப் பாடலைப் பாடினர் என்று இசைக்கலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இதே போல் மன்னனை வாழ்த்தும் போது கூத்தரின் தொழிலையும் குறிப்பிட்டுள்ளார். போர்க்களத்தில் பகைவனைவென்று வாளை உயர்த்தி ஆடும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், விழாக்கள் நிறைந்த ஊரில் நடைபெறும் கூத்தரது முழவின் முன்னர் ஆடுவதில் வல்லவன் அல்லன் என்று அரசனைப் பழிப்பது போல் போர்க்கள வெற்றியைப் புகழ்ந்து பாடியதை,

''விழவு வீற்றிருந்த வியலுள் ஆங்கண்

கோடியர் முழவின் முன்னர், ஆடல்

வல்லான் அல்லன்; வாழ்க, அவன் கண்ணி!

வலம்படு முரசம் துவைப்ப, வாள் உயர்த்து''[35]

என்ற பாடலின் மூலம் அறியலாம். மேலும், ஆடுவதில் தேர்ச்சி பெற்றவர் விறலியர் என்றும் அரசனிடம் பரிசில் பெறுவதற்காகப் பாடும் இயல்புடையவர் பாணர் என்பதால் ''ஆடுக விறலியர்! பாடுக பரிசிலர்!''[36] என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு தான் பாடிய 12 பாடல்களில் எட்டுப் பாடல்களில் தான் பாணர் குலத்தில் தோன்றியவர் என்பதை வெளிக்காட்டும் விதமாகக் கலைஞர்கள் பற்றிய குறிப்பைப் பாடல்களில் பதிவு செய்துள்ளார்.

### 1.4.7.3. நெடும் பல்லியத்தனார்

பல்லியம் என்பது பலவித இசைக்கருவி என்று பொருள் தரும். நெடும் பல்லியத்தனார் என்பது பல வாத்தியங்களை இசைக்கத் தெரிந்தவர் என்ற தொழிற்பெயரைக் குறிக்கின்றது. இவருடைய பெயருக்கு ஏற்றாற் போல பல இசைக்கருவிகளின் பெயர்கள் இவரது பாடலில் இடம் பெற்றுள்ளன. இவர் பாடிய பாடல்களாகப் புறநானூற்றில் ஒரு பாடலும் குறுந்தொகையில் ஒரு பாடலும் என இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. புறநானூற்றில் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம் பரிசில் பெற்ற விறலி, பரிசில் பெறாத விறலியிடம் மன்னனின் புகழைக் கூறிப் பரிசில் பெற ஆற்றுப்படுத்தி அழைப்பதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. கலைஞர்கள் தம்முடைய வறுமை தீர மன்னர்களைக் காணச்செல்லும் போது பல்வேறு இசைக்கருவிகளைப் பையில் கட்டிச் சுமந்து செல்வது வழக்கம். அவ்வகையில் யானைப்படை போரிட்ட அகன்ற இடமாகிய போர்க்களத்தில் பகைவருடன் போர் செய்து அவர்களின் நாட்டிலுள்ள பெருஞ்செல்வத்தைக் கைப்பற்றியுள்ளான் முதுகுடுமி பெருவழுதி. ஆதலால் கையில் சில வளையல்களை அணிந்த விறலியே, அம்மன்னனைப் பாட நல்ல யாழினையும் சிறுபறையையும் பதலை என்னும் பறையையும் பையிலிட்டு எடுத்துச் செல்வோமா என்று பரிசில் பெற்ற விறலி அழைப்பதை,

“நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கி

செல்லா மோதில் சில்வளை விறலி!”[37]

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம். கலைஞர்கள் பரிசில் பெறச் செல்லும் போது இசைக்கருவிகளைப் பையிலிட்டுச் சுமந்து செல்வர் என்று கலைஞர்களின் செயலைத் தவிரப் பிற செய்திகள் இவரது பாடலில் பதிவு செய்யப்படவில்லை. மேலும் நெடும்பல்லியத்தை என்னும் புலவரும் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளார். இவர் நெடும்பல்லியருடன் பணியாற்றி அல்லது இசைக்கருவிகளை இசைக்கக்கூடிய பெண்பாற் புலவராக இருந்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. இவர் பாடிய பாடலாகக் குறுந்தொகையில் (178) ஒரு பாடல் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பாணர் குடியில் பிறந்து தம்முடைய வறுமை தீர மன்னனை நாடி ஆடிப்பாடி பரிசில் பெற்றதோடல்லாமல் இலக்கியத்தில் கவிதை புனையும் ஆற்றல் பெற்றவர்களாக ஔவையார், காக்கைப் பாடினி நச்செள்ளையார், நெடுமபல்லியத்தனார் போன்றோர் திகழ்கின்றனர். கலைஞர்களைத் தம்முடைய பாடல்களில் பதிவு செய்வது புலவர்களின் மரபெனினும் இவர்களது பெயர்களும் பாடல் குறிப்புகளும் பாணர் குடியில் பிறந்தவர்கள் என்பதை அறியத் துணை புரிகின்றன.

## 1.4.8. கூத்தர் எனப் பெயர் கொண்ட புலவர்கள்

சங்க இலக்கியத்தில் காணப்படும் புலவர்களின் பெயர்களைக் காணும் போது இயற்பெயரோடு அடைமொழிப் பெயரையும் சேர்த்து அழைப்பதை மரபாகக் கொண்டிருந்தனர். ஊர்ப்பெயர், உறுப்புப் பெயர், தொழிற்பெயர், ஊர், உறுப்பு, தொழில் இணைந்த பெயர், சிறப்புப்பெயர், அடைமொழிப் பெயர் போன்றவற்றை இயற்பெயரோடு சேர்த்து அடைமொழியாகப் பயன்படுத்தினர். அவ்வகையில் இயற்கலையில் சிறந்து விளங்கியதோடு கூத்திலும் சில புலவர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர். அப்புலவர்கள் தமது பெயரோடு தொழிலாகக் கூத்தையும் சேர்த்துக் கொண்டனர். சங்க இலக்கியத்தில் கூத்தைத் தமது தொழிலாகக் கொண்ட புலவர்களாக எட்டுப் பேர் காணப்படுகின்றனர். இவற்றுள் மதுரைத் தமிழக் கூத்தனார் பாடிய ஒரு பாடலில் மட்டுமே பாணர் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அதில் சீறூர் மன்னனின் மனைவி, பாணர்க்கும் பரிசிலர்க்கும் உணவு அளிப்பதற்காக ஓயாமல் ஊன் உணவு சமைத்துக் கொண்டேயிருப்பாள் (புறம்.334 : 6-8) என்ற குறிப்பை வெளிப்படுத்தியுள்ளார். இவரைத் தவிர மற்றுள்ள ஏழு புலவர்கள் பாடிய 15 பாடல்களில் கலைஞர் சுற்றத்தினர் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

புறப்பாடல்களில் கலைஞர், புலவர் உறவு நிலையானது புலவன் தன் பாடுபொருளின் கருத்திற்கு உதவியாகக் கலைஞர்களையும் அவர்களின் கலைத்திறனையும் வாழ்வையும் கொண்டுள்ளான். ஆனால், அகப்பாடல்களில் அகத்திணை மாந்தர்களான தலைவன், தலைவி ஆகியோரிடம் தூது செல்லும் ஓர் ஊடாக வாயிலாகக் கலைஞர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளனர். இவ்விரு நிலைகளையும் நோக்கும் போது புலவர்களுக்குத் தன் பாடலை வெளிப்படுத்தப்

பயன்படும் ஓர் உத்தியாகவே கலைஞர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

## 1.5. புலமைத் தொழில்

புலமைத் தொழில் என்பது மக்களையும் மன்னனையும் நல்வழிப்படுத்துதலே புலமைத் தொழிலாகும். புலமைத் தொழிலைச் செய்யக்கூடிய புலவர்கள் அறிவினைப் பயன்படுத்தி நாட்டை முன்னேற்ற மக்களுக்கும் மன்னனுக்கும் அவ்வப்போது ஆலோசனை வழங்கி வந்தனர்.

''அறிவும் முயற்சியும் உடையார் தம்மில் ஒருங்கு கூடித் தமது அறிவின் திறத்தையும் செயல் திறத்தையும் தம்முள் ஒருவருக்கொருவர் தெரிவித்து, எல்லா மக்களையும் அறிவிலும் முயற்சியிலும் முன்னேற்றுதற்குரிய அறிவுரைகளை வழங்கி நல்வழிப்படுத்துதலே புலவர்களின் தொழிலாகும்''[38].

மேலும்,

''கற்றற்குரிய நூல்களைப் பழுதறக் கற்றுக் கற்ற அம்முறையிலே நல்வழிக்கண் ஒழுகி உறுதியுடைய நற்பொருள்களைப் பிறர்க்கு அறிவுறுத்தி வாழ்க்கையைத் திருத்தமுடைய தாக்குதல் பழந்தமிழ்ப் புலவர்களின் தொழிலாய் அமைந்தது''[39].

எனவே அறிவும் மெய்ஞ்ஞானமும் படைத்த புலவர்கள், மக்களையும் மன்னனையும் நல்வழிப்படுத்த ஆலோசனைகளையும் அறிவுரைகளையும் வழங்கி செம்மைப்படுத்துவது புலவர்களின் தொழிலாகும்.

## 1.6. புலவர்களின் கடமை

புலவர்களின் கடமை மொழியினைப் போற்றுவதும் காப்பாற்றுவதும் ஆகும். எனவே, ''புலமைக்குக் கருவியாய் விளங்குவது மொழி. நிலத்தின் வளத்தின் அதன்கண் தோன்றிய நென்முளை காட்டுவதுபோல, மக்களது அறிவினைப் புலப்படுத்துவது அவர்களாற் பேசப்படும் தாய் மொழியாகும். எனவே, புலமைக்கு அடையாளமாய் விளங்கும் அம்மொழியினைக் கெடாது போற்றுதல் புலவர்களின் கடமையாயிற்று''[40].

சங்கச் சமூகம் புலவர்களின் முயற்சியில் வேறுதிசை நோக்கியிருக்கின்றது. பொருள் தேடுதல், போர் வினை மேற்கொள்ளல் போன்ற புறச் செயல்களில் அழுந்திக் கிடந்த மனித உலகைக் குடும்பக் களம் நோக்கித் திருப்புவதோடு பாடல்கள் அமையவில்லை. நாடி வருபவர் பலர்க்கும் பொருளைப் பகுத்து வழங்குக, வேள்விகளை இயற்றுக, தேறல் உண்டு மகிழ்ந்தினது வாழ்க என வேறு வேறு வினைகளின் மருங்காக உள்ளத்தைச் செலுத்தினர் புலவர்.

“மனிதனின் உள்ளம் பண்படுவதற்கு இவை தேவை எனக் கருதிற்று புலமைச் சமூகம். போர் என்பது மாறுபாடுகளும், ஆளுமை முரண்களும் புகழ்ச்செருக்கும் இடம் பெற்ற நிலையில் தோன்றுவது”[41].

மேலும்,

“சங்க இலக்கியத்தில் ஒரு மட்டத்திலும் தொல்காப்பியத்திலும் பாட்டு என்பது புலமை நிலைப்பட்ட ஒரு முயற்சியாகவே கொள்ளப்படுவதாகும். புலம் என்பது அறிவையும் குறிக்கும். அறிவின் செய்கையாக ஆக்கத்தைக் கொள்ளும் நோக்கின் உளவியல் பின்புலத்தை நாம் உணர்ந்து கொள்ளுதல் அவசியம். செய்யுள் புலமையின் வெளிப்பாடாகக் கொள்ளப்படுகிறது. ஆனால் பாடல் என்பது தமிழ்ப் பாரம்பரியத்தில் பாணனோடு தொடர்புடைய ஒன்றே. சங்க இலக்கியத்தினூடே பாணர் ஒதுக்கப்பட்டுப் புலவர் மேலோங்குவதை நன்கு காணலாம். (புறம்.12, மதுரைக்காஞ்சி 215-237) தொல்காப்பியத்தில் செய்யுளாக்கம் புலனெறியாகவே கொள்ளப்படுகிறது.(பொருள்.1:56) பாடல் சான்ற புலனெறி வழக்கம். பாடல், புலனெறியின் பாற்பட்டு விட்டது. அது புலவருக்கு உரியதாக்கப்பட்டு விட்டது.

தொல்காப்பியம் இந்த நிலையிலேயே தோன்றுகின்றது என்பது மிக முக்கியமான ஒரு விமர்சன உண்மையாகும். பாணர் மரபிலிருந்து விடுபட்டுப் பாடல் என்பது பிரக்ஞை பூர்வமான ஒரு புலமைத் தொழிற்பாடாகக் கருதப்படும் நிலையிலேயே தொல்காப்பியம் தோன்றியுள்ளது”[42].

பாணர்களின் படைப்பாக இருந்த பாடல் புலவர்களின் புலமைப் படைப்பாக்கமாக மாற்றம் பெற்ற நிலையைச் சிவத்தம்பி அவர்கள் எடுத்துக்காட்டுவதிலிருந்து நாம் ஒன்றைப் புரிந்து கொள்ள முடியும்.

பாணர்களின் பாட்டு புலவனுக்குத் தொழிலாகி விட்டது. அவன் படைப்பதே பாடலாக மதிப்பிடப்படுகிறது. அப்படியானால் பாணர்களின் பாட்டு எங்கே? அவர்களின் இலக்கியத்திற்கு என்ன பெயர்? இந்தக் கேள்விகள் இங்கே தவிர்க்க முடியாதன.

## 1.7. பாணர்கள் தமிழ்ச் சமூகத்தின் தொல்குடியினர்

தமிழ்ச்சமூகத்தில் தொன்மையான குடியைச் சேர்ந்தவர்கள் பாணர்கள். இவர்கள் பண்ணை இசைத்துப் பாடக்கூடியவர்கள். எனவே,

"துடியன், பாணன், பறையன், கடம்ப னென்று
இந்நான் கல்லது குடியு மில்லை"[43]

என்ற மாங்குடி கிழாரின் புறநானூற்று வரிகள் பாணர் குடியின் சிறப்பினைப் பேசும். பாணன் என்ற குடிப்பெயர் பண் என்ற இசையோடு தொடர்புடையது. இவர்கள் பண்ணமைய யாழ் இசைத்துப் பாடும் இயல்பினர். எப்பொழுதும் குழுவாக இயங்குபவர்கள். அது ஒரு கலைக்குழு. அக்குழுவில் பாணன், பாடினி, விறலி, கூத்தர் முதலானவர்கள் இடம்பெறுவர்.

சங்க இலக்கியங்களில் இடம்பெறும் பாணர் பற்றிய வருணனைகள் பெரிதும் பசி மற்றும் வறுமை சார்ந்த நிலையிலேயே அமைந்திருக்கும். மெலிந்த தேகத்தோடும் பசித்த வயிறோடும் வியர்வையால் நனைந்து நைந்த உடையோடும் எப்பொழுதும் இரவலர்களாயப் புரவலர்களைத் தேடிக் குடும்பம் குடும்பமாக அலைந்து திரியும் காட்சிகளே சங்க இலக்கியத்தில் பாணர்களைக் குறித்துப் பெரிதும் பதிவாகியுள்ளன.

"கையது கடனிறை யாழே மெய்யது
புரவல ரின்மையிற் பசியே யரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ஓம்பி யுடுத்த வுயவற் பாண
பூட்கை யில்லோன் யாக்கை போலப்
பெரும்புல் லென்ற விரும்பே ரொக்கலை"[44]

மேலே காட்டப்பட்டுள்ள ஆலத்தூர் கிழாரின் பாணாற்றுப்படைப் பாடல் பாணர் குறித்த சித்தரிப்புக்கான ஒரு சான்று.

"சங்க இலக்கியங்கள் இலக்கியப் படைப்பாளிகளாகப் பாணர்களையும் புலவர்களையுமே முன்னிறுத்துகின்றன. பொதுவாகப் பாணர்கள் இசைக் கருவிகளின் துணையோடு பாடலும் ஆடலும் நிகழ்த்தும் நிகழ்த்துகலை வல்ல கலைஞர்களாகவும் புலவர்கள் அறிவுப்புலம் சார்ந்தவர்களாக, கற்றறிந்தவர்கள் என்னும் சமூக அந்தஸ்தோடு அரசு அதிகாரங்களைச் சார்ந்து வாழ்பவராகவும் இருந்துள்ளான். சங்க இலக்கியங்களில் பாணர்கள் 130 இடங்களிலும் புலவர்கள் 43 இடங்களிலும் சுட்டப்படுவதாக பெ.மாதையன் ஒரு புள்ளிவிவரம் தருகின்றார்"[45].

மேலும், இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமாய் இருந்த பாணர்குடி வறுமை நிலைக்கு ஆட்பட்டுப்போய் உணவைத் தேடிச் சுற்றத்துடன் அலைந்த சமுதாய மாற்றத்தின் அடையாளங்களைப் பாணர்கள் குறித்த சங்க இலக்கியப் பதிவுகளில் காண முடிவதாக அவர் குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியத் தொகுப்புகளில் பாணர் படைப்பாக எந்தப் பாடலையும் தனித்து அடையாளம் காட்ட இயலவில்லை. சங்க இலக்கியத் தொகுப்புப் பணிகள் முழுவதும் அரசர்களின் ஆதரவில் புலவர்களால் நிகழ்த்தப்பட்டன என்பதனால் பாணர்களின் படைப்புகள் தொகுப்புகளில் இடம்பெற வாய்ப்பில்லாமல் போயிருக்கும். மேலும், சங்க இலக்கியப் படைப்பாளிகளில் பாணர்கள் யார்? புலவர்கள் யார்? என்று அடையாளம் காண்பதிலேயும் இடர்ப்பாடுகள் உள்ளன. சங்க இலக்கியங்கள் பாணர் மரபை உள்வாங்கிச் செரித்து விட்டு மேலெழுந்த புலவர் மரபின் ஆக்கங்களாகவே நமக்குத் தெரிகின்றன. சங்க இலக்கியம் தரும் தகவல்களிலிருந்து புலவர், பாணர் இடையிலான வேறுபாடுகளை இனம் காணும் அம்மன்கிளி முருகாஸ் அவர்களின் கருத்துக்கள் இங்கே நினைவுகூரத்தக்கன.

"பாணர் பெரும்பாலும் குறுநிலக் கிழார்களுடன் சேர்த்துப் பேசப்பட்டது போலப் புலவர் பெரும்பாலும் வேந்தருடன் சேர்த்துப் பேசப்பட்டனர். வேந்தர் புலவரால் பாடப்படுவதைத் தமது வாழ்வின் சிறப்பாகக் கொண்டனர். பாணருக்கும் புலவருக்கும் பரிசளிக்கும் முறையில் வேறுபாடு காணப்படுவதை

அவதானிக்க முடிகிறது. புலவர் பாணரைப் போல் கூட்டாகச் சுற்றத்தவருடன் சென்றமை கூறப்படவில்லை”[46].

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறும் பின்வரும் பாடல் பகுதியை நோக்குவார்க்குச் சங்க இலக்கியங்கள் எவ்வாறு புலவர்களைக் கொண்டாடும் மனநிலையை உருவாக்கி வைத்துள்ளன என்பது எளிதில் விளங்கும்.

“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக என்நிலவரை”[47]

உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின் புலவர் என்ற அடைமொழிகளுக்குப் பின்னால் உள்ள புலமை குறித்த அரசியல் இங்கே கவனத்தில் கொள்ளத்தக்கது. தொல்காப்பியர் குறிப்பிடும் ‘பாடல் சான்ற புலனெறி வழக்கம்’ என்பதும் ‘புலன் நன்குணர்ந்த புலமை யோரே’[48] என்பதும் இந்தப் புலமை அரசியலின் வெளிப்பாட்டோடு தொடர்புடையன. இந்தப் புலமை அரசியலின் விளைவாகப் பாணர் இலக்கியத்திற்கு ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்பும் இடைக்கால ஏற்பாடுதான் பண்ணத்தி.

சங்ககாலத்தில் மேலெழுந்த உடைமைச் சமூகமும் அதனைக் கட்டிக் காப்பாற்ற முனைப்போடு செயல்பட்ட அரசர், புலவர் உள்ளிட்ட அரசு அதிகார வட்டமும் இனக்குழச் சமுதாயத்தின் மிச்சசொச்சமான பாணர்களின் வாய்மொழி சார்ந்த இசைப் பாடல்களைப் புறந்தள்ளிவிட்டுப் புலமை சார்ந்த புலவர்களின் ஆக்கங்களை மட்டுமே பாட்டு எனக் கொண்டாடத் தொடங்கியதன் விளைவாகப் பாணர்கள் செல்வாக்கிழந்தனர். சங்க இலக்கியம் காட்டும் பாணர்களின் வறுமைக் கோலத்திற்கான பின்னணி இதுதான். தமது காலத்து இலக்கியங்கள் முழுவதையும் தமது பாவியல் நூலுக்குள் கொண்டுவரும் முயற்சியில் தொல்காப்பியர், புலவர் பாட்டால் செல்வாக்கிழந்த பாணர் பாட்டையும் பண்ணத்தி என்ற பெயரால் இலக்கிய வட்டத்திற்குள் கொண்டு வருகிறார்.

இனக்குழுச் சமூகத்தில் பாணர்களே பாடுவோர், அவர்கள் பாடுவதே பாட்டு. பாட்டு என்பது ஓசையோடும் இசையொடும் தொடர்புடையது. பாடுவோரின் எழுத்தறிவு பற்றிய பேச்சுக்கு இங்கே இடமில்லை. தொல்காப்பியச் செய்யுளியல் என்பது இலக்கிய உருவாக்கம் என்பதனை ஒரு புலமைத் தொழிற்பாடாகக் கட்டமைக்கிறது. தொல்காப்பியர் காலத்தில் பாட்டு என்பது புலமைத் தொழிலாகிவிட்டது. அது புலவர்களின் படைப்பாகி விட்டது. புலவர்கள் படைப்பதே பாட்டு என்றாகிவிட்ட பிறகு, வாய்மொழி மரபில் தோன்றிப் பாணர்களின் வழியாகப் பாடப்படும் இசைப்பாடல்களுக்கு உரிய இடத்தை வழங்கும் முயற்சிதான் பண்ணத்தி என்ற இலக்கியம். பாணர் இலக்கியத்தைப் பாட்டு அன்று என்று தவிர்த்து விட இயலாது என்பதனால் தான் தொல்காப்பியர்,

“பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத் தியயே”[49]

என்று பண்ணத்தியை வரையறுக்கின்றார். தொல்காப்பியர் கூற்றுப்படி உண்மையில் பண்ணத்தி உள்ளடக்கத்திலும் வடிவம் மற்றும் உருவாக்கத்திலும் பாட்டை ஒத்திருக்கும். ஆனால் அது பாட்டன்று. ஏன் பண்ணத்தியைப் பாட்டாக ஏற்றுக் கொள்ளவில்லை? என்பதற்குப் பேராசிரியர் தரும் விளக்கம் நாம் கவனத்தில் கொள்ளத்தக்கது. நோக்கு முதலாயின உறுப்பு இன்மையின் என்பது. அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

நோக்கு முதலான உறுப்புகள் இல்லாததால் பண்ணத்தி பாட்டாகாது என்பது பேராசிரியரின் துணிபு. நோக்கு முதலான உறுப்புகள் என்று அவர் கருதுவன புலமைத் தொழில் நுட்பத்தோடு கூடிய செய்யுளாக்க உத்திகளை வாய்மொழி மரபில் பண்ணமையப் பாணர்கள் பாடும் பாடல்களில் இத்தகைய செய்நேர்த்தி அமைவது அரிது என்ற கருத்தில்தான் தொல்காப்பியர் பாணர் பாட்டைப் பண்ணத்தி எனத் தனியே பிரித்துத் தனியொரு இலக்கிய வகையாக இலக்கணம் வகுத்தார்.

பண்ணைத் தோற்றுவித்தலால் பண்ணத்தி என்றார் என இளம்பூரணர் தரும் விளக்கத்தில் பாணர்களின் பண்ணமைந்த பாண்பாட்டே பண்ணத்தி என்ற குறிப்பும் தொக்கி நிற்கிறது. அது பண்சார்ந்து இயங்கும் இசைப்பாடல். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் கொண்ட பாடம், ‘பாட்டின் இயல பண்ணத்

தி்யே' என்பதாகும். பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பாடம் 'பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே' என்பதாகும். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் கொண்ட பாடமே பொருத்தமானதாகும். ஏனெனில் பண்ணத்தியும் ஒரு பாட்டு இலக்கியம் தான் என்னும் தொனி இளம்பூரணர் கொண்ட பாடத்தின் ஏகாரத்தில் தான் அழுத்தமாக ஒலிக்கின்றது.

## 1.8. பண்ணத்தி : பாணர்களின் வாய்மொழி இசைப்பாடல்

தமிழ் இலக்கியத்தில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே பாணர், பொருநர், கூத்தர், விறலியர், புலவர் முதலிய கலைஞர்கள் வாழ்ந்து வந்தனர். இவர்கள் தாம் பெற்ற செல்வத்தைத் தனித்தே பயன்படுத்தாது தன் சுற்றத்தோடு கூடி இன்பம் பெற்று வாழ்ந்து வந்தனர்.

இவர்கள் தங்களுக்கென்று நிலையான இருப்பிடம் உடையவர்கள். இவர்கள் கலையாற்றலைப் பிறருக்குப் புலப்படுத்துவதற்காகவும் வறுமை நீங்கிய செம்மையான வாழ்வினை வாழ்வதற்காகவும் புலம் பெயரும் நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டனர். அலைந்து திரியும் வாழ்க்கைக்காக இவர்கள் வருத்தமுற்றாலும் தங்கள் கலைத்தொண்டு மன்னர்களாலும் மக்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டதால் இத்தகைய வாழ்க்கை நெறியை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டனர்.

## 1.9. பாணர்- பாடினியின் நிலை

வேந்தரகள், குறுநில மன்னரகள், தலைவர்கள் போன்றோரைத் தமது கலைகளின் ஊடாக உற்சாகப்படுத்திய பாணன் போன்ற கலைஞர்களின் நிலையானது,

"சங்க காலத்தில் யாழ் இசைத்து மக்களை மகிழ்ச்சியால் ஆழ்த்தியவர்கள் பாணர்கள். ஐந்நிலங்களிலும் இவர்கள் பாடியதால் அங்குள்ள மக்கள் இவர்களுக்கு உணவு அளித்துச் சிறப்பித்தனர். முடியுடை வேந்தர்களும் இவர்களை ஆதரித்தனர். குறுநில மன்னர்களும் தலைவர்களும் இவர்களைக் கொண்டாடினர். வள்ளல்கள் இவர்களைப் பாராட்டினர். இவர்களுக்கு ஒரு போர்வையும் ஒரு மரத்தோடும் ஒரு நெல்லிக்கனியும் தந்து சிறப்பித்தனர். பின்னர் இவர்களிலும் உயர்குடியில் பிறந்தோர் இவர்களைப் பாணர் பாடினியர் என்று அடையாளப்படுத்தி இவர்களின் வாழ்க்கையைத்

தொலைத்தனர். உழைத்தோர் கடைசியர், இடைச்சியராயினர். யாழோடு தொடங்கிய இவர்களின் வாழ்க்கை முறை சிறிதாக மறைக்கப்பட்டு முழுவதுமாக மறைந்தது”[50] என்பதன் மூலமாக அறிய முடிகிறது.

## 1.10. பாணர் தோற்றம்

“இனக்குழுச் சமுதாயத் தொடக்கத்தில் குழுத்தலைவர்களைப் பாடுவதற்கென்று ஒரு குழுவினர் உருவானதாகவும் அவர்கள் வேலன் குடும்பத்திலிருந்து பிரிந்து வந்ததாகவும் அந்தக் குழுவினரே பாணர் என்ற குடிப்பெயருள் தோன்றியதாகவும் அவர்களின் குழுத் தலைவனைப் பாடியவர்கள் அகவுநர்களாக மாறினர”[51] என்றும் அ.பிச்சை பாணர் தோற்றத்தைக் கூறுகிறார்.

பாணர்களிடத்தில் வாய்மொழிப் பாட்டாக இருந்த அகவற்பாட்டு அரசு அமைப்பில் ‘ஆசிரியர்’ என்ற பெயரைக் கொண்ட புலவர்களிடத்தில் வரும் பொழுது ஆசிரியப்பாவாக மாறியது. இன்று அகவல், ஆசிரியம் என்ற இரண்டும் ஒரு பொருளைக் குறிப்பிடுவதாகி விட்டது.

“வாய்மொழிப்பாட்டு வரிவடிவப் பாட்டாகியது. பாணர்களிடத்திலிருந்து புலவர்களிடத்திற்குப் போனது. இவ்வாறு, பெரும் புலவரால் ஆசிரியரால் அகவற்பாட்டு கையாளப்பட்டமையால் ஆசிரியம் என்ற பெயர் பெற்றது”[52] என்று சு.வித்தியானந்தனும் குறிப்பிடுகிறார்.

புறத்தொகையில்,

| | | |
|---|---|---|
| பாணர் பாட்டுகள் | - | 70 |
| புலவர் பாட்டுகள் | - | 50 |
| மக்கள் பாட்டுகள் | - | 128 |

பாணர்கள் ஒரு நிலையான வாழ்க்கை முறையைக் கொண்டிராமல் ஊர் ஊராக அலைந்து திரியும் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். இவர்கள் மிகுந்த வறுமையில் உழன்றவர்களாக இருந்தார்கள் என்று பழந்தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. பாணர்கள் என்றால் பசியோடு தான் இருப்பார்கள் என்று இந்த இலக்கியங்கள் பேசுகின்றன. பாணர்கள் உடும்பினை உரித்தாற்

போன்ற தோற்றத்தினராய் விலா எலும்புகள் வெளித்தெரிய மிகுந்த பசியை உடையவராகவும் வியர்வையில் நனைந்த கிழிந்த ஆடையையுடையவராகவும் காட்டப் பெறுகின்றனர். வறுமையைப் போக்கும் பரிசு பெற்று வரும் பாணன், வறுமையில் வாடும் பாணனைப் பேகனிடம் செல்லுமாறு சொல்லும் பாட்டு

''படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ

கடாஅம் யானைக் கலிமான் பேகன்

எத்துணை ஆயினும் நன்று என

மறுமை நோக்கின்றோ அன்றே

பிறர் வறுமை நோக்கின்று, அவன் கைவண்மையே''[53]

என்பதாகும்.

''வள்ளல்களைப் பார்க்கும் முன் வறியவர்களாக இருந்த பாணர்கள், பார்த்துவிட்டு வந்தபின் பொற்றாமரைப் பூச்சூடியவர்களாகக் காணப்படுகின்றனர். இது பழந்தமிழ் இலக்கியங்களில் பரவலாகப் பேசப்படும் செய்தி''[54] என்று துளசி ராமசாமி குறிப்பிடுகிறார்.

''புலவர்கள் பாடிய பாடல்களே புலவர் பாடல்கள். பழங்குடி மக்களின் பாடல்களில் 'சிறப்பம்சங்கள்' இருக்காது. பொதுத்தன்மையோடு இருக்கும். உத்தி, அழகுபடுத்தல், அணிசேர்த்தல் இருக்காது. விஷயத்தை நேரடியாகச் சொல்வதே நாட்டுப்புற இலக்கியத்தைக் கட்டமைக்கும் பணியாகும். இவ்வாறு இருப்பது தான் பாணர் மரபு. அணி போன்ற அழகூட்டுவது புலவர் மரபாகும''[55]

''பாணர்கள் புரவலர்களை நேருக்கு நேராகவும் பாடியிருக்கிறார்கள். பரிசு பெற்று வந்த பின்னும் நினைத்து நினைத்துப் பாடியிருக்கிறார்கள். ஆற்றுப்படுத்தியும் பாடியிருக்கிறார்கள். இதே போல் பெருவேந்தர்கள் காலத்தில் பாணர்களைப் புலவர்கள் ஆற்றுப்படுத்தியிருக்கிறார்கள். அவ்வாறு பாடிய பாட்டுக்கள் அத்தனையும் நாட்டுப்புறப்பாடல்களே. உணவுக்காகவே பாடியிருக்கிறார்கள்''[56].

புலவர்கள் பாடிய பாட்டுகள் இனக்குழுகால அரசு உருவாக்கக் காலகட்டத்தில் புலவர்கள் மிகக் குறைந்தும் குறுநில மன்னர்கள் காலத்தில்

மிதமாகவும் பெருவேந்தர்கள் காலத்தில் மிக அதிகமாகவும் பாடப்பட்டிருக்கின்றன. பாணர், பாடினியர், விறலியர், கூத்தர், பொருநர் என்போர் சங்க இலக்கியங்களில் அடிக்கடி குறிக்கப் பெறுவர் (தொல்.1037,1139,1446). அவர்கள் பழந்தமிழகத்தில் வாழ்ந்தனர்; அவர்கள் இசை, ஆடல், நாடகத்துறைகளில் திறம் பெற்றிருந்தனர். அவர்கள் திணைச் செய்யுட்களில் கற்பனையாகப் படைக்கப்பட்டோரல்லர். பொதுவாக அவர்கள் தங்கள் தொழிற் பெயர்களாலும் குடிப்பெயர்களாலும் குறிக்கப் பெற்றனர்; பழந்தமிழர்களின் குடும்ப வாழ்வில் அமைதியையும் நம்பிக்கையையும் உண்டாக்குபவர்களாக அவர்கள் தம்மை அடையாளப்படுத்திக் கொண்டனர். அதாவது அவர்கள் மனவேறுபாடு கொண்ட மணமக்களையும் தலைவன் தலைவியரையும் ஒன்றுபடுத்தினர். அவர்கள் அரசவைகட்குச் சென்று ஆடல்பாடல்களாலும் நாடகத்தாலும் அரசரையும் மக்களையும் மகிழ்வித்தனர். விழாக்களும் கொண்டாட்டங்களும் நிகழும் இடத்திற்கு அவர்கள் விரைவர். அத்தகைய நிகழ்வுகளில் தங்கள் ஆடலாலும் நாடகத்தாலும் பாடலாலும் மக்களையும் மன்னரையும் மகிழ்விப்பர். ஓரிடத்தில் விழா முடிந்த பின்னர் உடனடியாக அவர்கள் விழாக்களும் கொண்டாட்டங்களும் நிகழும் வேறு ஊர்களை நோக்கிச் செல்வர்.

“எழுத்துக்கு முன் வாய்மொழி மரபிலே பாடல்கள் பாடப்பட்டு வந்தன. பாடல்கள் அனைத்தும் நாட்டுப்புறப் பாடல்களே ஆகும். ஆனால் எழுத்திலக்கியம் பிறப்பதற்கு முன் உள்ள வாய்மொழிப் பாடல்கள் நமக்குக் கிடைக்கவில்லை என்று தொ.பரமசிவன் கூறியிருக்கிறார்”[57].

மேலும்,

“பழைய சமூகத்தில் செல்வாக்குச் செலுத்திய பாண் மரபைத் தனது தேவைக்குப் பயன்படுத்திக் கொண்டாலும் பாண் மரபில் இருந்து தான் வேறுப்பட்டவன், புதிய புனைவுகளை அளிப்பவன் எனத் தன் அறிவைப் புலவர்கள் முன்வைக்க முனைந்துள்ளனர். இந்த அறிவு, மொழி சார்ந்ததாக இருந்துள்ளது. பாணர்கள் மொழிப் புலமையுடையவர்கள் என்றாலும், அவர்களின் புலமை பழம் பாடலைப் பாட, அதனை விவரிக்க மட்டுமே பயன்பட்டது. புலவர்களின் புலமை புதிய பாடல்களை உருவாக்கியுள்ளதைச் சங்க இலக்கியங்கள் நுண்மையாகப் பதிவு செய்துள்ளன”[58] என்று கே.பழனிவேலு குறிப்பிடுகிறார்.

புலவர்களால் பாடப்பெற்ற பாடல்களைத் தொகுத்து ஆராய்ந்தால், சங்க காலத்தில் பரவலாக நிலவிய பாணர் மரபினைக் கண்டறிய முடியும். வாய்மொழியாகப் பாடல் பாடுவதில் வல்லவர்களான பாணர்கள் எழுத்தறிவு பெற்றவுடன் புலவர்களாக மாறியிருக்க வேண்டும். திணைசார் வாழ்க்கை சிதிலமாகி, வளமான அரசு உருவான பின்னர், நிலையாக ஓரிடத்தில் தங்கியிருக்க வேண்டிய சூழல் உருவான போது, புலவர்கள் வேந்தர்களிடம் செல்வாக்குப் பெற்றனர். பாணரும் புலவரும் இனக்குழுத் தலைவர், மன்னர், வேந்தர் போன்றோரைச் சார்ந்து வாழ வேண்டிய நிலையில் இருந்தனர் என்பது கவனத்திற்குரியது.

சங்க காலம் இனக்குழு வாழ்வுமுறைகள் மாறுதலுக்கு உட்பட்ட காலம். நிலவுடைமையாக மாறுகிற இக்காலகட்டத்தில் எழுத்து இலக்கிய மரபு உருவாகின்றது. அரசின் தோற்றுவாய்க் காலமான அக்காலத்தில் இலக்கிய உருவாக்கம் அரசு உருவாக்கத்தின் ஓர் அங்கமாக அமைகின்றது. அரசு சார்ந்தவர்களான புலவர்களின் இருப்பு நிலைகள் மாறுகின்றன.

“உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மறைஇலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்ப”[59]

எனப் புலவர் பாடும் மரபு சுவர்க்கப் பேற்றுக்கு வழியாய்க் காட்டப்படும் நிலையில் அவர்தம் மரபு உயர்வு பெறுகின்றது. பாணர் முதலியோர் அறிவு என்பதனோடு தொடர்பற்றவர்களாகக் கருதப்படுகின்றனர்.

“இனக்குழுக்கள் ஒன்றிணைந்து புதுச்சமுதாயம் தோன்றும் போது புதிய சமுதாய உறவுகளால் அச்சமுதாயத்தில் சில புதுக்குணங்கள் தோன்றும். பழைய நம்பிக்கைகளும் சடங்காசாரங்களும் எச்சமாகப் பழஞ்சமுதாயத்தில் இருந்தது போலவே காணப்படும். சமுதாயத்தைப் போலவே நாடோடி இலக்கியம் எழுத்திலக்கியமாக மாறிய போதிலும் அதன் பழைய குணாம்சங்கள் எச்சமாகக் காணப்படும்”[60] எனக் குறிப்பிட்டுச் சொற்கள் தொடர்கள் திரும்ப வருதலை (Repetation) எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

“ஒரு வாய்மொழிப் புலவனுக்கு வசதியான படைப்பாக்கக் கூறுகளுள் தலைசிறந்தது வாய்பாட்டாகும். ஆயத்தமின்றி உடனே பாடப்படும் வீரநிலைப்பாட்டு முழுமையும் அதனைச் சார்ந்திருப்பது. உண்மையில் எல்லா வாய்மொழிப் புலவர்க்கும் இது தவிர்க்க இயலாதது. எழுத்தறிவுடைய கவிஞன் எழுதும் கவனமிக்கச் சொற்களுக்குப் போதிய காலமும் ஓரளவு அமைதியும் தேவைப்படும். ஆனால் வாய்மொழிப் புலவனுக்கு இவை தேவையில்லை. அவன் வீரநிலைக் கருத்தாக்கப் படைப்புகளை விரைந்து பாட வேண்டுவதுடன் அவன் வெற்றிகரமாக இருக்க வேண்டுமெனில் ஆர்வமிக்கப் பொதுமக்களின் எழுச்சி நடுவே பாடல் சமைக்கவும் வேண்டும்”[61] எனக்கூறும் க.கைலாசபதியின் கூற்று எத்துணை அளவுக்கு வாய்பாடுகள் கவிதையாக்க மரபில் அதுவும் வாய்மொழிக் கவிதையாக்க மரபில் முக்கியத்துவம் பெற்றுள்ளன என்பதை வெளிப்படுத்துகிறது.

சங்க கால வாய்மொழிப் பாடகர்களான கலைஞர்கள் பாடல் பாடுவதில் வல்லவர்கள். ஓலைச்சுவடிகளில் செய்யுள் இலக்கணம் அறிந்தும் செய்யுள் இயற்றுவதில் புலவர்கள் வல்லவர்கள். சங்க காலத்தில் பாணர்கள் ஆற்றிய செயல்களே பிற்காலத்தில் புலவர்களுக்கான பெரும்பாலான செயல்களாக மாறின.

## தொகுப்புரை

- சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் கலைஞர்கள் தங்களுக்குப் பரிசில் அளித்துப் புரக்கும் நிலத்தலைவனை அல்லது அரசனை, வெறுமனே பரிசில் அளிக்கும் கொடையாளியாக மட்டும் காணவில்லை. அவர்களுக்கிடையிலான உறவு நிலையானது தனித்துவம் மிக்கதாக உள்ளது. தங்களின் கலைத்திறனை வெளிப்படுத்திப் பரிசில் பெற்றுப்போகும் உறவு மட்டுமின்றி, மன்னனின் இறப்புவரையும்கூட நெருக்கமான உறவினைப் பேணியுள்ளனர் கலைஞர்கள். பரிசிலுக்காகப் பாடப்பட்ட பாடல்கள் மட்டுமின்றித் தலைவனை இழந்த தங்களின் கையறுநிலையை வெளிப்படுத்தும் பாடல்களையும் அவர்கள் புனைந்துள்ளனர்.

- புலவர்களுக்கும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களுக்கும் பண்பு அடிப்படையில் மெலிதான இடைவெளி தோன்றிப் பிற்காலத்தில் நிலைத்தது. எனினும் அவர்கள் இரு பிரிவினரும் பரிசிலர், இரவலர் ஆகிய பொதுச் சொற்களாலேயே குறிப்பிடப்படுகின்றனர்.

- புலவர்கள் தங்களைப் பரிசில்கள் அளித்துப் புரக்கும் அரசர்களைப் புகழ்ந்து பாடும் படைப்புகளைப் படைத்துள்ளனர். அவர்களைக் குறிப்பிடும் பாடல்களின் தங்களைப் போன்ற கலைஞர்களின் வாழ்க்கை அமைப்பையும் செல்நெறியையும் இணைத்துப் பாடியுள்ளனர். எனவே புலவர்களின் பாடல்களில் நிலத் தலைவர்கள் பற்றிய குறிப்புகளோடு இரவலர்களின் நிலை பற்றிய பல்வேறு குறிப்புகளையும் காணமுடிகிறது.

- புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் தங்களின் படைப்புத் துறையிலும் அவற்றை அரங்கின்மிசை அளிக்கும் தன்மையிலும் நுண்ணிதான வேறுபாடுகளைக் கொண்டிலங்குகின்றனர். புலமைத் தொழிலில் நுட்பமான வேறுபாடுகள் தலைகாட்டத் தொடங்கியமைக்கான அடிப்படைகளை அவர்தம் படைப்புச் செயல்பாடுகள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனாலும் பரிசில் பெறுபவர்கள் என்னும் அடிப்படையில் புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் ஒரே நிலையில் காணப்படுகின்றனர்.

- சங்க இலக்கியப்பாடல்கள் பலவற்றில் கூத்தர், பொருநர், பாணர், பாடினி, விறலி ஆகிய கலைஞர் பெருமக்களின் வறுமைநிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மிகவும் பின்தங்கிய அடித்தட்டு மக்களைவிட மிகவும் வாழ்நிலையில் கீழான நிலையில் கலைஞர்கள் வாழ்ந்தமையைப் பல பாடல்கள் சித்தரிக்கின்றன. ஆனால், புலவர்கள் ஒப்பீட்டளவில் கலைஞர்களைப் போன்று வறுமையில் வாடியமை குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் பதிவு பெறவில்லை.

- புலவர்கள் தங்களின் பாடல்களில் கலைஞர்கள் பெற்ற பரிசில்களைப் பதிவு செய்துள்ளனர். அதன் நோக்கம், தலைவனது வள்ளல்தன்மையைச் சிறப்பிப்பது மட்டுமல்ல; தனக்கும் தன் புலமைக்கும் தக, தலைவன் மிகுதியான பரிசில் அளித்து வரிசை செய்ய வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்கும் ஆகும்.

- புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து பாடும்போது, கலைஞர்கள் பற்றிய பல்வேறு குறிப்புகளையும் இணைத்துப் பாடியுள்ளனர்.

- புறநானூற்றில் மட்டும் 19 புலவர்கள், தங்களின் 23 பாடல்களில் கலைஞர்களின் கூற்றாகப் பாடியுள்ளனர். புலவர்கள், கலைஞர்களின் கூற்றாகப் பாடல் பாடும் மரபு வளமிக்கதாக இருந்தது என்பதைச் சங்கப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. கலைஞர்களின் கூற்றுக்களாகப் பாடல்களை அமைக்கும் மரபு தமிழ்க்கவிதைப் பரப்பில் இருந்ததெனினும் கூத்தர்களின் கூற்றாகப் புலவர்கள் பாடல்கள் ஏதும் புனையவில்லை என்பதும் கருத்திற்குரியது.

- அகத்திணையில் தலைவனுக்கும் தலைவிக்குமான ஊடலைத் தீர்க்கும் வாயிலாகப் பாணர், விறலியர் ஆகியோர் செயல்பட்டனர். அதைப்போலப் புறத்திணையில் புலவர்கள் தங்களைப் பாணராக வரித்துக் கொண்டு மன்னர்களுக்கிடையே தூது சென்றுள்ளனர்.

- பாணர்குடிப் புலவர்கள் என்று அறியப்படும் புலவர்கள், ஔவை, காக்கைப்பாடினி நச்செள்ளையார், நெடும் பல்லியத்தனார் ஆகியோர் ஆவர். கூத்தர் என்ற அடைமொழியை இயற்பெயராக உடைய புலவர்கள் 8 பேர் உள்ளனர். இவர்கள் கூத்துக் கலைஞர்களாகத் தெரியவில்லை.

கூத்து மரபிலிருந்து வந்தவர்களாகவோ அல்லது கூத்தர்களைத் தங்களின் மரபு முன்னோடிகளாகக் கொண்டவர்களாகவோ இருக்க வேண்டும்.

## சான்றெண் விளக்கம்

1. ராஜ் கௌளதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், பக்.50-51
2. மேலது.ப.52
3. புறம்.139
4. மேலது.148
5. மேலது.163
6. மேலது.215
7. மேலது 216
8. புறம்.217
9. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.30
10. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.228
11. நா.செயராமன், தமிழ் இலக்கிய நெறிகள், ப.95
12. புறம்.13-18
13. மேலது.,302:5-7
14. மேலது., 328:9-12
15. மேலது., 15:22-25
16. மேலது. 28 :11-14
17. மேலது். 29:5
18. மேலது. 212:6-7
19. மேலது. 17:1-9
20. மேலது. 164:11-13
21. மேலது. 170:10-17
22. மேலது. 172:1-11
23. மேலது. 140: 1-10
24. புறம்.410.1-23 (சரிபார்க்க)
25. மேலது. 376 :9-18
26. மேலது. 149:2-5
27. மேலது. 242:2-6
28. மேலது.145:1-10
29. தாயம்மாள் அறவாணன், அவ்வையார் அன்று முதல் இன்று வரை, ப.22
30. குறிஞ்சிப் பாட்டு (கபிலர் அகவல்)
31. குறுந்.23:1-5

32. புறம்.103:1-12
33. மேலது. 235 : 10-15
34. ஔவை.துரைசாமிப்பிள்ளை.சு. (உ.ஆ) ஐங்குநுறூறு, ப.1027
35. பதிற். 60 : 1-3
36. பதிற்.58: 1
37. புறம்.64 : 1-2
38. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.131
39. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.133
40. மேலது.,ப.131
41. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, ப.35
42. கார்த்திகேசு சிவத்தம்பி, தொல்காப்பியமும் கவிதையும், ப.34
43. புறம்.335
44. மேலது.69
45. பெ.மாதையன், சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.96
46. அம்மன் கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், பக். 192, 203
47. புறம்.72
48. தொல்.பொருள்.1-14
49. தொல்.செய்யுளியல் - 173
50. காவ்யா தமிழ் ; ஏப்ரல் - ஜீன் 2016, ப.110
51. துளசி.ராமசாமி, பழந்தமிழ் இலக்கியங்கள் நாட்டுப்புறப் பாடல்களே, ப.798
52. மேலது.ப.799
53. புறம்.141
54. துளசி.ராமசாமி, பழந்தமிழ் இலக்கியங்கள் நாட்டுப்புறப்பாடல்களே, ப.803
55. மேலது.806
56. மேலது.827
57. மேலது.795
58. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டும் மரபும் எழுத்து மரபும், ப.74
59. புறம்.27:5-9
60. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், ப.116
61. மேலது., ப.11

2.1. **புலவர் என்பதன் பொருள் விளக்கம்**

2.2. கல்வியில் சிறந்த சான்றோர்

**2.3. புலவர்களின் படைப்புத் திறன்**

2.3.1. மொழிப்புலமை

2.3.2. நூலறிப் புலவர்

2.4. புலவர்களின் வாழ்க்கைத் தன்மை

**2.5. புலவர்களின் வாழ்வு முறைகள்**

2.5.1. குழுவாக வாழ்தல்

2.5.2. வறுமை நிலை

2.5.3. வறுமையினும் மானமே பெரிது

2.5.4. வறுமையிலும் செம்மையாக வாழ்தல்

2.5.5. சுற்றத்தாரைப் பாரமாகக் கருத வைக்கும் வறுமை

2.5.6. வறுமை நீக்கும் வழி

2.5.7. பசிப்பகையைப் போக்கும் உணவு

2.5.8. கொடையும் மறுமைப் பயனும்

2.5.9. வழியின் இயல்பு

2.5.10. கலைஞர்கள் எதிர்ப்படுதல்

2.6. மனித நேயம்

2.7. ஆற்றுப்படுத்துதல்

2.8. இரவலரின் உடல் தோற்றம்

**2.9. பரிசில் வாழ்வு**

2.9.1. புலவர்களின் மனநிலை

2.9.2. பிறருக்கு உதவும் மனப்பாங்கு

**2.10. புலவர்களின் குணநலன்கள்**

2.10.1. ஒற்றுமைப் பண்பு

2.10.2. தன்மான உணர்வு

2.10.3. நன்றி மறவாப் பண்பு

2.10.4. தொண்டும் கடமையுணர்வும்

2.10.5. பிறர் நலம் பேணுதல்

2.10.6. பெண் கொலை புரிந்தோர் பரம்பரையை ஒதுக்குதல்

**2.11. செம்மை வாழ்விற்கான நல்லியல்புகள்**

2.11.1. சுற்றம்

2.11.2. இசைக் கருவி இசைத்தல்

2.11.3. கிழார் புலவர்கள்

2.11.4. புலவர்கள் உலகத்தோடு இயைந்த வாழ்க்கை

2.12. புலவர்களின் உரிமை

2.13. புலமைப் போற்றல்

2.14. புலவர் தன்மை

2.15. புலவரின் மான உணர்வு

2.16. நட்புணர்வு

2.17. நட்புக்காக உயிரை விடல்

2.18. புலவர் கலங்குதல்

**2.19. உணர்ச்சி**

2.19.1. இரக்க உணர்வு

2.19.2. துன்பு உணர்வு

**2.20. மன உறுதி**

2.20.1. கற்பனை

2.20.2. மனம்

2.20.3. சிந்தனை

2.20.4. நோக்கம்

2.21. மதிப்பு

2.22. புலவர்களின் உலகியல் வாழ்க்கை

**தொகுப்புரை**

**சான்றெண் விளக்கம்**

# இயல் 2

## புலவர்கள் வாழ்வும் இருப்பும்

இந்தியாவில் பேச்சு வழக்கில் உள்ள மொழிகளில் இலக்கியங்களில் பழமையானவை சங்க இலக்கியம் ஆகும். சங்க காலத்தில் தமிழ்ப் புலவர்கள் நிறைந்து வழிந்த காலம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலக ஒற்றுமைக்கும் மனித இன உறவுக்கும் தம் புலமைத் திறத்தாலேயே அயராமல் சேவை புரிந்த செம்மல்களாக விளங்கிய புலவர்கள், தமிழரின் அடையாளமாக விளங்கக் கூடிய சங்க இலக்கியங்களை இன்றும் போற்றிப் புகழும் வகையில் இயற்றித் தந்துள்ளனர். இவர்கள் அமைச்சர்களாகவும் அறிஞர்களாகவும், மெய்யுணர்வாளர்களாகவும், மக்களின் துயரத்தைப் போக்கி, பிறர்க்கென வாழும் சான்றோர்களாகவும் திகழ்ந்தனர். சமுதாயத் தொண்டு, மொழித்தொண்டு, மக்கள் தொண்டு எனப் புலமையாலே சேவை புரிந்த புலவர்கள் புரவலர்களை அண்டி வாழ வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

செம்மொழித் தமிழ் இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகைப் பாக்களை இயற்றிய புலவர்களின் வாழ்வானது பொருளின்றி வறுமையோடு இருந்தன. சங்க காலத்தில் புலமைத்தொழிலில் செல்வாக்கு இருந்தது. ஆனால், புலவர்களின் வாழ்க்கையில் செல்வம் இன்றி வறுமையோடு வாழ்ந்திருந்தனர். புலவர்கள் ஓலைச்சுவடிகளில் செய்யுள் இலக்கணம் அறிந்தும் செய்யுள் இயற்றுவதில் வல்லவராகத் திகழ்ந்தாலும் இவர்களது குடும்ப வாழ்வானது வறுமையின் அடர்த்தியினை வெளிப்படுத்துகிறது. தமது திறமைகளை வள்ளல்களிடம் வெளிப்படுத்திப் பரிசில் வேண்டி அன்றாட வாழ்க்கையினை நடத்துவதற்குத் தமது புலமைத் தொழிலினைப் பயன்படுத்தி வருகின்ற நிலையானது சங்க காலப் புலவர்களுக்கு நேரிட்டது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே புலவர்கள் உயர்வான வாழ்க்கை வாழ்ந்தனர். உயரிய சிந்தனை, வாழ்வியல் கோட்பாடு, நாகரிக வளர்ச்சி ஆகியவற்றில் மானிட சமுதாயத்திற்கே முன்னோடியாக விளங்கியுள்ளனர். பொருள் இன்றி உயிர் வாழ முடியாது என்கிற இன்றைய காலகட்டத்தில், சங்க காலப் புலவர்கள் வாழ்வானது பொருள் இன்றி எப்படி வாழ்ந்தார்கள் என்பதைப் பற்றி இந்த இயல் ஆராய முற்படுகிறது.

## 2.1. புலவர் என்பதன் பொருள் விளக்கம்

புலவர் என்னும் சொல் குறித்துப் பல கருத்துக்கள் நிலவுகின்றன. "புலவர் என்னும் இச்சொல் பொறி உணர்வு, அறிவு, ஞானம் முதலிய பொருளுடைய 'புலம்' என்பதிலிருந்து பெறப்பட்டது. புலம் என்றால் அறிவுடையவர் கற்றோர் என்று பொருள். ஞானம், அறிவு, கல்வி ஆகியன புலவனாகிய மனிதனுக்குப் பரம்பரையாக வருவன என்ற கருத்தைக் காட்டுவது புலவர் என்ற சொல்லாகும்"[1].

புலவர் என்றால் அறிவுடையவர், கற்றோர் என்பது பொருள். மேலும், செய்யுளில் மிகவும் குறைவாக 43 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. புலவன் என்பதற்குப் பொறி உணர்வு, அறிவு, ஞானம் முதலிய பொருளுடையது. இவை புலம் என்பதிலிருந்து பெறப்பட்டது. சங்க இலக்கியப் புலவர்களாக 473 பேர் எனக்கருதுவர்.

"பாடல்களை இயற்றியோர், பாடியோர், புலவர், பாவலர், கவிஞர் என அழைக்கப் பெற்றுள்ளனர். இவர்களைச் சங்க இலக்கியம் புலவர்கள் எனச் சுட்டுகின்றது"[2].

புலவர் என்றால் சங்க காலம் முதல் இன்று வரை நம் நினைவுக்கு வருவது வறுமையின் சின்னம் என்பது தான். புலவர்கள்மன்னர்களின்அவையிலே பேரமைச்சராகவும், மதிப்பிற்குரியவர்களாகவும், தவறுகளைத் தட்டிக் கேட்பவராகவும் விளங்கி இருக்கிறார்கள். இத்தகைய சிறப்புமிக்கப் புலவர்கள் கவி, கமகன், வாதி, வாக்கி என நான்கு வகையினர் உள்ளனர்.

“புலவன் என்ற சொல்லுக்குப் பொருள் அறிவுடையோர் என்பது புலம் - அறிவு. இவர்கள் பெயர் பழைய நூல்களிலும் உரைகளிலும் நல்லிசைப் புலவரென்றும் சான்றோரென்றும் காணப்படும்”[3] என உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

## 2.2. கல்வியில் சிறந்த சான்றோர்

புலவர்கள் ‘எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே’ என்ற ஆளுமையால் தாம் கற்றக் கல்வியைப் பெருஞ்செல்வமாக மதித்து ஒழுகுபவர்கள். மன்னர்களைப் பார்த்து அண்ணாந்து ஏந்திய செருக்குடைய உம்மைப் போன்ற பெருமையும் எனக்குண்டு எனச் சரிசமமாகப் பேசுபவர்கள். கலையை மதித்துக் கலைக்காகவே வாழ்பவர்கள். எங்கும் எப்பொழுதும் தங்கள் கலைச் செல்வமாம் திறமையை வளர்த்துக் கொள்ளவும் அதனை வெளிப்படுத்திப் புகழ் பெறவுமே ஆசைப்படுபவர்கள். தங்கள் வரிசையறிந்து பரிசில் நல்க வேண்டும் என்பதால், தங்கள் திறமை அறியப்படவும் போற்றப்படவும் வேண்டும் என்பதில் பேரார்வம் கொண்டு இருந்தனர்.

“புலவர்களைச் சான்றோர், பரிசிலர், இரவலர் என்றும் அழைப்பர். ‘சால்’ என்னும் சொல்லுக்கு நிறைவு என்பது பொருளாகும். எனவே, அறிவாலும் ஒழுக்கத்தாலும் நிறைவுடையவர், முழுமைப் பெற்றவர் என்னும் பொருளில் சான்றோர் என்னும் சொல்லை ஆண்டனரெனத் தெரிகின்றது”[4] என்பதன் அடிப்படையில் கல்வியில் சிறந்தவர்களே புலவர்களாக விளங்கினர். புலவர்களை வறியவர் என்று எண்ணாது, கற்றறிந்த சான்றோர் என மதித்துப் போற்றிய சிறப்பு எண்ணத்தக்கது.

## 2.3. புலவர்களின் படைப்புத்திறன்

புலவர்கள் சமுதாயத்தில் உள்ள மக்களை உயர்வு நோக்கில் வளர்த்தெடுக்கும் பாங்கில் பாடிப்பாடி மக்கள் மனதைப் பண்படுத்தியுள்ளனர். மக்களின் வாழ்க்கையையும் மனநிலைகளையும் பண்படுத்தும் முயற்சியைத் தனது படைப்புத்திறன் மூலமாக மேற்கொண்டனர்.

“புலவர்கள் மென்மையான உள்ளம் படைத்தவர்கள். உணர்ச்சி வசப்படும் மனப்போக்கு உடையவர்கள். குழந்தை போன்று உள்ளம் படைத்தவர்கள். ‘பழுமரம் தேடும் பறவை’ போன்று வாழ்வையுடையவர்கள்.

பரிசில் நீட்டிக்கும் போது தங்கள் பெருமையை மன்னர்கள் உணரவில்லை என்று கண்ட போதும் துள்ளி எழும் உள்ளம் படைத்தவர்கள்”[5].

### 2.3.1. மொழிப்புலமை

சங்க இலக்கியங்களில் புலவர் என்ற சொல் மொழி, கல்விப் புலமையையே பெரும்பாலும் சுட்டியுள்ளது. “செந்நாப் புலவர்”[6], அச்சொல் “நுண்தேர்ச்சிப் புலவர்”[7] என்ற சான்றுகள் இதனைக் காட்டுகிறது.

“புலவர் புகழ்ந்த பொய்யா நல்இசை”[8]

“புலவர் புகழ்ந்த நார்இல் பெருமரம்”[9]

என மொழிப்புலமையுடன் புலவர்கள் சுட்டப்படுகின்றனர். எனவே, மொழிப் புலமையைக் குறித்த புலவர் என்ற சொல் தனது தொழிலைத் திறம்படச் செய்தவர்களையும் குறித்து வந்துள்ளதைக் காண முடிகிறது.

### 2.3.2. நூலறி புலவர்

புலவர்கள் சொற்களை நுண்மையாகக் கையாளக்கூடியவர்கள் என்பதை,

“நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மலைவகுத்து
ஒழுங்குடன் வளைஇ ஓங்குநிலை வரை”[10]

என அரசனுக்காக அரண்மனைகள் கட்டப்படும் தன்மையைக் கூறுகிறது.

“தனக்குரிய தொழிலைச் சிறப்பாகச் செய்பவரை அல்லது நுணுக்கமாகச் செய்பவரைப் புலவர் என அழைக்கும் மரபு சங்க முன் மரபாக இருந்திருக்கலாம். இந்த அடிப்படையிலேயே சொற்களை நுண்மையாகக் கையாள்பவர் புலவர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். பாணர், பாடுநர் பழம் பாடலை நினைவிலிருந்து பாடுபவர் என்பதனாலும் அவர்களிலிருந்து புதிய

பாடலை நுணுக்கமாக உருவாக்குபவர்களைக் குறிக்கப் புலவர் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர்"[11] என்று கே.பழனிவேலு குறிப்பிடுகிறார்.

## 2.4. புலவர்களின் வாழ்க்கைத் தன்மை

பரிசில் வாழ்க்கை வாழ்ந்த புலவர்கள் அறிவுத் தொழிலினைச் செம்மையாகச் செய்வதற்காக இரந்து வாழ்வதனை இழிவாகக் கருதவில்லை. அறிவுத்தொழிலினைச் செம்மையாகச் செய்வதற்காகப் பரிசில் வாழ்க்கை வாழ்ந்த புலவா்கள் இரந்து வாழ்வதனை இழிவாகக் கருதவில்லை. தாம் பாடி பெற்ற பரிசுப் பொருட்களைத் தமக்கென வைத்துக் கொள்ளாமல் உறவினா் எல்லோருக்கும் சமமாகப் பகிா்ந்து கொடுத்த புலவரின் வாழ்வானது பெருஞ்செல்வம் படைத்த மன்னனின் வாழ்க்கையில் ஒப்பிடும் போது எவ்விதத்திலும் குறைவுபடவில்லை.

"வள்ளியோா்ப் படா்ந்து புள்ளின் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை
பிறா்க்குத்தீது அறிந்தன்றோ! இன்றே திறப்பட
நண்ணாா் நாண அண்ணாந்து ஏகி
ஆங்கினிது ஒழுகின் அல்லது ஓங்கு புகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோா் அன்ன செம்மலும் உடைத்தே"[12]

எனவே, பரிசிலர் வாழ்க்கையின் தன்மை எத்தகையது என்று வரையறுக்கிறது.

தமது புலமைத் திறத்தால் ஊா் ஊராகச் சென்று பாடிப் பெற்ற பரிசிலைப் பலருக்கும் கொடுத்த புலவா் வாழ்வில் யாருக்கேனும் தீங்கு ஏற்படுத்தவில்லை. இதனால், அவா்கள் தாழ்வு மனப்பான்மையின்றித்

தலைகுனிவிற்கு இடமின்றித் தமக்கெனத் தெரிந்து கொண்ட தொழிலைச் செம்மையாகச் செய்ய முடிந்தது.

வறுமையின் கொடுமையை உணர்ந்த புலவர் இரந்து பெற்ற பொருளைப் பிறரோடு பகிர்ந்து கொள்வதில் கவிஞர்கள் வள்ளல்களுக்கு இளைத்தவர் அல்லர்.

“நற்பொருள்களை விளங்க எடுத்துரைத்தாலும் ஒரு சிறிதும் விளங்கிக் கொள்ளமாட்டாத பெருமையில்லாத மன்னர்களை எம் இனத்தவராகிய புலவர்கள் பாட மாட்டார்கள்”[13] என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவர் கூறுகின்றார்.

## 2.5. புலவர்களின் வாழ்வு முறை

இசைக்கலைக்கு மயங்காதவர் எவரும் இல்லை என்பதைப் பாணர், பொருநர், கூத்தர், விறலியர், புலவர் போன்றோர் நன்கு அறிந்தவர்கள். இவர்கள் தங்களின் வாழ்க்கையில் இசைக்கலைக்கு முதலிடம் கொடுத்தனர். எங்குச் சென்றாலும் இசைக்கருவிகளைச் சுமந்து செல்வதை இவர்கள் இன்றியமையாத பணியாகக் கொண்டனர். இசைக்கருவிகளை வெறும் அலங்காரத்திற்காக மட்டும் வைத்திருக்கவில்லை. இசைநூல் முறைப்படி இசைக்கருவிகளின் இயல்பறிந்து, நெறிபிறழாது வாசிக்கும் ஆளுமைத்திறன் மிக உடையவர்களாக விளங்கினர். இடைவிடாது நரம்புக்கருவிகளையும் துளைக்கருவிகளையும் தோற்கருவிகளையும் மீட்டுவதைத் தான் தனது வாழ்க்கை முறையின் பலனாகக் கருதினர்.

இதுதான் தங்களது சொந்த ஊர் என்று குறிப்பிட்டுச் சொல்ல இயலாத நிலையில் பல ஊர்களுக்கும் சென்று தங்களது கலைத்திறனை வெளிப்படுத்தக் கூடியவர்கள். இவ்வாறு ஊர்தோறும் சென்றாலும் அந்தந்த ஊரில் வாழும் மக்களுக்கு இடையூறு செய்யாதவண்ணம் தத்தம் பணியில் ஈடுபட்டனர் என்பதே இவர்களது உயர்ந்த ஆளுமைப் பண்புகளை விளக்குகின்றது. வள்ளல்கள் தங்கள் கலையாற்றலைக் கண்டு வழங்கிய கூலியாகப் பெறப்பட்ட உணவினை, நாளைக்கு வேண்டும் என்று நினைத்துப் பாதுகாக்காமல் உண்ணக்கூடியவர்கள் என்பதை,

"கார் வான் முழக்கின் நீர் மிசைத் தெவுட்டும்
தேரை ஒலியின் மாண சீர் அமைத்து
சில்அரி கறங்கும் சிறுபல் இயத்தொடு
பல் ஊர் பெயர்வனர் ஆடி ஒல்லென
தலைப் புணர்த்து அசைத்த பல்தொகைக் கலப் பையர்
இரும் பேர்ஒக்கல் கோடியர்"[14]

என்ற பாடல் அடிகள் இவர்களின் வாழ்க்கை முறையினை எடுத்துரைக்கின்றன.

## 2.5.1. குழுவாக வாழ்தல்

பாணர்கள் எங்கு சென்றாலும் கூட்டமாகச் செல்வதையே வழக்கமாகக் கொண்டிருந்தனர். இசையும், கூத்தும் பலரது முயற்சியாலும் அறிவாலும் பிறப்பன. இங்ஙனம் குழுவாய் இருப்பது இவர்களின் இயல்பாகும். தனியொரு பாணனை இன்னொரு பாணன் ஆற்றுப்படுத்தும் போது இவ்வாறு கூட்டத்தோடு கூடி வாழ்ந்தனர் என்பதை,

"கொடுணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூஉர்க்
கடனறி மரபில் கைவல் பாண"[15]

என்பதன் மூலம் அறியலாம்.

மழை இல்லாக் காலத்தில் பறவைகள் தங்கள் பசி தீர எங்கேனும் பழங்கள் கிடைக்குமா என்று அலைந்து திரியும். அது போல் பாணனின் வறுமை நீங்க எங்காவது பொருள் கிடைக்குமா எனத் தன் சுற்றத்தோடு கூடி அலைந்து திரியும் தன்மையை,

"தண்கடல் வரைப்பில் தாங்குநர்ப் பெறாது
பொழிமலை துறந்த புகைவேய் குன்றத்துப்
பழுமரந் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்

புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண”[16]

என்ற அடிகளின் மூலம் அறியலாம். இவ்வாறு பாணர்கள் வறுமை நிலையில் இருந்தாலும் யாரிடமும் யாசகம் கேட்டுச் செல்லாமல் இசைக்கருவிகளை இசைத்து தனது ஆளுமையை வெளிப்படுத்தி அனைவரையும் மகிழ்வித்த தன்மையையும் வறுமையிலும் சுற்றத்தோடு கூடி வாழ்ந்த ஆளுமைப் பண்பையும் அறிய முடிகிறது.

வறுமை தீர்க்கும் வள்ளலைத் தனியாகச் சென்று காண்பதைவிடக் குழுவாகச் சென்று பார்த்தால் அத்தலைவனுடைய கவனத்தை மிக எளிதாக ஈர்க்க முடியும் என்று பாணர்கள் நன்கறிந்து வைத்திருந்தனர். மேலும் அதிகமான சுற்றம் இருப்பதால் பரிசிலும் அளவில்லாமல் பெற்று வளத்தோடு வாழ்வதற்கான வழியையும் அறிந்திருந்தனர். இவர்கள் வறுமை என்று வரும்போது மட்டுமே வள்ளலைத் தேடிச் செல்வர். மற்ற நாட்களில் தமக்கெனச் சிறந்த இடங்களில் வாழ்ந்தனர். வைகைப் பேரியாற்றின் கரையோரங்களில் அமைந்த துறைகள் தோறும் அமைந்த அவர்களது இல்லங்களில் தங்களுடைய சுற்றத்துடன் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த இல்லங்களின் அருகில் பல்வேறு வகையான பூக்களையுடைய பூங்காக்களும் பைம்பொழில் சோலைகளும் சூழ்ந்து இருந்தன என்பதை,

“அவிரறல் வையைத் துறை தோறும்
பல்வேறு பூத்திரள் தண்டலைச் சுற்றி
அழுந்துபட் டிருந்த பெரும்பாண் இருக்கையும்”[17]

என்பதன் மூலம் இவர்கள் கூடிவாழ்ந்ததை அறிய முடிகின்றது.

### 2.5.2. வறுமை நிலை

தலைவர்கள் மறுமையில் வாடி பொருளைத் தமக்கென வைத்துக் கொள்ளாமல் இல்லை என்று தம்மை அண்டி வந்திருக்கும் பிறருடைய வறுமையைப் போக்குவதற்காகவே பொருள் அளித்துள்ளனர். பொருளினைப் பெற்றுச் செல்லக் கூடியவர்கள் அவர்களது கலை மற்றும் புலமையை வெளிப்படுத்தினாலும் கூட அடிப்படையில் வறுமையானவர்களாகவே உள்ளனர். புலவர்களும், கலைஞர்களும் தம்முடைய வறுமையைச் சொல்லியே

இரவலர்களிடம் பரிசில் கேட்கின்றனர். புலவர்கள் களிற்றைப் பரிசிலாகப் பெறுவது புலவர்களின் வறுமையைச் சுட்டுகிறது. ஆரம்ப காலத்தில் புலவர்கள் தமது வறுமையை வெளிப்படுத்துவதற்குப் பாணனது மரபைக் கையாண்டுள்ளனர். இத்தகைய நிலை மாறி அரசனைச் சார்ந்து இயங்கிய புலவர்கள் பாணரிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு புலவராகவே வெளிப்படுத்திக் கொண்டாலும் வறுமையானது பின் தொடரவே செய்தன. புலவர்கள் இரந்து உண்ணும் வாழ்வை மேற்கொண்டனர். புலவர்களுக்கு நிலங்கள் பரிசிலாக அளிக்கப்பட்டன. ஆனால் அத்தகைய நிலத்தை உழுதுண்டு வாழத் தெரியாததால் வள்ளல்களை வாழ்த்திப் பாடி இரந்து உண்ணும் வாழும் வாழ்வைத் தொடர ஆரம்பித்தது. இவை பாணனின் மரபோடு இணைந்துள்ளது.

திருவள்ளுவரும் பசியை 'உறுபசி' என்றும் 'அழிபசி' என்றும் கூறுகிறார்.

"அற்றார் அழிபசி தீர்த்தல்"[18]

"உறுபசியும் ஓவாப் பிணியும்"[19]

என வரும் குறட்பாக்கள் நினைவு கூறுதற்குரியன.

### 2.5.3. வறுமையினும் மானமே பெரியது

'பசிப்பிணி போக்குதலே சிறந்த அறம்' எனச் சுட்டிக்காட்டுகின்றது மணிமேகலை. பெருஞ்சித்திரனார் என்ற புலவர் வறுமையால் மிகவும் வாடி வதங்கினார். பாரி, காரி முதலிய வள்ளல்கள் எழுவரும் மாய்ந்த பிறகு தம்மை ஆதரிப்பவர் இல்லாததால் அலைந்து திரிந்தனர். வெளிமான் என்ற குறுநில மன்னனிடம் சென்று அவனுடைய உதவியை எதிர்பார்த்து நின்றனர். அவனோ தன் தம்பியைப் பரிசில் கொடுக்குமாறு ஏவிவிட்டு உறங்கச் சென்றான். அத்தம்பி கொடுத்த பரிசில், புலவரைத் தாழ்வு படுத்தும் வகையில் அளவில் சிறியதாக இருந்தது. ஆதலால் புலவர் பெருஞ்சித்திரனார் அதனை ஏற்றுக் கொள்ளாமல் வேறோரு வள்ளலை நாடிச் சென்று விட்டார். சென்றவர் குமணனுடைய பரிசிலை விடப் பெரிய யானை ஒன்று பெற்று வந்து, வெளிமான் ஊரில் சென்று அவருடைய பெருமிதத்தைக் காண்பிக்கும் வண்ணமாக நீ ஒருவனே புரவலனோ? என்னைப் போன்ற புலவர்க்கு உதவும் புரவலர்கள் பலர்

உள்ளனர். உன் காவல் மரம் வருந்தும் படியாக யானை ஒன்று கட்டியிருக்கிறேன் போய் காண்பாயாக அவை நான் ஒருவனிடம் பெற்ற பரிசில் தான் என்றார்.

‘‘இரவலா் புரவலை நீயும் அல்லை:

புரவலா் இரவா்க்கு இல்லையும் அல்லா்:

இரவலா் உண்மையும் காண், இனி: இரவலா்க்கு

ஈவோா் உண்மையும் காண், இனி: நின் ஊா்க்

கடிமரம் வருந்தத் தந்து யாம் பிணித்த

நெடு நல்யானை எம்பரிசில்:

கடுமான் தோன்றல்: செல்வல் யானே’’[20]

எனவே, இவற்றின் வாயிலாகப் புலவா்கள் வெறும் பரிசில் பெற்றால் போதும் என்பதற்காகத் தம் மானத்தை இழந்தவா் அல்லா். வறுமையிலும் மானத்தோடு வாழும் பண்புள்ளவராகத் திகழ்ந்தனா்.

## 2.5.4. வறுமையிலும் செம்மையாக வாழ்தல்

வறுமை என்பது மிகக் கொடுமையானதாகும். அதனால் தான் ஔவையார், கொடிது கொடிது இளமையில் வறுமை கொடிது என்று குறிப்பிட்டுள்ளார். அத்தகைய கொடுமையான வறுமைச் சூழலிலும் உணவின்றி வருந்தும் தன் குடும்பத்தினரின் வாடிய நிலையைக் கண்டு புலவர்களும் மனம் வருந்தியுள்ளனர்.

‘‘உடல் சுருக்கி அறிவகற்றி மனம் மாளச் செய்யும் பசி நோய்க்கே வறுமை என்ற பெயர் பொருந்தும்’’[21] என்று வ.சுப.மாணிக்கம் வள்ளுவம் என்ற தமது நூலில் வறுமைக்கு விளக்கம் தந்துள்ளார். இத்தகைய பசியை உருவாக்கும் வறுமை என்னும் கொடிய நோய் இவ்வையகத்தில் எங்கும் இல்லாதிருக்க வேண்டும் என்ற தம் விருப்பத்தையே பாரதியார்,

‘‘தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்

ஜகத்தினை அழித்திடுவோம்’’[22]

என்று குறிப்பிட்டுள்ளார். பசியால்,

“பிறந்த குலம் மாயும் பேராண்மை மாயும்

சிறந்த தம் கல்வியும் மாயும்”[23]

என்று நாலடியாரும் கூறுகிறது. இத்தகைய வறுமை நிலையைப் புலவர்கள் தாங்கிக் கொண்டு தன் சிறப்புத் தன்மை அழியாது வாழும் பண்புடன் விளங்கியுள்ளனர்.

பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் தன்னுடைய வறுமை பற்றிக் குறிப்பிடும் போது,

“வாழும் நாளோடு யாண்டுபல உண்மையின்

தீர்தல் செல்லாது என்உயிர் எனப்பல புலந்து

கோல்கால் ஆகக் குறும்பல ஒதுங்கி

நூல் விரித்தன்ன கதுப்பினள் கண்துயின்று

முன்றிற் போகா முதிர்வினள் யாயும்”[24]

என்று தன் தாயின் நிலையையும்,

“மருங்கில் கொண்ட பல்குறு மாக்கள்

பிசைந்து தினவாடிய முலையள் பெரிது அழிந்து

குப்பைக் கீரைக் கொய்கண் அகைத்த

முற்றா இளந்தளிர் கொய்து கொண்டு உப்பின்று

நீர் உலையாக ஏற்றி மோரின்று”[25]

என்ற அடிகளின் மூலம் தம் மனைவி, மக்களின் நிலையையும் எடுத்துக் கூறி அத்தகைய சூழலிலும் முகம் மாறுபட்டுத் தரும் பரிசிலை நான் ஏற்க மாட்டேன். அன்போடும் விருப்பத்தோடும் தருகின்ற குன்றிமணி அளவு பரிசு

கொடுப்பினும் அதனை மன மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வேன் என்று கூறியதை,

‘‘உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும்

தவிர்ந்து விடு பரிசில் கொள்ளலென் உவந்து நீ

இன்புற விடுதியாயின் சிறிது

குன்றி கொள்வல் கூர்வேற் குமண’’[26]

என்ற பாடல் உணர்த்துகின்றது. இதன் மூலம் வறுமையிலும் புலவர் பெருமக்கள் செம்மையோடும் நற்பண்பு நலன்களோடும் விளங்கியுள்ள பான்மையை உணர முடிகிறது.

பாணரும் கூத்தரும் எப்போதும் கடும்பசியோடு வாழ்கின்றவர்கள். இவர்கள் பல நாட்கள் உணவு இல்லாமல் துன்புற்று உழலுகின்றனர் என்பதை,

‘‘அலந்தலை உன்னத்து அங்கவடு பொருந்திச்

சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து

நிலம் பைதற்ற புலங்கெடு காலையும்

வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண்

மன்றம் போந்து மறுகுசிறைபாடும்

வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்

பொன்செய் புனைஇழை ஒலிப்பப் பெரிதுவந்து

நெஞ்சுமலி உவகையர் உண்டுமலிந்தாடச்

சிறுமகிழானும் பெருங்கலம் வீசும்

போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ’’[27]

என்றும்,

‘‘உண்ணா வறுங்கெடும்பு உய்தல் வேண்டின்

இன்னே சென்மதி நீயே சென்று அவன்

பகைப்புலம் படரா அளவை நின்

பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே”[28]

என்ற பாடலடிகளின் மூலம் உணர முடிகின்றது. கலையறிவு நிரம்பப் பெற்ற இவர்கள் பொருள் வளம் பெறாத வாழ்க்கை நிலையை இது காட்டுகின்றது. இதனால் தாங்கள் கற்ற கல்வியை வெறுக்கச் செய்தனர். இவ்வாறு இருக்கும் போதும் தங்கள் வறுமைக்குப் பிறரைக் காரணம் காட்டாத இவர்களின் ஆளுமைப்பண்பு புலப்படுகின்றது.

பாணர் வீட்டில் வறுமை காரணமாக அவர்களின் மனைவி பசியினால் சுருங்கி, இழைத்த உடலையும் வளையல்கள் கழன்று ஓடும்படியான கையையும் உடையவர்களாக இருந்தனர். சமைத்து உண்பதற்குப் பொருள் இல்லாமல் வறுமையில் தவித்த பாணரின் மனைவி குப்பையில் முளைத்த வேளைக் கீரையைக் கொண்டு உப்பு இல்லாமல் சமைத்துப் பிறர் காணாத வண்ணம் வீட்டு வாயிலை அடைத்து தன்னுடைய சுற்றத்துடன் உண்டனர் என்பதை,

“ஒல்குபசி உழந்த ஒடுங்குநண் மருங்குல்

வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைந்த

குப்பை வேளை உப்பிலி வெந்ததை

மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து

இரும்பேர் ஒக்கலொ டொருங்குடன் மிசையும்

அழிபசி வருத்தம் வீடப் பொழிகவுள்”[29]

என்ற அடிகளின் வாயிலாகத் தம் வறுமைத்துயரால் துன்புற்றாலும் தன் சுற்றத்தையும் தன்னை நம்பியுள்ளோரையும் கைவிடாத ஆளுமைப் பண்பு புலப்படுகின்றது.

### 2.5.5. சுற்றத்தாரைப் பாரமாகக் கருத வைக்கும் வறுமை

சுற்றத்தாரைப் பாதுகாத்தல் எளியவர்க்கு ஒரு பாரமாக இருந்ததும், அப்படிப்பட்ட பாரமும் பசியும் தமக்கு இல்லை என்று ஒரு புலவர் கூறுவதும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது.

“கடாஅ யானைக் கலிமான் பேக

பசித்தும் வாரேம் பாரமும் இலமே”[30]

தற்காலத்தில் போதிய வருமானம் இன்றிக் குடும்பத்தினரின் தேவைகளைப் புரிந்து கொண்டு இருந்தாலும் அதை நிறைவேற்ற இயலாதவர்கள் குடும்பத்தைப் பாரம் என்று கருதுவதைக் குடும்பப் பாரத்தைச் சுமந்து கொண்டு இருக்கிறேன் என்று பேச்சு வழக்கில் குறிப்பிடுவர். பசியும் பிணியும் இல்லாத நாடே சிறந்தது.

“உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்

சேரா தியல்வது நாடு”[31]

என்பதால் அவை மூன்றும் நீங்க வேண்டும் என்றே சான்றோர் விரும்பினர்.

“பசியும் பிணியும் பகையும் நீங்கி

வசியும் வளனும் சுரக்க எனவாழ்த்தி”[32]

என்பதில் பசியே பிணியாகவும் பகையாகவும் வறுமையாளர்க்குத் தென்பட்டது. பசிப்பிணிக்கு மருத்துவம் உணவு என்பது போல பசிப்பகையைப் போக்கவும் உணவே ஆயுதமாகவும் அடைக்கலமாகவும் கருதப்பட்டது.

## 2.5.6. வறுமை நீக்கும் வழி

“சமுதாயத்தில் தான் மட்டும் உயர்ந்தால் பலனில்லை; சமுதாயமே உயர வேண்டும். அதற்குச் சிறந்த வழியாக அறநூல்கள் கண்டது. உள்ளோர் இல்லார்க்கு ஈதலாகும்”[33] என்பார் ச.சிவகாமி. இயன்ற அளவில், இல்லை என்று வந்தோர்க்குத் தருவது, செல்வம் பெற்றோரின் கடமையாக வலியுறுத்தப்பட்டதும் வறுமை நீக்கும் வழியாகும்.

“இல்லா இடத்தும் இயைந்த அளவினால்

உள்ள இடம் போல் பெரிதுவந்து – மெல்லக்

கொடையொடு பட்ட குணனுடைய மாந்தர்க்கு

அடையாவாம் ஆண்டைக் கதவு”[34]

என்பன கொடையின் பயனால் கிடைக்கும் புகழை விவரிக்கின்றன.

### 2.5.7. பசிப்பகையைப் போக்கும் உணவு

பசியைப் பகையாகக் கருதி அதை நீக்கும் ஒருவனை உலகம் வாழ்த்தும்.

''நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே''[35]

என்று ஈர்ந்தூர் கிழான் தோயன் என்னும் வள்ளலை மதுரைக் குமரனார் பாராட்டுவதற்கு அவன் பாணருடைய பசியைப் பகையாகக் கருதி உடனே நீக்குபவன் என்பதே காரணமாகியது.

''ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவாய் இரவல!''[36]

சோழன் நலங்கிள்ளியும் வல்லார் கிழான் பண்ணனும் இதற்காகப் பாராட்டப்படுகின்றனர்.

''பசிபடு மருங்கலைக் கசிபுகை தொகாஅக்
காணலென் கொல்''[37]

அதனால் பசியைப் பகையாகக் கருதி உடனே உணவளித்து அதை அகற்றுவர்.

### 2.5.8. கொடையும் மறுமைப் பயனும்

''பொருளாதார ஏற்றத் தாழ்வினைப் போக்குவதற்கு அக்காலத்தார் எடுத்துச் சொன்ன வழியே கொடை என்பதாகும். பொருள் கொடுத்தால் மேலுலகம் செல்லலாம் என்று சமய வாழ்விற்கும் அது வழிகோலியது. சமுதாய வாழ்விலும் பிறர்க்குக் கொடுத்துப் புகழடைய வேண்டும் எனும் கொள்கை நிலை பெற்றிருந்தது. எனவே சங்க காலச் சமுதாய, பொருளாதார, சமய

வாழ்வில் கொடைப் பண்பு இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது எனலாம்”[38] என்கிறார் நா.செயராமன். இதனால் கொடைப் பழக்கம் வறுமையை ஒழிக்கும் ஒரு முயற்சியாக இருந்து வந்துள்ளது என்று கொள்ளலாம். புலவர்களும் கொடையால் புகழ் பெறலாம் என வலியுறுத்தியமைக்கும் அவரது வறுமை நிலை மாறும் என்ற நம்பிக்கை காரமணாய் இருந்திருக்கிறது.

மறுமையில் பயன் பெறலாம் என்பது கொடை தருபவர்க்குச் சமயம் கற்பிக்கும் ஒரு கருத்து. ஆனால் சங்க கால மன்னர்களும் வள்ளல்களும் மறுமை கருதி தராமல் பிறரது வறுமை நீக்கவே கொடையைப் பயன்படுத்தி உள்ளனர்.

“கொடை என்பது விற்பனை போன்ற முழு உடைமை உரிமை மாற்றம் ஆகும். ஆனால், விற்பனை மறுபயனுடன் செய்யப்படுவது; கொடை மறுபயனின்றிச் செய்யப்படுவது”[39] என்று வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

## 2.5.9. வழியின் இயல்பு

வறுமை நிலையில் இருந்த பாணன் தன்னை ஆதரிப்போர் யாராவது உள்ளனரா என்று நினைத்து தன்னுடைய சுற்றத்துடன் சென்றனர். வெயிலினது கொடுமையால் நீர் வற்றிய ஆற்றினது சூடேறிய கருமணல் மீதும், வெயிலின் வெப்பம் ஏறிய வெவ்விய பரல்களின் மீதும் பாதம் கிழிய நடந்து செல்கின்றனர். வெப்பக் கொடுமையினால் காட்டு வழியில் உள்ள இலை உதிர்ந்து நிற்கும் கடப்பமரத்தின் வரி நிழலில் பாணர் தன் சுற்றத்துடன் தங்கியதை,

“மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போலச்
செல்புனல் உழந்த சேய்வரல் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்ந்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கறல்
அயில்உருப் பனைய வாகி ஐதுநடந்து

வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப

வேனில் நின்ற வெம்பத வழிநாட்

காலைஞா யிற்றுக் கதிர்கடா வுறுப்பப்

பாலை நின்ற பாலை நெடுவழிச்

சுரன்முதல் மராஅத்த வரிநிழல் அசைஇ''[40]

என்ற அடிகளின் மூலம் அறியலாம். வயதில் முதிர்ந்த மூத்த பாணர் கடந்து வந்த நெடுந்தொலைவினை,

''ஆனினம் கலித்த அதர்பல கடந்து

''மானினம் கலித்த மலைபின் ஒழிய

மீனினம் கலித்த துறைபல நீந்தி

உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்

சிதாஅர் உடுக்கை மதாஅரிப் பாண''[41]

என்பதன் மூலம் அறியலாம். யானைகள் உலாவரும் வழியை உடைய காட்டில் இலைகள் உதிர்ந்து விட்டமையால் மேலே வலை கட்டினாற் போன்ற வரி நிழலில் தங்கியிருந்தான் பொருநர் என்பதை,

''களிறு வழங்கதர்க் காணத் தல்கி

இலையில் மராஅத் தெவ்வந் தாங்கி

வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கின்''[42]

என்பதனை அறியலாம். கூத்தன் கடந்து வந்த வழியின் இயல்பை,

''கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பில்

படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்

எடுத்துநிறுத் தன்ன இருட்டருஞ் சிறுநெறி

தொடுத்த வாளியர் துணைபுணர் கானவர்

இடுக்கண் செய்யா தியங்குநர் இயக்கும்

அடுக்கல் மீமிசை அருப்பம் பேணாது

இடிச்சுர நிவப்பின் இயவுக்கொண் டொழுகி”[43]

என்றும்,

“கயம்புக் கன்ன பயன்படு தண்ணிழல்

புனல்கால் கழீஇய மணல்வார் புறவில்

புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்

கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ”[44]

என்ற அடிகளில் உயரமான கடுக்காய் மரங்கள் வளர்ந்த மலைச்சாரலில் பரப்பி வைத்தது போல் காணப்படும் பாறையின் அருகில் உள்ள சிறிய வழியில், தொடுத்த அம்பினை உடையவராய் தம் மனைவியருடன் சேர்ந்து செல்லும் கானவர், வழிப்போக்கர்களுக்குத் துன்பம் நேராதவண்ணம் கடினமான அரிய வழியில் கூத்தன் தன்னுடைய சுற்றத்துடன் கடந்து வந்தான் என்பதை அறிய முடிகின்றது. இவ்வாறு இவர்கள் காட்டு வழியிலும், ஆற்றுப்பாதையிலும் வெயிலிலும் தன்னுடைய சுற்றம் முழுவதையும் அழைத்துக் கொண்டு எந்தவித பயமும் இன்றி அவர்களுக்குத் தலைவனாய் இருந்து ஒரு சிறந்த வழிகாட்டியாய் அழைத்து வரும் பாணர்களின் ஆளுமையை உணர முடிகின்றது.

## 2.5.10. கலைஞர்கள் எதிர்ப்படுதல்

பாணர், பொருநர், கூத்தர், விறலியர், புலவர் போன்றோர் பிறரைச் சார்ந்து வாழும் வாழ்க்கையை வாழ்ந்தனர். செல்வமும் ஈகைப்பண்பும் உடையோர் எவ்விடங்களில் இருக்கின்றார்களோ அவ்விடங்களை நாடிச் செல்வோராக இருவர்கள் இருந்தனர். இதனை,

“ஒருதிசை ஒருவனைஉள்ளி நாற்றிசைப்

பலரும் வருவர் பரிசில்”[45]

என்ற பாடல் அடியின் மூலம் அறியலாம். குன்றும் மலையும் என்று பல வழிகளையும் கடந்தனர். செல்லும் இடங்களில் எல்லாம் யாழ், குழல்,

தண்ணுமை முதலான இசைக் கருவிகள் வாசித்தவாறு நடந்து சென்றனர். தங்களை உரிய வள்ளலிடம் ஆற்றுப்படுத்துபவர் யாரேனும் உள்ளனரோ என்று எண்ணிக்கொண்டே செல்கின்றனர்.

வள்ளல்களிடம் பரிசு பெற்று வரும் பாணன் தன்னெதிரில் வந்த வறுமை நிலையில் உள்ள பாணனைப் பார்த்து, நீ செய்த நல்வினைப் பயனால் என்னை எதிரில் கண்டாய் என்று பரிசு பெற்று வந்த பாணர் கூறினார். இதனை,

''அறியா மையி னெறிதிரிந் தொராஅ

தாற்றெதிர்ப் படுதலு தோற்றதன் பயனே''[46]

என்றும்,

''உள்ளினிர் சேறிர் ஆயிற் பொழுதெதிர்ந்த

புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின்''[47]

என்ற அடிகளின் மூலம் வறுமை தீர்க்கும் வள்ளலைத் தேடிச்செல்லும் நீங்கள் என்னை எதிரில் கண்டதால் நன்னிமித்தம் பெற்றவர்களானீர் என்று பரிசில் பெற்ற பாணர் கூறுகின்றார்.

## 2.6. மனித நேயம்

மனித இனத்தின் இன்ப, துன்பங்களில் பங்கு கொள்ளும் உயரிய மனஉணர்வே மனித நேயமாகும். உயிரின ஒருமைப் பாட்டிற்கும் மனித இன வளர்ச்சிக்கும் சமுதாய மேம்பாட்டிற்கும் இம்மனித நேயப் பண்பே அடித்தளமாக அமைகிறது.

''மனித நேயம் என்பது அடுத்த மனிதனிடம் அன்பு காட்டுதல், அவனையும் தன்னைப் போல ஒருவன் என மதித்தல், சாதி, மதம், மொழி, நாடு ஆகிய கேடுகளைத் தாண்டி, மனிதனை மனிதன் என மதித்து அவனிடம் அன்பு காட்டுதல், உடனுறை மக்கட்கு உற்றுழி உதவுதல், ஏழைகளுக்கு இரங்குதல், பசிப்பிணி நீக்கி வறுமைப் பிடியிலிருந்து மக்களைக் காத்து அரவணைத்தல் எனப் பல முகங்கள் கொண்டது''[48] என்கிறார் தேனப்பன்.

வறுமை தந்த பசிப்பிணி நீங்கியபின் நிரந்தர தீர்வாகப் பொருளுதவி செய்ய நினைத்த மனிதநேயம் மிக்க மனிதர்களைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

“ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்

போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை

பண்பு எனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்

அன்பு எனப்படுவது தன்கிளை செறாஅமை”[49]

என்று வாழ்ந்த சமுதாயம் சங்க காலத்தின் சிறப்பாகும்.

## 2.7. ஆற்றுப்படுத்துதல்

பரிசில் பெற்ற பாணர், பெறாத பாணனைத் தம்மை ஆதரித்த வள்ளலின் பெருமையினையும் கொடைச்சிறப்பினையும் தான் பரிசுப் பெற்ற ஆளுமையையும் கூறி வள்ளல்களிடம் ஆற்றுப்படுத்துகின்றார். இதனை,

“பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்

இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ

நைவளம் பழுநிய நயந்தெரி பாலை

கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க

இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்

துனிகூர் எவ்வமொடு துயர் ஆற்றுப் படுப்ப

முனிவிகந் திருந்த முதுவாய் இரவல”[50]

மேலும்,

“நீயிரும்

இவணயந்த திருந்த இரும்பேர் ஒக்கல்

செம்மல் உள்ளமொடு செல்குவிர் ஆயின்”[51]

என்றும்,

“நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே”[52]

என்றும்,

“பல்வேற் றிரையற் படர்குவி ராயின்”[53]

என்பதன் மூலம் அறியலாம்.

கொல்லுகின்ற பசியாலே வருந்தி நிற்கும் நின்னுடைய கரிய பெரிய சுற்றத்துடன் தொன்று தொட்டு வந்த பசி உன்னை விட்டுச் செல்ல வேண்டும் என்றால் காலம் நீட்டிக்காமல் எழுந்திருப்பாயாக என்று பரிசில் பெற்ற பொருநர் பெறாத பொருநனை இவ்வாறு ஆற்றுப்படுத்தினாள். இதனை,

“ஆடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி வாழி ஏழின் கிழவ”[54].

கனி சொரிகின்ற காட்டிடத்தே அவற்றை உண்ணும் பொருட்டுச் சுற்றத்தோடு செல்லும் பறவையைப் போன்று நீங்களும் சுற்றத்தோடு செல்லுங்கள். நன்னன் தரும் பரிசில்கள் இவை என்று எண்ணி அப்பரிசில்களை நினைத்துச் செல்லுங்கள் என்று கூறி வழிப்படுத்தினான் என்பதை,

“கனிபொழி கானம் கிளையொ டுணீஇய
துனைபறை நிவக்கும் புள்ளின மான”[55]

என்றும்,

“நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு
உள்ளினிர் சேறிர் ஆயிற் பொழுதெதிர்ந்த”[56]

என்பதன் மூலம் பரிசு பெற்ற பாணன் தான் மட்டும் பரிசு பெற்றால் போதும் என்ற தன்னலமின்றிப் பொது நோக்கில் பரிசு பெறாத பாணரை ஆற்றுப்படுத்திய ஆளுமை உணர்வை அறியலாம்.

## 2.8. இரவலரின் உடல் தோற்றம்

உண்ண உணவு இல்லாத வறிய நிலையை உடல் வெளிப்படுத்தும் தன்மையைச் சங்க இலக்கியங்கள் பலவாறு குறிப்பிட்டுள்ளன. பாணர் முதலிய கலைஞர்கள் கூட்டமாக வாழும் இயல்பினர். ஓரிடத்தில் இருந்து மற்றோரிடம் செல்லும் பொழுதும் சுற்றத்தார் அனைவரையும் அழைத்துச் சென்றிருக்கின்றனர். சாப்பிட்டுப் பல நாட்கள் ஆனதன் வெளிப்பாடு உடலிலும் கண்களிலும் தெரிகின்றது. பசிக்காக உணவுண்பது மறந்து போய், பசி அவர்களைத் தின்னும் அளவிற்கு வறுமை வாட்டிய நிலையை அவர்களைக் காண்போர், அறிந்து கொண்டு அவர்களுக்கு உணவளிக்கின்றனர்.

ஒருவேளை உணவு கிடைப்பினும் பலவேளையும் பல நாட்களும் பசியின்றி வாழும் வகையில் பொருள் பெறவேண்டும் என்பதற்காகப் பல ஊர்களைக் கடந்து, காடு மலை என்றும் பாராமல் நடந்து செல்கின்றனர். வறுமை நிலையை எப்பாடுபட்டேனும் மாற்ற வேண்டும் என்ற எண்ணம் அவர்களை வழிநடத்துகிறது. தங்கள் உடல் இளைத்தாலும் ஊக்கத்துடன் வள்ளலை நாடிச் சென்றதை,

''இசையோன் புக்கென் இடும்பை தீர
எய்த்த மெய்யேன் எய்யே னாகி''[57]

என்று பொருநராற்றுப்படை புகல்கின்றது. பெரும்பாணாற்றுப்படை பாணனும் இளைத்த யாக்கையனாய் இருக்கிறான்.

''பழுமரம் தேடும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண''[58] (பெரும்பாண்.20-22)

என்பது இளைத்த தன்மையைக் குறிக்கும். தகுந்த உணவின்றேல் உடல் இளைப்பது இயல்பு. புல்லென் யாக்கை என்பதும் உடல் இளைப்பைக் குறித்து வந்தது. பசியால் அழுகின்ற குழந்தைகளும் சுற்றத்தினரும் சூழ்ந்து வர, பெரும்பாணன் பொலிவு இழந்த உடம்பொடு ஓரிடத்திலிருந்து உணவு கிடைக்கும் வேறு இடத்தைத் தேடி அலைகின்ற கால்களை உடையவனாய் இருக்கிறான்.

வறுமையை நீக்குவார் யாரெனத் தேடிச் செல்லும் பொழுது அவருக்கு வள்ளல் இருக்கும் இடத்தை அறிமுகப்படுத்துவோரை ஆற்றுப்படுத்துவோர் என்பர். அத்தகைய ஆற்றுப்படுத்தும் பணியை வறுமையே ஏற்றுக் கொண்டு சிறுபாணனை ஓரிடத்தில் தங்கவிடாது நடக்கச் செய்கிறது.

“இயங்கா வையத்து நள்ளியோர் நசைஇத்
துனிகூர் எவ்வமொடு துயர்ஆற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவாய் இரவல”[59]

உலக வாழ்க்கையை வெறுத்துவிடும்படி செய்யும் வலிமை உடைய வறுமை, மாபெரும் துன்பத்தைத் தருவதால் ‘துனிகூர் எவ்வம்’ எனப்பட்டது. இனி யாரேனும் வள்ளலைத் தேடிச் சென்றே ஆக வேண்டும் என்ற நிலையில் துயரம் தரும் வறுமை சிறுபாணனை ஆற்றுப்படுத்துகின்றது.

சத்து அற்ற உணவு ஆயினும் அதுவும் கிடைக்கப் பெறாமல் கடும்பசி வாட்டியதால் உடலில் எலும்புகள் வெளித்தெரியும் சுற்றத்தினருடன் பாணன் நொந்து போய் இருக்கிறான்.

“உடும்பு உரித்து அன்ன என்பெழு மருங்கின்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்து
ஈங்கெவன் செய்தியோ பாண!”[60]

என்று கோவூர் கிழார் பாணனிடம் வினவுகிறார். சுற்றத்தினர் பசியால் துன்புறுவதை ஆலந்தூர் கிழாரும் கண்டு,

“பூட்கை இல்லோன் யாக்கை போலப்
பெரும்புல் லென்ற விரும்பேர் ஒக்கலை”[61]

என்று கூறி வருந்துகிறார்.

பூட்கை என்பது கொள்கை. நல்ல கொள்கையை மேற்கொள்ளாதவன் யாக்கை வாடியிருக்கும் என்பதை இவ்வரிகள் உணர்த்துகின்றன. பாணருடைய

சுற்றம் ‘ஒக்கல்’ என்றும் ‘கடும்பு’ என்றும் கூறப்படுகிறது. அவர்கள் எண்ணிக்கையில் அதிகம் இருந்ததால் ‘இரும்பேர் ஒக்கல்’ எனப்பட்டனர். இரவலராகச் செல்லும் சுற்றத்தினர் அனைவருமே பசியால் களைப்பால், இரங்கிப் போய் உள்ளனர். இவர்களைக் காணும் யாவருமே முதலில் வயிற்றுப் பசி நீக்குதலையே விரும்பி விருந்தோம்பல் செய்தனர்.

## 2.9. பரிசில் வாழ்வு

இல்லறம் என்பதற்கு வீட்டிலிருந்து வாழும் அறநெறி என்று பொருள். இல்லற வாழ்வே மக்களை மாக்களினின்றும் வேறு பிரித்து உயர்த்துவதாகும். இன்றைய உலகப் பெரும் புலவர்களோடு ஒப்பிடும் போது புலமையும் பெருமையும் உடையவர்கள் சங்க காலப் புலவர்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த சங்ககாலப் புலவர்களின் வாழ்வில் வறுமையானது வாட்டி வதைத்ததால், புரவலர்களை நாடி பரிசில் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய சூழல் ஏற்பட்டது. கவிதை படைப்பதைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த புலவர் கூட்டம், பொருளாதார நிலைகளில் புரவலர்களைச் சார்ந்து நிற்கும் நிலை ஏற்பட்டது.

‘‘மலையி னிழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை யிழதரும் பல்யாறு போல
புலவ ரெல்லாம் நின்னோக் கினரே’’[62]

என்ற புறநானூற்றுப் பாடல், புலவர் புரவலர் பற்றிய உறவுநிலையைப் பேசுகிறது. புலவர்களின் வாழ்விற்கு அடித்தளமாகவும் ஊன்றுகோலாகவும் புரவலர்கள் அமைகின்றனர் என்ற கருத்தை இப்பாடல் விளக்குகின்றது. கவிஞர்கள் தங்கள் வாழ்க்கையினை மேற்கொள்வதற்காகப் பழுமரம் தேடிச் செல்லும் பறவைகளாகவும், கடலை நோக்கி விரைந்து செல்லும் ஆறுகளாகவும் புரவலரை நாடிச் சென்று பரிசில் வாழ்க்கையினை மேற்கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. ஆனால், வறுமையானது வாடினாலும் வாய்மை தவறாமல் வாழ்ந்துள்ளனர். வாழ்விலே பொய்க் கூறாமல் வாழ்ந்தது மட்டுமல்லாமல், கிடைத்த பொருளைத் தமக்கென வைத்துக் கொள்ளாமல் பலருக்கும் சமமாகக் கொடுத்து வாழ்தலே சிறந்த அறம் என்ற உயர்ந்த நெறியினைக் கற்றுக் கொடுக்கிறது புலவர்களின் வாழ்வு முறைகள். அதோடு மட்டுமல்லாமல்,

நாட்டின் தலைவர்களான புரவலர்களது தனிவாழ்விலும் பொது வாழ்விலும் தலையிட்டு அறம் நிலைநாட்டினார்கள் சங்க காலப் புலவர்கள். பிறருக்கு வாழ்க்கைத் தெளிவூட்டிய புலவர்கள் தங்கள் வாழ்விலும் தெளிவான காட்சி பெற்றிருந்தார்கள். ‘ஈன்றாள் பசி காண்பானாயினும் சான்றோர் பழிக்கும் வினை செய்தலாகாது’ என்ற வாழ்வின் கோட்பாட்டினைப் பெருஞ்சித்திரனாரது உறுதிப்பாட்டில் காண முடிகிறது.

தம்மைச் சுமந்து பெற்ற தாய், வாழ்வை வெறுத்துப் புலம்பிய நோதகு காட்சியைப் புலவர் கண்டார். ஆயினும் தகுதியற்ற மாக்களிடம் சென்று அவர் தம்மைப் பாரி என்றும் காரி என்றும் செய்யாதனவற்றை கூறிப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெறக் கூடாது என்ற உயர்ந்த எண்ணத்தை உடையவராக விளங்கினர் சங்க காலப் புலவர்கள்.

“வறுமை காரணமாகப் புலவரால் விருந்தினரை ஓம்ப முடியவில்லை. விருந்தினர் தம் வருகை கண்டு உள்ளம் சாம்பி ஒளிந்து கொள்ள வேண்டியுள்ளது. விருந்து கண்டு ஒளிக்கும் வாழ்க்கையைத் திருந்தா வாழ்க்கை என்று பண்டையோர் கொண்டனர். பெருங்குன்றூர் கிழார் திருந்திய வாழ்க்கை நடத்த விரும்பினர். அவர் விருப்பம் நிறைவேறுவதற்கு இடையூறாய் அமைந்த வறுமையினைத் தொலைத்தல் வேண்டும் என்று சோழனிடம் கூறினார்”[63].

மேலும்,

“தனிநலம் அன்றிப் பொதுநலமே புலவர்தம் பரிசில் நாட்டத்திற்குக் காரணம் என்பதை மற்றொரு வகையாலும் நிலைநாட்டலாம்”[64].

புலமையும் உணர்வுமே வாழ்வாகக் கொண்ட புலவர், பொருள் கிடைத்த போது பொதுநலம் பேணினர் என்பதை இப்பாடல் மிகத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

புலவர்கள் தமது புலமையினை,

“அறுகுளத்த உகுத்தும், அகல் வயல் பொழிந்தும்,
உறும் இடத்து உதவாது உவர் நிலம் ஊட்டியும்,
வரையா மரபின் மாரி போல,

கடாஅ யானைக் கழற் காற் பேகன்

கொடைமடம் படுதல் அல்லது,

படைமடம் படான், பிறர் படை மயக்குறினே”[65].

என்ற பாடலடிகள் வாயிலாகப், பரணர் வியந்து பேகனின் கொடை நலத்தை மழையினைப் போலத் தன்னிடத்துப் பரிசில் பெற வருபவரை வேண்டியவர், வேண்டாதவர், வலியோர், மெலியோர், புதியோர், பழையோர் எனக் கருதாது வழங்குதலைக் கொடை மடம் என்று கூறிய சங்க காலப் புலவர்கள், வெறும் பரிசு பொருட்களாக மட்டும் வள்ளல்களை நாடித் தமது புலமையினை வெளிப்படுத்தவில்லை. பரிசில் பெறுவது மட்டுமே நோக்கமாகக் கொள்ளாமல், பொதுநலம் சார்ந்து, மன்னனது அகவாழ்விலும் நெறிபடுத்திய பெருமை, புலமை சங்க காலப் புலவர்களுக்கு இருந்துள்ளது என்பதை,

“நின்றும் நின் மலையும் பாட, இன்னாது

இருத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்,

முல்லையகம் நனைப்ப விம்பி

குழல் இனைவது போல அழுதனள், பெரிதே”[66]

விளக்குகிறது. இவற்றில் தன் மனைவி கண்ணகியை விட்டுப் பிரிந்து நெறி மாறிச் சென்ற அரசனை (பேகன்) இடித்துரைத்துக் கபிலர் நன்னெறித்துவது யாருக்கும் அஞ்சாதத்தன்மையினை வெளிப்படுத்துகிறது.

சங்க காலப் புலவர்கள் தங்களைப் பரிசிலர்களாக அடையாளப் படுத்திக் கொள்கின்றனர். சங்க இலக்கியத்தில் பரிசிலர் பற்றிய செய்திகள் பரவலாகக் காணப்பெறுகின்றன. இவர்கள் மன்னர்கள், சீறூர் மன்னர்கள், இனக்குழுத் தலைவர்கள் போன்றோரை நாடிச் சென்று அவர்கள் அளிக்கும் பொருள்களைப் - பரிசில்களைப் பெற்றுத் தமது வாழ்க்கையை நடத்தியுள்ளனர். இதனை,

“உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்

கடவது அண்மையின் கையறவு உடைத்து என

ஆண்டு செய் நுகர்ச்சி ஈண்டும் கூடலின்

நின்நாடு உள்ளுவர் பரிசிலர்''[67]

எனவே,

''பரிசிலர் இரப்பின்''[68]

''முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்''[69]

''வான்ஏறு புரையும் நின்தால் நிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வம்''[70]

போன்ற புறப்பாடல்கள் புலவர்களின் பரிசில் வாழ்க்கையினை மேற்கொண்டதை எடுத்துக் கூறுகின்றன. பொதுவாகப் பரிசிலர் என்போர் பரிசில் வேண்டி இரப்போராக இருந்துள்ளனர். இவ்வாறு இரப்போர்க்கு ஈதல் புகழ்ச்சிக்கு உரியதாக விளங்கியதை,

''பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த
பல்மீன் நடுவண் பால்மதி போல
இன்நகை ஆடலோடு இருந்தோற்குறுகி''[71]

என்று சிறுபாணாற்றுப்படை அடிகள் காட்டுகின்றன. புறநானூற்றுப் பாடல் ஒன்று பரிசிலர் வாழ்க்கையின் தன்மை எத்தகையது என்று வரையறுக்கிறது.

தம் வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை ஈட்டி இனிமையான வாழ்க்கையினை மேற்கொள்ள வசதி பெறாத புலவர், ஈகையிற் சிறந்த வள்ளல்கள் முதலியவர்களை நாடிச் சென்று அவர்கள் மதித்தளித்த பரிசில் பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டிய நிலையில் வாழ்ந்தனர்.

பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் தமது வறுமைத் துன்பத்தைக் குமண வள்ளலிடம் 'எனது மனைக்கண் உண்ணுதற்குரிய உணவில்லாமையால், என் இளம் புதல்வன் தாய்ப்பாலும் பெறாது கூழையும் சோற்றையும் விரும்பி, அடுக்களையிலுள்ள கலங்களைத் திறந்து பார்த்து, ஒன்றும் இல்லாததால் அழுகின்றான். அவனுடைய அழுகையை நிறுத்த என் மனைவி, 'அதோ புலி வருகின்றது!' என அச்சுறுத்தியும், 'வானத்தில் அம்புலியைப் பார்! என

விளையாட்டுக் காட்டியும் அவன் அழுகை நிறுத்தாமைக்கு வருந்தி, 'நின்னுடைய பசி வருத்தத்தை நின் தந்தைக்குக் காட்டுவாயாக,' எனச் சொல்லி மனம் கவல்கின்றாள்'. இத்தகைய வறுமையோடு இருக்கும் புலவர் குமணன் அளித்த பரிசிற் பொருளைத் தமக்கென இறுக வைத்துக்கொள்ளாமல் தம் போல வறுமையோடு இருக்கும் யாவருக்கும் வரையாது வழங்குமாறு தம் மனைவிக்கு அறிவுறுத்துவது தமிழ்ப் புலவர்களின் வள்ளன்மை இனிது புலனாகிறது.

சங்க இலக்கியங்களில் புலவர்கள் புலமையை மட்டுமே தொழிலாகக் கொள்ளாமல் பாணர்களைப் போலவே இசைகருவிகளை இசைத்தல், ஊடல் நீக்குதல் போன்ற தொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர்.

## 2.9.1. புலவர்களின் மனநிலை

'ஈதல் இசைபட வாழ்தல்' என்ற கொள்கையினை உடையோராய் மன்னரும் புலவரும் வாழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. பரிசினை நல்கின்ற புரவலர்கள் பிறருக்குக் கொடுப்பதினால் தனக்கு நன்மை ஏற்படும் என்று பலன் கருதிக் கொடுத்திலர். மன்னன் இத்தகைய தன்மை பெற்றவனாயிருப்பதைக் காட்டிலும், பரிசில் வாழ்க்கையினை மேற்கொள்கின்ற புலவர்களின் உள்ளமோ அதைவிட இனிது.

புலமையினைப் பெரியதாய் உடைய பெருஞ்சித்திரனார் என்ற புலவர் வறுமையில் வாழ்ந்தவர். குமண வள்ளலிடம் பெற்ற பரிசிலைத் தனக்கென வைத்து இன்பம் கொள்ளாமல் மனைவியிடம் இந்தப் பொருட்களையெல்லாம் உன்னை விரும்புகின்றவர்களுக்கும் நீ விரும்புகின்றவர்களுக்கும் உனது உறவினர்களுக்கும் பசியால் வருந்திய போது உதவிய நல்லோர்களுக்கும் மற்றும் இவர்கள் நமக்கு உறவினர்கள், உறவினர்கள் அல்லாதவர் என்று நினைக்காமல் நாம் வளமாக வாழ்வதற்கு இந்தப் பொருளைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் எண்ணாமல் இப்பொருளை இவர்களுக்குக் கொடுக்கலாமா, வேண்டாமா என்று என்னிடமும் கேட்காமல் எல்லோருக்கும் கொடுப்பாயாக என்கின்றார்.

''நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்

பல்மான் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்

கடும்பின் கடும் பசி தீர யாழ நின்

நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்

இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது

வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்

எல்லோர்க்கும் கொடுமதி-மனை கிழவோயே

பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்

திருந்து வேல் குமணன் நல்கிய வளனே”[72].

எனவே பழந்தமிழ்ப்புலவர் தாம் கற்ற கல்வியைத் தமிழ் மக்களுக்குப் பயன்படுத்தினர். தம் அறிவுரைகளை மகிழ்ந்து கேட்போரை மதித்தனர். தாம் கூறும் அறவுரைகளைக் கேட்டுணரும் அறிவினைப் பெறாதார் மன்னராயினும், அவரை மதியாது இகழ்ந்தனர். ‘நற்பொருள்களை விளங்க எடுத்துரைத்தாலும் ஒரு சிறிதும் விளங்கிக் கொள்ளமாட்டாத பெருமையில்லாத மன்னர்களை எம் இனத்தவராகிய புலவர்கள் பாடமாட்டார்கள்’ என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவர் கூறுகின்றார்.

ஆவூர் மூலங்கிழார் தமது பாடலில் பரிசில் தராமல் காலம் நீட்டித்த பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை அறிவுறுத்தியுள்ளார். (புறம்.196) புலவர்கள் ஒழுக்க நெறிகள், தனிமனித ஆளமை, படைப்பாற்றல் ஆகியனவை பெற்றுள்ளதால் சமுதாய அமைப்பில் தனக்கென உயரிய இடத்தைப் பெற்றுள்ளனர்.

“புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்

வலவன் ஏவா வானஊர்தி

எய்துப”[73]

என்ற பெருமித உணர்வோடு திகழ்ந்தனர் புலவர்கள். புலவர்களின் புலமையை மதிக்காதவர்களின் பரிசுகளை மறுத்துள்ளனர். சங்க காலப் புலவர்கள் தன்மானம் மிக்கவர்கள், தம் நேர்மை உள்ளத்தையும் சான்றாண்மையையும் பொன்னுக்காக இழந்தவர் அல்லர். மன்னர்களின் பரிசைப் பெற்று வாழ்ந்தவரும் மதியாது வழங்கிய பொருளை எவ்வளவுதான் மதிப்புடையதாக இருந்தாலும்

அதனை வாங்க மறுத்தனர். பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் குமணனை நோக்கி,

"உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறுபெறினும்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலென்: உவந்து நீ
இன்புற விடுதியாயின், சிறிது
குன்றியும் கொள்வல், கூர்வேல் குமண!"[74]

என்று தம் உணர்ச்சி பொங்கக் கூறியுள்ளார். தமிழுணர்ச்சியும் புலமைப் பற்றும் இல்லாதார் கொடுக்கும் செல்வத்தைச் சிறிதும் விரும்பாதவர். அவர் செல்வத்தைப் போற்றாது நல்லறிவுடையோர் வறுமையைப் போற்றினர்.

எத்தனைத் துன்பம் வந்தாலும் தங்களது பெருந்தன்மைக்குப் பொருந்தாத நிலையில் செல்வர்பாற் பணிந்து ஒழுகுதலைப் புலவர்கள் ஒரு சிறிதும் விரும்பமாட்டார்கள். தமக்குப் பிறர் தரும் பொருள் அளவால் பெரிதாயினும், அன்பு இல்லையென்றாலும் காலம் தாழ்த்தி வரிசையறியாதும் வழங்கப் பெற்றால், அதனை வெறுத்து விலக்குதலும் சிறிதாய் இருந்தாலும் தம் புலமைத் திறம் உணர்ந்து வரிசையறிந்து கொடுக்கப் பெற்றால் அப்பொருளை ஆர்வத்துடன் ஏற்றுக்கொள்ளுதலும் பெரும் புலவர்களின் இயல்பாக உள்ளது.

அரசர்கள் புலவர்களிடத்து அன்புடன் இருந்தது போல புலவர்களும் அரசர்களிடத்துப் பேரன்பு படைத்தவர்களாய் இருந்தனர். புலவர்களின் வறுமையைப் போக்கிய வள்ளல்கள் இறந்தவுடன் நன்றியினை மறவா பண்பினைப் பெற்றிருந்தனர். பாரி இறந்ததும் பகைவரால் பறம்பு மலை கைப்பற்றப்பட்டது. அவனுடன் நெடுங்காலம் வாழ்ந்த கபிலர் பாரி மகளிரை அழைத்துக் கொண்டு தகுந்த மணம் முடிக்க முயன்றார். நண்பன் பாரியின் மகளிரைத் தம் மகளிராகவே கபிலர் பாதுகாத்தார் என்பது,

"நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழன் இவர என் மகளிர்
அந்தணன், புலவன், கொண்டு வந்தனனே"[75]

என்ற பாடலடிகள் மூலம் பரிசில் பெற்றால் போதும் என்றில்லாமல் பாச உணர்வினைப் பெற்றுத் திகழ்ந்தனர் சங்க காலப் புலவர்கள்.

### 2.9.2. பிறருக்கு உதவும் மனப்பாங்கு

எல்லோரும் மகிழ்ச்சியோடு வாழ உலகத்திலே பல்வேறு வழிமுறைகள் உண்டு. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் புலவர் கிடைத்தவற்றை எல்லோருக்கும் சமமாகப் பகுத்துக் கொடுத்து உண்ண வேண்டும். உழைக்காமல் இருக்க கூடாது யாரையும் துன்புறுத்தக் கூடாது. எத்தகைய அளவிற்குப் பொருள் கிடைத்தாலும் பிறருக்குத் தீமை தரும் செயல்களைச் செய்யக் கூடாது. இதனை,

“உண்டால் அம்ம! இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவு இலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சி
புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனையர் ஆகி
தமக்கு என முயலா நோன் தாள்
பிறர்க்கு என முயலுநர் உண்மையானே”[76]

எனவே, தன்னலமின்றிப் பிறரின் நன்மைக்காக உழைக்க வேண்டும் என்பதை இப்பாடல் கூறுகிறது. திருவள்ளுவரும்,

“பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை”[77]

என்பதே வள்ளுவர் வாய்மொழி ஆகும். கிடைத்த உணவைத் தாமே வைத்துக் கொள்ளாமல் பலருக்கும் கொடுத்து உதவுதலே சிறந்த அறமாகும் என்று கூறுகிறார்.

### 2.9.3. புலவர்கள் வாய்மை தவறாமை

சங்க காலத்தில் புலவர்கள் தங்கள் வாழ்க்கையில் வறுமை ஏற்பட்டாலும் ஒரு போதும் பொய் கூறாமல் வாழ்ந்துள்ளனர் என்பதற்கு அடையாளமாக,

''வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்

மெய் கூறுவல்''[78]

மேலும்,

''செய்யா கூறிக் கிளத்தல்

எய்யாதாகின்று, எம் சிறுசெந் நாவே''[79]

என்று புறநானூற்று அடிகள் சங்கப் புலவர்கள் எந்நிலையிலும் வாய்மை தவறாமல் வாழ்ந்துள்ளனர் என்பதை எடுத்துக்ளகாட்டுகின்றன. இதன் வாயிலாக மக்கள் தம் அன்றாட வாழ்க்கையில் வாய்மையைக் கடைபிடிக்க வேண்டும் என்பது மறைமுகமாக உணர்த்தப்படுகிறது.

மேலும் அரசர்கள், புலவர்களின் உறவு கிடைப்பதையே பெரும்பேறாக நினைத்தனர். அவர்கள் புகழ்ந்து பாடுவதற்கு ஏற்ற வகையில் நடந்து கொள்வதே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். எனவே சங்க காலப் புலவர்கள் வறுமையால் வாடினாலும் அவரது வயிற்றை வளர்ப்பதற்காக யாரையும் பாடித் தம் புலமையை விற்றவர் அல்லர். வீரமன்னரைப் புகழ்ந்தனர். அறவழியில் தவறான ஆட்சி புரியும் மன்னனை இகழ்ந்தும் உள்ளனர். அரசர்களும் புலவர்களை மதித்துப் போற்றினர் அத்தகைய அளவிற்கு வாழ்க்கையிலே நேர்மையுடனும் பொய் கூறாமல் வாழ்ந்துள்ளனர் என்பது சங்க இலக்கியங்கள் பாடலின் வாயிலாக அறிய முடிகிறது.

## 2.10. புலவர்களின் குணநலன்கள்

சங்கப் புலவர் பெருமக்கள் உயரிய மக்கட் பண்புகள் நிறைந்த ஒழுக்க வாழ்வினை உடையவர்; பரந்த மனப்பான்மையினர்; தன்மானத்தை உயிரென மதித்தவர்; பொறாமையற்ற புனிதப் பண்பினர்; வறுமையில் செம்மையைப்

போற்றியவர்; அஞ்சாமை நிறைந்த அறிஞர்; ஆளுவோர்க்கு அறம் உரைத்த அமைச்சர்; இத்தகைய சிறப்புகள் அனைத்தும் சிறந்த பண்பு நலன்களாகப் புலவர்களிடையே காணப்படுகிறது.

சங்க காலப் புலவர்கள் கல்வியில் சிறந்த கவிவாணர்களாகத் திகழ்ந்துள்ளனர். பல நாடுகளுக்கும் சென்று தம் கவித்திறனை வெளிப்படுத்தினர். இயற்கைப் பொருள்களையும் உலகியல் பொருள்களையும் நுட்பமாக ஆராய்ந்து அவற்றைத் தம் பாடல்களில் சுட்டிக்காட்டி மக்களை அறநெறியில் செல்லுமாறு அறிவுறுத்தியுள்ளனர். அவ்வாறு புலவர்களால் பாடப்பட்ட பல பாடல்கள், எதிர்பாராமல் உடனுக்குடன் பாடப்பட்டவையாகும். மேலும் அரசர் முன்னிலையில் கண்டித்தல், அறிவுறுத்தல் என நேர்முகமாக நடந்த பல்வேறு நிகழ்ச்சிகளைக் குறித்தும் அப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. இவற்றின் மூலம் அக்காலப்புலவர்கள் அரசரைப் பாடிப் பரிசில் பெறுவதையே தொழிலாகக் கொள்ளவில்லை. அரசர்கள் தவறு செய்தபோது பயப்படாமல் கண்டித்து, அறநெறிப்படுத்தும் தன்னலமற்ற பண்பாளர்களாகவும் அவர்களிடம் இருந்துள்ளன என்பது தெளிவாகின்றது.

### 2.10.1. ஒற்றுமைப் பண்பு

புலமைக் காய்ச்சலின்றி ஒருவர் மற்றவரை மதித்து வாழ்ந்த புலவர்கள் அன்று இருந்தனர். கபிலரை அக்காலப் புலவர் உலகம் பாராட்டியது போல யாரையும் பாராட்டவில்லை. நக்கீரர் அவரை,

“உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்”[80]

என்று பாராட்டுவார். இதோடு பெருங்குன்றூர்க் கிழாரும்,

……..வயங்கு செந்நாவின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன்”[81]

என்றார். மாறோகத்து நப்பசலையாரும் கபிலரைப் புகழந்து பாடுவார்.

## 2.10.2. தன்மான உணர்வு

புலவர்களில் சிலரே பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். பெரும்பாலோர் தத்தமக்கு விருப்பமான தொழில்களைச் செய்து வாழ்வு நடத்தினர். சங்க காலப் புலவர்கள் பெரும்பாலும் மன்னர்களின் ஆதரவாலேயே வாழ்ந்துள்ளனர். பெருநிலக்கிழார்களாகிய வள்ளல்களைப் பாடி, அவர்கள் வழங்கிய பொருள்களைக் கொண்டு, தம் வறுமைத் துன்பத்தைப் போக்கி இல்லற வாழ்வில் மேம்பட்டுள்ளனர். இருப்பினும் அவர்கள் தங்கள் அறிவையும் நேர்மையான உள்ளத்தையும் யாருக்கும் அடகு வைத்துவிடாது மனவலிமையோடு காணப்பட்டனர். அதனால் தான் தகுதிக்குக் குறைவான பொருளைப் புரவலர் முகம் மாறி அளித்த போதும் அப்பொருளை மதிக்காது ஏற்க மறுத்துள்ளனர். சான்றாக,

“இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இலலையு மல்லர்
இரவலர் உண்மையும் காணினி இரவலர்க்கு
ஈவோருண்மையும் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே”[82]

என்று பாடினார். இரவலரைப் பாதுகாப்பவன் நீ ஒருவனே என்று எண்ண வேண்டாம். நான் யானையை வாங்கி வந்து உன் காவல் மரத்தில் கட்டியதன் மூலம் இரவலர்க்குப் பரிசு கொடுக்கும் பிற வள்ளல்களும் உள்ளனர் என்பதை நீ உணர்வாயாக. நீ பரிசு கொடுக்காத போதும், இரவலர் இவ்வுலகில் வாழ்வர் என்பதையும் அறிவாயாக என்று பெருஞ்சித்திரனார் இளவெளிமானிடம் தன்னுடைய தன்மான உணர்வினை வெளிப்படுத்தினார். இவற்றின் மூலம் அக்காலப் புலவர்கள் தன்னுடைய வறுமையைப் போக்குவதிலேயே கவனம் செலுத்தவில்லை. தன்னுடைய தன்மானத்தையும் இழக்காது இருப்பதற்கான மனவலிமையும் பெற்று விளங்கினர் என்பது இதன் மூலம் புலனாகிறது. எனவே தான் அரசர்களையும் வள்ளல்களையும் பொருளுக்காக மட்டுமே நாடாது தன் அறிவுத்திறனின் ஆற்றலை வெளிப்படுத்தவும் நாடியுள்ள பண்பு விளங்கிற்று.

மேலும், கண்டீரக் கோப்பெரு நள்ளியைப் பாடும் வன்பரணர், பீடில்லாத மன்னனுடைய பாராட்டினை விரும்பி அவர் செய்யாதவனவற்றைக் கூறிப் பாராட்டுதலே தம் சிறு செந்நாவிற்கு இயல்பன்று என்றார்.

"பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்

செய்யா கூறிக் கிளத்தல்

எய்யாதாகின்றம் சிறு செந்நாவே"[83]

எனும் பாடல் வரிகள் மூலம் இச்சிறப்பினை உணரலாம்.

## 2.10.3. நன்றி மறவாப் பண்பு

ஒருவர் நமக்குத் தகுந்த காலத்தில் செய்த உதவியை எந்நாளும் மறக்கக்கூடாது. இதுவே நன்றி மறவாப் பண்பு எனப்படும். இந்த நன்றி மறவாப் பண்பினை அனைத்து இலக்கியங்களும் வலியுறுத்தியுள்ளன. பிறருக்குச் செய்யும் உதவி கூட உண்மையாகத் துயரப்படும் மனிதர்களுக்கே செய்யப்பட வேண்டும். ஏனெனில், அவரே அவ்வுதவியின் பயனை உணர்ந்து நன்றி மறவாப் பண்பாளராகத் திகழ்வார். அந்த வகையில் நாம் நல்லவர் ஒருவருக்கு உதவி செய்தால் கல் மேல் எழுதப்பட்ட எழுத்துக்களைப் போன்று அவ்வுதவியை அவர் என்றும் மறவாது இருப்பர். ஆனால், தீயோருக்குச் செய்கின்ற உதவி நீர் மேல் எழுதப்பட்ட எழுத்துக்கள் எவ்வாறு உடனே மறைந்து விடுமோ, அது போன்று நாம் செய்கின்ற உதவியையும் உடனே மறந்து விடுவர் என்பதை,

"நல்லார் ஒருவற்குச் செய்த உபகாரம்

கல்மேல் எழுத்துப் போல் காணுமே – அல்லாத

ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்

நீர் மேல் எழுத்திற்கு நேர்"[84]

என்று மூதுரை குறிப்பிட்டுள்ளது. கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவரும் அத்தகைய நன்றி மறவாத பண்புடையவராக இருந்துள்ளார். ஆதன் நுங்கன் என்னும் குறுநில மன்னனிடம் தன் நன்றியை வெளிப்படுத்திய திறத்தை,

"நின்யான் மறப்பின் மறக்குங்காலை
என்உயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்
எண்ணியான் மறப்பினர் மறக்குவென்"[85]

என்ற பாடல் மெய்ப்பிக்கின்றது. கள்ளில் ஆத்திரையனார் ஆதன் நுங்கனிடம், என் உயிர் என் உடலை விட்டு நீங்கும் காலத்தில் என்னை மறக்கும் நிலை உண்டாகுமானால் அப்போது நான் உன்னையும் மறந்து விடுவேன். அதுவன்றி மற்றைய பொழுது மறவேன் என்று கூறியுள்ளதன் மூலம் அவருடைய நன்றி மறவாப் பண்பு புலனாகிறது. இதனையே வள்ளுவர்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"[86]

என்று குறிப்பிட்டுள்ளார். ஆதலால், எந்த அறத்தை அழித்தவருக்கும் தப்பிப் பிழைக்க வழி உண்டு. ஆனால், ஒருவர் செய்த உதவியை மறந்து நன்றியாகிய அறத்தை அழித்தவனுக்குத் தப்பிப் பிழைக்க வழி இல்லை என்பதை உணர்ந்து சங்கப் புலவர் நன்றி மறவாப் பண்போடு வாழ்ந்துள்ளனர் என்பது இதன்மூலம் புலனாகிறது.

### 2.10.4. தொண்டும் கடமையுணர்வும்

எங்கெல்லாம் துன்பம் உள்ளதோ அங்கெல்லாம் சான்றோர் தம் கடமையாற்றத் தயங்க மாட்டார். புலவர்களுக்கு மன்னர்கள் பரிசுகள் அளித்தனர் என்பதற்காக அவர்கள் தவறு செய்த போது பார்த்துக் கொண்டு வாளாவிருந்தனர் அல்லர். அருகில் சென்று இடித்துரைத்துத் திருத்தினர். சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் வள்ளல் காரியின் குழந்தைகளைப் பகை காரணமாக யானைக் காலில் இட்டுக் கொல்லச் சூழ்ந்த போது கோவூர்கிழார் ஓடோடி சென்று அவன் முன்னோர் இயல்பை எடுத்துக் கூறி அத்தீய செயலைத் தடுத்தனர்.

"நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை,
இவரே புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்

தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்"[87]

என்று கூறி அவன் உள்ளத்தில் அருளுணர்வினைத் தோற்றுவித்த உய்யக் கொண்டார்.

## 2.10.5. பிறர் நலம் பேணுதல்

தனிமனிதன் வளத்தோடு இருந்தால் தான் சமுதாயமும் செழித்து விளங்கும். சமுதாயம் சிறந்து விளங்கினால் தான் தனி மனிதனும் சிறந்து விளங்க முடியும். எனவே, இத்தகைய நிலை உருவாக வேண்டுமானால் மக்கள் தங்கள் நலத்தைக் கருதாது, பிறர் நலத்தையும் பேணுதல் வேண்டும். இப்பிறர் நலம் பேணும் பண்பும் சங்கப் புலவரிடம் இருந்தது. அதனால் தான் புலவர்கள் தாம் மன்னரிடம் பெற்ற பரிசுப் பொருட்களை தாமே அனுபவிக்காமல் தன்னை நாடி வரும் இரவலர்க்கும் கொடுத்து உதவும் பண்பாளராக விளங்கியுள்ளனர். இதனை,

"இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனை கிழவோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே"[88]

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. வறிய நிலையில் வாட்டம் உற்றிருந்த பெருஞ்சித்திரனார், குமணன் தந்த செல்வத்தை வைத்துக் கொண்டு தான் மட்டுமே நன்கு வாழ வேண்டும் என் எண்ணாது, அதனை அனைவருக்கும் தருமாறு தன் மனைவியிடம் கூறியுள்ளார். இதன் மூலம் புலவர்கள் பிறருடைய துன்பத்தைப் போக்கும் நல்லுள்ளம் கொண்டோராகவும் திகழ்ந்துள்ளனர் என்பதை உணர முடிகிறது.

## 2.10.6. பெண் கொலை புரிந்தோர் பரம்பரையை ஒதுக்குதல்

பெண்மையே இவ்வுலக இயக்கத்திற்கு ஆதாரமாகும். எனவே, அப்பெண்மையை மதித்து அவர்கள் உயிரையும் பாதுகாப்பதால் இவ்வுலகில்

மனித வாழ்வு தழைத்து வளம்பெறும். சுவாமி விவேகானந்தரும் பெண்மையை உயர்வுபடுத்தும் நோக்கில், பெண்களை போற்றாத நாடுகள் எக்காலத்தும் முன்னேற முடியாது என்று குறிப்பிட்டுள்ளார். பெண்களை போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் சங்ககால மக்களிடையேயும் இருந்துள்ளது. அதனால் தான் போரின் போது மகளிரை பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுமாறு அறிவுறுத்தியுள்ளனர். ஏனெனில், பெண் கொலை புரிதல் அறனழிச் செயலாகக் கருதப்பட்டுள்ளது. பெண்கொலை புரிவோர் நரகத்திற்குச் செல்வர் என்ற கருத்தும் சங்க காலத்தில் நிலவியது.

நன்னன் என்பவன் ஆற்றங்கரையில் இருந்த தன் தோட்டத்தில் அரிய மாமரம் ஒன்றை வளர்த்து வந்தான். அதன் காயையோ, பழத்தையோ அவனைத் தவிர வேறு யாரும் தின்னக் கூடாது என்பது அவன் ஆணை. ஒருநாள் ஒரு பெண் ஆற்றுக்கு நீராடச் சென்றாள். அப்போது, ஆற்றிலே மாங்காய் ஒன்று மிதந்து வந்தது. அம்மாங்காயை எடுத்துத் தின்ற குற்றத்திற்காக அப்பெண்ணுக்குக் கொலைத் தண்டனை விதித்தான். அதனால் அவளுடைய பெற்றோர் எண்பத்தோரு ஆண்யானைகளோடு, அப்பெண்ணின் எடைக்கு எடை பொன்னாற் செய்த பாவையைக் கொடுப்பதாகக் கூறியபோதும், நன்னன் அதனை ஏற்றுக் கொள்ளாது அப்பெண்ணிற்கு கொலைத் தண்டனை வழங்கியுள்ளான் என்பதை,

‘‘மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண் கொலை புரிந்த நன்னன்’’[89]

என்ற பாடல் வழியே அறிய முடிகிறது. ஒரு சமயம் இத்தகைய நன்னன் பரம்பரையில் தோன்றிய இளவிச்சிக்கோ என்னும் சிற்றரசனும் இளங்கண்டீரக்கோ என்னும் சிற்றரசனும் ஒன்று கூடியிருந்தனர். அப்போது பெருந்தலைச்சாத்தனார் அங்கு சென்றார். அவர் இளங்கண்டீரக்கோவைத் தழுவிக் கொள்ளவில்லை. அதனால் அதன் காரணம் யாது? என விச்சிக்கோ வினவினான். அதற்குப் புலவர்,

"............பொலந்தேர்

நன்னன் மருகன் அன்றியும் நீயும்

முயங்கற்கு ஒத்தனை" [90]

என்று கூறினார். காரணம் நன்னுடைய வழியில் வந்த விச்சிக்கோவை புலவர் தழுவிக் கொள்ள மறுத்துள்ளார். இதன் மூலம் அக்காலப் புலவர்கள், பெண்களுக்குத் தீங்கு இழைத்தவர்கள் அரசர்களாக இருந்தாலும் அவர்களுடைய பரம்பரையையே மன்னிக்காத பண்பு உடையவர்களாகத் திகழ்ந்துள்ளனர் என்பதும் புலனாகிறது. இதனை, "புலவர்களில் பலர் வறுமையால் வாடிய வாழ்க்கையரேனும் தம் வயிற்றை வளர்ப்பதற்காக யாரையும் பாடித் தம் புலமையை விற்கவில்லை. வீரமன்னரைப் புகழ்ந்தனர். வீரமற்றோரை இகழ்ந்தனர். அறனழியச் செய்வோரையும் அவர் வழி வழித் தோன்றல்களையும் வெறுத்தனர்" [91] என்ற தே.ப.பெருமாளின் கூற்று இதன் மூலம் உறுதியாகின்றது.

## 2.11. செம்மை வாழ்விற்கான நல்லியல்புகள்

உயர்ந்த சிந்தனையோடு வாழ்ந்த சங்கப் புலவர்களின் பொய்புகலாச் செந்நாவில் உதித்தவை சங்க இலக்கியங்கள். அவர்கள் வாழ்விலே பரிசில் வாழ்க்கை மேற்கொண்டிருந்தாலும் மன்னனும் மக்களும் வாழ்க்கையிலே உண்மைநிலை உணர்ந்து செம்மையான வாழ்வினை நடத்துவதற்கு சங்கப்பாடல்கள் துணைபுரிகின்றன. நல்லது செய்து வாழ்வீர்களாக நல்லது செய்ய முடியாவிட்டாலும் தீமை செய்வதை வெறுத்து வாழ்வீர்களாக என்று அறிவுரை பகர்ந்து உள்ளனர்.

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்

அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்

எல்லோரும் உவப்பது அன்றியும்

நல்ஆற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே" [92]

எனவே, வயிற்றுப்பிழைப்பினைக் கருதிக் கல்வியைக் கற்றல் புலவர் செயல் அல்ல. புலவர்கள் வறுமை நிலையில் வருத்தம் அடைந்தாலும் அவர்தம்

அறிவால் மன்னர்களாலும் நாட்டு மக்களாலும் வரிசையறிந்து பரிசில் தந்து பாராட்டப் பெற்றனர். தமது வறுமை நீங்க நிறைந்த பெரும் பொருளைப் பெற்று இன்புறதல் வேண்டுமென்ற கருத்தால் பெருமையில்லாத மக்களை உயர்த்திக் கூறும் புகழ்ச்சியை விரும்பி அவர்கள் செய்யாதனவற்றைச் செய்தனவாகப் பொய்யாகப் பாராட்டுதலைப் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் அறவே வெறுத்தார்கள்.

### 2.11.1. சுற்றம்

பாணர்களைப் போலவே புலவர்களும் சுற்றத்தினருடன் குழுவாகச் சேர்ந்து வாழ்ந்து வந்ததனைக் காண முடிகிறது. பேகனை நோக்கி பாடும் கபிலர், பாலை நிலங்களைக் கடந்து தம் சுற்றத்தினருடன் வந்ததையும், அவர்களின் பசியைப் போக்குவதற்காக பாடி நிற்பதாக கூறுகிறார். இதே போன்று குமணனைப் பாடும் பெருஞ்சித்திரனார், கல்லாடனார், மதுரைக்குமரனார் எனவும் தம்மைச் சுற்றி பசியோடு உறவினர்கள் இருப்பதை சுட்டிக் காட்டுகின்றனர். இது போன்ற புலவர்களும் அவர்களின் உறவினரோடு வந்து நிற்பதைக் காட்டுகிறது.

### 2.11.2. இசைக் கருவி இசைத்தல்

புலவர்கள் புரவலரின் வீட்டின் முன் நின்று இசைக்கருவிகளை இசைத்து பாடல் பாடுகின்றனர். எனவே புலவர்கள் இசைக்கருவிகளை இசைத்தமை காட்டுகிறது. வள்ளல்களின் வீட்டின் வாயிலின் முன் இசைக்கருவிகளை வாசிப்பது இரவலர் வந்திருப்பதை உணர்த்துவதாலும், புலவர்கள் வறுமையின் காரணமாக இரவலர்களைப் போல இசைக்கருவிகளுடன் சென்றுள்ளனர். புறநானூற்றில் இரந்து வந்திருக்கிறேன் என்பது புலப்படுமாறு தடாரி இசைக்கப்பட்டமை காட்டப்படுகிறது. இசைக்கருவிகளை கொண்டு வள்ளல்களின் வாயிலின் முன்பு பரிசில் பெறும் மரபானது பாணரது மரபை போல இருப்பது நோக்கத்தக்கது. இருப்பினும் பாணர்கள் இசைக்கருவிகளை இசைத்து பாடும் பாட்டானது பழம் பாடலாகவும், வாய்மொழிப் பாடலாகவும் இருந்திருப்பர். ஆனால் புலவர்கள் இசையினை வாசித்து புதிய பாடலை பாடுவர். பாணரது மரபிலிருந்து தன்னை வேறுபடுத்தவே புலவர்கள் வாடா வஞ்சி பாடினேன் என்று புலவர் தெரிவிக்கின்றனர்.

### 2.11.3. ஊடல் வாயில்கள்

புலவர்கள் அரசனுக்கு அறிவுரை கூறி வழிநடத்தும் பாடல்களைப் புறநானூற்றில் காண முடிகிறது. அது போல போர்ச் சமயங்களில் தூதற்குரிய தன்மைகளாக மக்கள் சார்பாக நின்று அறிவுரை கூறுபவர்களாகவும் இருந்துள்ளனர். புலவர்களுக்கு இருந்த இச்சமூகத் தகுதி பாணர்களுக்கு இருந்ததாக அறிய இயலவில்லை. பாணர்கள் கலைஞராக இருந்ததால் குடும்ப வாழ்வில் ஏற்படும் ஊடல்களை தணிக்கும் வாயில்களாக பயன்படுத்தப்பட்டுள்ளனர். தொல்காப்பியர் சுட்டும் ஊடல் தணிக்கும் வாயில்களாக பாணரைத் தவிர புலவர்களை குறிப்பிடவில்லை. இவை பாணர் குழுவிலிருந்து புலவரை வேறுபடுத்துவதாக உள்ளது. இருந்தாலும் கூட புலவர்கள் பேகன், கண்ணகி பற்றிய பாடல்களில ஊடல் தணிப்பவர்களாகச் செயல்பட்டுள்ளனர் எனப் பேகன் தன் மனைவியுடன் வாழ்வதே தாம் வேண்டும் பரிசிலாகப் புலவர்கள் சுட்டுகின்றனர்.

### 2.11.4. கிழார் புலவர்கள்

சங்க இலக்கியங்களில் 473 புலவர்களில் கிழார் எனவும் அழைக்கப்பட்டனர். கிழார் எனும் சொல் உடைமையாளர்களைக் குறிக்கும். மொத்தம் 35 கிழார் புலவர்கள் என்பதை சங்கப் புலவர் பட்டியல் உணர்த்துகிறது. கிழார்கள் மருத நிலத்துக் கழனிகளை உடையவர்களாக இருந்துள்ளனர். இதனை,

"விழுநீர் வேலி நாடு கிழவோனே"[93]

"நெல்அமல் புரவின் இலங்கைக் கிழவோன்"[94]

"கல்இழி அருவி வேங்கடம் கிழவோன்"

"ஔகதிர்க் கழனி வெண்குடைக் கிழவோன்"[95]

என்ற சான்றுகள் தெரிவிக்கின்றன.

கிழார் எனும் சொல்லைத் தம் பெயரில் பெற்றுள்ள புலவர்கள் நிலம், தானியம், செல்வம் உடையவர்களாக இருந்திருக்க வாய்ப்புண்டு. புலவர் மற்றும்

அரசர்களுக்கிடையே இருக்கிற உறவுமுறையைப் பற்றி பேசும் கேசவன் கிழார் புலவர்களைப் பணக்காரப் பாடகர்கள் என அழைக்கிறார். ஏனெனில் கிழார்கள் பொருளியல் மேம்பட்டு சமூக வாழ்வில் பெருமையோடு உயர்கின்றனர்.

புறநானூற்றில் 16 கிழார் புலவர்கள் மொத்தம் 56 பாடல்கள் பாடியுள்ளனர். அதில் வேந்தர்களின் சார்பான பாடல் 36 ஆகவும், இனக்குழச் சார்பான பாடல்கள் 19 ஆகவும் ஆவூர் மூலங்கிழார் எழுதிய ஒரு பாடல் சோனாட்டும் பூஞ்சாற்றும் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனைப் பற்றியதாகும். வேந்தரைப் பாடிய பெருங்குன்றூர் கிழார் 'வேந்தரின் புகழ்பாடும் பாணர் ஒருவரும் இலர் எனப்பாடுகின்றார். கிழார் புலவர்கள் பெரும்பான்மை வேந்தர் சார்பாக இருந்தமையை அறிய முடிகிறது.

கிழார் புலவர்கள் இனக்குழுத் தலைவர்களை மட்டும் பாடிய பாடல்களில் தமது வறுமையைச் சுட்டும் தன்மை மிகுதியாக இல்லை. ஆனால் வேந்தரைப் பாடிய கிழார் புலவர் பாடல்களில் வறுமை நிலைப் பற்றிய குறிப்புகள் இடம் பெறுகின்றன. வேந்தன் பரிசிலர்க்கு அளிக்கும் கொடைத் தன்மைப் பற்றியும், அவனது பெருமையையும் விரிவாகக் குறிக்கப்படுகின்றன.

## 2.11.5. புலவர்கள் உலகத்தோடு இயைந்த வாழ்கை

புலமைத் தொழிலை சில புலவர்களைத் தவிர பெரும்பாலான புலவர்கள் புலமையே தொழிலாக இருந்துள்ளது. 'கறி சோறுண்டு வருந்து தொழிலல்லது பிறிது தொழில் அறியாது' இருந்து உள்ளனர்.

## 2.12. புலவர்களின் உரிமை

"புலவர்கள் வெறும் பரிசில் பெறுபவர்களாக மட்டும் இல்லாமல் அரசரின் நண்பர்களாக, அவர்களுக்கு அறிவுரை கூறுபவராக, இடித்துரைப்பவராக, அரசர்களின் போரை அமைதிப்படுத்துபவராக சந்து செய்விப்பவராக இல்லற வாழ்க்கையைச் செம்மைப்படுத்துநராக, கணவன் மனைவி பிரிவினை மாற்றுபவராக சமூக நலம்பல நாடுபவராக விளங்கினர். அதியமானுக்கும் தொண்டைமானுக்கும் ஔவை போர் வராமல் தடுத்தமை, கோப்பெருஞ்சோழன் வடக்கிருத்தல் பொறாத பிசிராந்தையார் அவரோடு வடக்கிருந்து உயிர் நீத்தமை, கோவூர்கிழார் மலையமான் மக்களைக் காப்பாற்றுதல் போன்ற செய்திகளைச் சங்க இலக்கியம் சுட்டும் புலவர்களின் உரிமை எண்ணமும்

அனுபவ முதிர்ச்சியும் வாய்ந்த சங்கப் பாடல்கள் பின் வருவோர்க்கு நல்ல படிப்பினை ஊட்டும்”[97].

புலமைக்குப் பரிசு ஒரு மதிப்பீடு என்றே அக்காலப் புலவர்கள் எண்ணினர். புலவர்களாக மன்னரும் இருந்தனர். மருத்துவர், கணியன், அறுவை வாணிகர், கூல வாணிகர் எனப் பல்தொழியினரும் புலமை எய்திருந்தனர். எனவே புலவர்களைச் சோம்பிகள் என இகழ வேண்டியதில்லை. அவர்தம் அறிவு ஆட்சிக்கும் மக்களுக்கும் மன்னனுக்கும் பயன்பட்டது. அறிவுடையோர் வழிகாட்ட அரசன் ஆட்சி புரிந்ததால் ஆட்சி சிறப்புற்றது. மக்களும் சிறப்பு வாய்க்கப் பெற்றனர்.

பரிசுக்காகப் பொய் கூறி ஒருவனை வாழ்த்தியதில்லை, அவர்கள் வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டவராயினும், எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே என மன்னனை எதிர்ப்பதில் இறுமாப்புற்றனர். போர் வினையிடை நின்ற இருதிற மன்னர்களையும் சந்து செய்வித்து அமைதிப்படுத்தினர். தூதுவராகவும் சென்றனர். அரசர்கள் எவரும் புலவர்களை இகழ்ந்ததாகச் செய்தியில்லை.

## 2.13. புலமைப் போற்றல்

அறிவுடையோனர் தம் அரசும் செல்லும்’ என்று அறிவாளிகளின் மேன்மையை ஓர் அரசனே அறிவிக்கிறான். இனம், குலம் ஆகிய வேற்றுமைகட்கு அப்பாற்பட்டதாகக் கல்வி போற்றப்பட்டது.

“கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புரினும் கற்கை நன்றே”[98]

எனச் செல்வத்தினும் கல்வியே பெருமை சேர்ப்பது என அக்காலத்தவர் கருதினர். அறிவுக்கும் கல்விக்கும் முதன்மை கொடுக்கும் சமுதாயம் செல்வத்தினும் முதன்மை பெறுதலை இன்றும் காணலாம். அறிவுடையார் எல்லாம் உடையார் என்ற வள்ளுவர் சொல் பொய்யன்று. சங்க இலக்கியச் செய்திகள் புலமையின் சிறப்பைப் புலவர்களின் பெருமையைப் போற்றுவன. அறிவார்ந்த சமுதாயம் அறிஞர்களைப் போற்றியது. அத்தகைய அறிவு வளமும், அறிஞர்களைப் போற்றும் மனப்பக்குவமும் இன்றைய தமிழரிடம் கூடப்

போதுமானதாக இல்லையெனின் அக்காலச் சமுதாயச் சூழலை அறிவுச் சூழலை என்னன்று கூறுவது.

## 2.14. புலவா் தன்மை

பாடல் பாடுபவரைத் தெய்வத்தன்மை உடையவராகக் கருதும் போக்கு ஒரு மரபாக உள்ளது. ஏனெனில் இடைக்காலத்தில் இறைவன் மீது பாடல் பாடிய ஆழ்வார்களும், நாயன்மார்களும் தெய்வத்தன்மை நிரம்பியவர்களாகக் கருதப்பெற்றனர். இறையுடன் தொடர்புடைய பாடல்களைப் பாடியோர் இறைத் தன்மையுடையவராகக் கருதப்பெறுதல் இயல்பு. மாறாகக் கவிதை பாடிய அனைவரும் இறைத்தன்மை பெற்றவராகக் கருதப்பெற்றனர். கம்பர் கலைமகளின் அருள்பெற்றுக் காவியம் படைத்ததாகக் கூறப்படுவது இதனுடன் இணைத்துப் பார்க்கப்படுகிறது. எனவே புலவர்கள் தெய்வத்தன்மை உடையவராகக் கருதப்பெற்றமை வழிவழி மரபாகலாம். புலவர்கள் தெய்வத்தன்மை உடையவர் என்பதற்கு தொடக்க காலத்தில் வழங்கிய மந்திரப்பாடல்கள் எனலாம்.

சங்ககாலப் புலவர்கள் யாரிடம் கற்றனர், அவர்கள் கற்ற கல்வி எத்தகையது கற்பிக்கும் கல்விச் சாலைகள் எவ்விதம் இயங்கின என்பதை பற்றிய செய்திகள் சங்க இலக்கிய மூலங்களைக் கொண்டு அறிய முடியவில்லை. புலவர்கள் பாட்டுப் பாடும் திறன் பெற்றிருந்ததால் அவர்கள் கல்வி கற்றிருப்பர் என யூகிக்க முடிகிறது.

இன்றைய நிலையில் கல்வியும், கவிதை எழுதும் புலமையும் ஒன்றுடன் ஒன்று இணைந்து காணப்படுகிறது. கற்றவரே எழுதுகின்றனர் என்பதனால் சங்கப்புலவர்களும் கற்று, பாடல் பாடியிருக்கக் கூடும் எனப் பொருந்துகிறது. பாடல் பாடுகின்றவர்கள் குறிப்பாகப் புலவர்கள் அனைவரும் கற்றவர் என்று முடிவிற்கு அறிஞர்கள் வந்துள்ளனர். கல்வி எனக் கூறப்பெறுவது மரபு சார்ந்த கல்வியன்று. எழுத்துக் கல்வியேயாகும். எழுத்துக்கல்வி வளர்ச்சியைப் பற்றி பேசும் போது மகாதேவன் வாய்மொழிப்பாடல் நிலையிலிருந்து எழுத்து நிலைக்கான மாற்றம் ஏற்பட்டதென்று கூறுகின்றனர். மேலும் திடீர் எழுத்து ஆளுகையையும் பரவலும் கிடைத்துள்ள தமிழ் இலக்கியத்தினுள் எவ்வாறு காணப்படுகின்றன என்ற கேள்வியை எழுப்புகின்றார். அதோடு மட்டுமல்லாமல்

சங்க இலக்கியங்களில் காணப்படும் புலவரின் வருகை எழுத்தறிவையும் கொண்டு வருகிறதா? என்ற கேள்வியையும் எழுப்புகின்றார்.

சங்கப் புலவர்களின் பாடல்பாடும் திறன் கற்ற கல்வியால் வந்ததா அல்லது கல்விக்கு அப்பால் உள்ளத்தால் என்ற கேள்வி எழுகிறது. எழுத்துக்கல்வி பரவலாக்கப்பட்ட பிற்காலத்தில் தான் எழுத்தினைக் கற்றவரே பாடல்பாடும் திறன் பெற்றனர். இவை சங்ககாலப் புலவர்களுடன் பொருத்துவது பண்பாட்டுப் படிமலர்ச்சிக்கு மாறானதாகும். ஏனெனில் சங்க காலச் சமூகத்தில் அனைத்து தரப்பினரும் புலவர்களாக அறியப் பெறுகின்றனர். இதனால் தமிழ்ச்சமூகம் முழுவதையும் கற்றிருந்தத என்ற கருத்து உருவாகின்றது. இது சாத்தியமாகத் தோன்றவில்லை. ஏனெனில் பொதுக்கல்வி முறை அறிமுகப்படுத்தப்பட்ட இன்றைய நிலையில் கூட தமிழ்ச்சமூகம் கற்றிருக்கவில்லை. கல்வி இன்றியமையாததாக விளங்கும் இன்றையநிலையில் பலா் கற்காமல் இருக்கும் போது கல்வி இன்றியமையாததாக இல்லாத பண்டைக் காலத்தில் அனைவரும் கற்றவா்களாக இருந்திருக்க வாய்ப்பில்லை. அத்தகைய சூழலில் புலவா்கள் அனைவரும் கற்றறிந்து பாடல் பாடினா் எனக் கூறவியலாது எனில் கல்வியினைக் கற்காமல் எப்படிக் கவிதைப் பாடினா் என்ற கேள்வி எழுகின்றது. கற்றவா் அனைவரும் கவிதை பாட வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. எனவே கவிதைப் பாட கல்வி தேவை இல்லை.

இன்றைய நிலையில் கல்வி என்பது பல நிலைகளைக் கடந்து எழுத்துக் கற்றலையும் எழுத்தின் வழி பிற துறைகளைக் கற்றலையும் குறிக்கிறது. இதைப் போன்றே பாடல் என்பது பல நிலைகளில் வளர்ச்சியுற்று எழுத்தை அறிந்து பாடல்(பாடுதல்), எழுதுதல் என்ற நிலைக்கு வந்துள்ளது. எழுத்துமுறை தோன்றி நன்கு வளர்ச்சி பெற்ற பிறகே பாடல் பாடுதலுக்கும் கல்விக்கும் தொடா்பு ஏற்பட்டிருக்க வேண்டும். அதற்கு முன்னரே பாடல் பல நிலைகளில் வளா்ச்சி பெற்று வந்துள்ளது.

மந்திரப்பாடல், பாண்பாடல், இயற்பாடல் என்ற பாடலின் வளர்ச்சி நிலைகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. இவை தொடர்ச்சியாக இல்லாமல் முன் பின்னாகப் பதிவாகியுள்ளன. தமிழ்ச் சமூகத்தின் சடங்கு வினைமுறைகளில் வழிபாட்டு மரபுகளில் பாடலுக்கு ஒரு முக்கிய இடம் இருந்துள்ளது. அவ்விடம் இன்று வரை தொடர்ந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம்.

சங்க சமூகத்தில் பாடல் பாடுவதை மரபாக, வாழ்க்கை நெறியாகக் கொண்டிருந்த பாணர்கள், எழுத்துக்கள் பரவலாகி முதன்மை இடத்தைப் பெறுகின்றவரைச் சமூகத்தின் முக்கியமானவர்களாக இருந்துள்ளனர். அதற்குப் பிறகு அவ்விடத்தைப் புலவர்கள் கைப்பற்றியுள்ளனர்.

பசியால் வாடி வருந்தும் ஒருவனிடம் அறிவுரைகளோ அறவுரைகளோ எடுத்துக் கூறினால் அவனது காதுகளில் புகாது என்பது விவேகானந்தரின் கருத்து ஆகும்.

பசி வந்தால் பத்தும் பறந்து போகும் என்ற பழமொழிக்கு இணங்க பரிசில் கேட்கும் பறந்து போகும் பத்தைப்பற்றி நல்வழியில் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்களில் புலவர் மற்றும் கலைஞர்களில் பசியால் வருந்தி பரிசில் கேட்கும் போது அரசன் அவர்களுக்கு ஏற்ற பொருள்களைக் கொடையாக வழங்கினர். அவர்களுக்கு ஏன் அறிவுரைகளோ அறவுரைகளோ கூறாமல் போனது, ஏனென்றால் விவேகானந்தரின் கருத்தினைப் போல பசியாலே துன்புறும் ஒருவனிடம் போய் அறிவுரைகளோ அறவுரைகளோ எடுத்துக் கூறும் போது அவன் காதுகளில் புகாது.

## 2.15. புலவரின் மான உணர்வு

பெருஞ்சித்திரனார் என்ற புலவர் வறுமையால் மிகவும் வாடி வதங்கினார். பாரி, காரி முதலிய வள்ளல்கள் எழுவரும் மாய்ந்த பிறகு தம்மை ஆதரிப்பவர் இல்லாததால் அலைந்து திரிந்தனர். வெளிமான் என்ற குறுநில மன்னனிடம் சென்று அவனுடைய உதவியை எதிர்பார்த்து நின்றனர். அவனோ தன் தம்பியைப் பரிசில் கொடுக்குமாறு ஏவிவிட்டு உறங்கச் சென்றான். அத்தம்பி கொடுத்த பரிசில், புலவரைத் தாழ்வு படுத்தும் வகையில் அளவில் சிறியதாக இருந்தது. ஆதலால் புலவர் பெருஞ்சித்திரனார் அதனை ஏற்றுக் கொள்ளாமல் வேறோரு வள்ளலை நாடிச் சென்று விட்டார். சென்றவர் குமணனுடைய பரிசிலை விட பெரிய யானை ஒன்று பெற்று வந்து, வெளிமான் ஊரில் சென்று அவருடைய பெருமிதத்தைக் காண்பிக்கும் வண்ணமாக ‘நீ ஒருவனே புரவலனோ? என்னைப் போன்ற புலவர்க்கு உதவும் புரவலர்கள் பலர் உள்ளனர். உன் காவல் மரம் வருந்தும் படியாக யானை ஒன்று கட்டியிருக்கிறேன் போய்க் காண்பாயாக அவை நான் ஒருவனிடம் பெற்ற பரிசில் தான் என்றார்’. எனவே இவற்றின் வாயிலாகப் புலவர்கள் வெறும் பரிசில் பெற்றால் போதும்

என்பதற்காகத் தம் மானத்தை இழந்தவர் அல்லர். வறுமையிலும் மானத்தோடு வாழும் பண்புள்ளவராகத் திகழ்ந்தனர்.

## 2.16. நட்புணர்வு

“வெளிமான் தான் செய்தவற்றை உணர்ந்து புலவரிடம் உள்ளம் மகிழப் பெரும் வகையில் பரிசில் நல்கி அவருடன் நட்புக்கு உரியவர் ஆனார். ஆயினும் வெளிமான் இறந்த போது அந்தப் புலவர் பெருஞ்சித்திரனார் கலங்கிப் பாடிய பாட்டுக்கள் இரண்டு உள்ளன. அவற்றால் புலவர் பின்னர் வெளிமானுடன் நட்புக் கொண்டனர் என்பது அறியப்படும். அதன் பின் புலவர் வெளிமானிடம் அடிக்கடிச் சென்று பரிசில் பெற்று வந்தான் என்பது அறியப்படும்”[99].

அதியமானிடம் முதலில் பழகிய போது அதற்காக ஔவையாரும் பெருஞ்சித்திரனாரும் அவ்வள்ளல்களிடம் வெறுப்புக் கொண்டதும் உண்டு. பழகிய பிறகு அவர்களின் இயல்பை உணர்ந்ததனால் வெறுப்பு மாறி நட்புக் கொண்டனர். “ஔவையார் தம் முதல் அனுபவததை மறக்கவில்லை. அவன் காலம் நீட்டித்ததைக் கண்டு தாம் வெறுப்புக் கொண்டது போல் பிறருடன் கொள்ளக் கூடாது என்ற கருத்தோடு அவனுடைய கொடைச் சிறப்பைப் புகழ்ந்து பாடியுள்ளாா”[100].

## 2.17. நட்புக்காக உயிரை விடல்

நண்பனே! நிழல் போல் உள்ள என் மனைவிக்குப் புதல்வன் பிறந்தான் வரலாம் என்று என்னை இவ்வுலகத்தில் அன்பில்லாமல் விட்டுச் சென்று விட்டால் என்னைப் பற்றி நீ எண்ணாமல் இருக்கமாட்டாய். இனி எனக்கு உரிய இடம் எது என்று அந்த நடுகல்லை நோக்கி அழுது கேட்டார். சோழனிடம் அவர் கொண்டிருந்த அன்பினால் உள்ளம் கலங்கி அழுத பின் அங்கேயே உயிர் துறக்கத் துணிந்தார். சோழ வேந்தன் நடுகல்லாகிய பிறரும் தன்மேல் அன்பு கொண்டு இடம் கொடுப்பதாக உணர்ந்தார். தாமும் அங்கே வடக்கிருந்தார். பலருடைய வாழ்வுக்கு நிழலாகி உலகம் புகழ வாழ்ந்தவர்கள் உடம்போடு உயிர் போன்ற உரிமை நட்பு உடையவர்கள் தம்மிடம் சென்றால் நிலைப்பெற்ற நடுக்கல்லாக மாறி நின்ற போதும் இடம் கொடுத்துக் காப்பது உறுதியோடு வடக்கிருந்தார்.

### 2.18. புலவா் கலங்குதல்

புலவர்கள் கண் கலங்கிய விதத்தை, “கோப்பெருஞ்சோழன் சிறப்புடன் வாழ்ந்திருந்த உறையூா் அரண்மனையைப் பொத்தியார் காண நோ்ந்த போது மிகக் கலங்கி அழுதார். பல வருடமாக உணவினை அளித்து காப்பாற்றி வந்த யானை இறந்த பிறகு பாகன் எவ்வாறு துன்புற்று அழுது இருப்பானோ அவ்வாறு தாம் கலங்கியதாகக் கூறியுள்ளார்”[101].

### 2.19. உணர்ச்சி

மனிதன் உணரும் சிந்தனை அல்லது மன அல்லது உடல் நிலைகளை உணர்ச்சி (Emotion) எனலாம். இலக்கியம் உணர்ச்சிகளின் விளையாட்டுக் களம் என்பது அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட பேறுண்மை.

மனித உள்ளத்தை உருக்கும் உணர்ச்சிகளைப் பல இடங்களில் பல புலவா்கள் மன ஆளுமையாகப் பதிவு செய்துள்ளனா். பல மன்னா்களின் இறப்பை ஏற்றுக்கொள்ளாத புலவா்கள் கையறுநிலைப்பாடல்களாகப் பாடியுள்ளனா். நம்மி நெடுஞ்செழியன் இறப்பை பேரெயின் முறுவலாா் என்ற புலவா் தன் மன உணர்ச்சியின் பிழிவாகப் பாடியுள்ளாா். கபிலா் பாரி மறைந்த ஏமாற்றத்தை தாங்கிக் கொள்ளாமல் வருந்திப் பாடுகிறாா். ஒல்லையூா்கிழான் மகன் பெருஞ்சாத்தனைக் குடவாயிற் கீா்த்தனாா் பாடிய பாடல்,

“இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல் யாழ் மருப்பின் மெல்ல வாங்கி
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆன்மை தோன்ற ஆடவா்க் கடந்த
வல் வேல் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூா் நாட்டே”[102].

மன்னன் இறந்தபோது அவனது இறப்பை ஏற்றுக்கொள்ளாமல் மங்கலப் பொருளான மலரை-முல்லை மலரை எவரும் அணிய முன்வரவில்லை. மக்கள் இவ்வாறு கொடிய அவலத்தில் இருக்கின்றனா். இது ஒருபுறம் இருக்க இயற்கைப் பொருள்களான மலைக்கும், நதிக்கும், மலருக்கும் செடிக்கும் என்ன தெரியும்? மலா் இயல்பாகப் பூக்கிறது, தென்றல் இயல்பாக வீசுகிறது, மரங்கள்

இயல்பாக அசைகின்றன. இயற்கையின் இயல்பான செயல்கள் கூட மன்னனை இழந்தும் வருந்தும் குடிமக்களுக்குத் துன்பத்தைத் தருகின்றன என்று உணர்ச்சியின் உச்சக்கட்டமாக முல்லைப்பூவைப் பார்த்துக் கேட்கும் புலவனின் மன நிலையை நாம் என்னவென்று கூறுவது. இது புலவனின் மன ஆளுமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

### 2.19.1. இரக்க உணர்வு

வேந்தர்களுடைய போரின் திறமைகளைப் பாராட்டச் சென்ற புலவர்கள், பாராட்டுதல் மட்டுமின்றிப் போரினால் பகைவர் நாடு பாழாகுமே என்று மகிழ்ச்சி கொண்டாடும் வேந்தர்கள் உள்ளத்தில் பகைவர் நாட்டின்மேல் அருளினைத் தோற்றுவிக்கும் பொருளுடையவனாகப் புலவர்கள் பாடிய செய்யுட்கள் புலவர்களின் இரக்க உணர்ச்சியினை வெளிப்படுத்துகிறது. பொருள் கிடைத்தால் போதும் என்று இல்லாமல் போரின்றி அமைதியாக வாழும் ஆட்சி முறையினை இனிமையாகப் புலவர்கள் விரும்பினர்.

### 2.19.2. துன்ப உணர்வு

கற்பனை வளம் படைத்த புலவர்கள் இன்பம், துன்பம் ஆகிய இரண்டையுமே கற்பனை உலகத்தில் விளையாட்டுப் பொருள்களாகப் படைத்து விளையாடுவதே அவர்களின் கலைத்தொழில் ஆகும். புலவர்கள் கற்பனை உலகிலே நிலைத்து நிற்பதில்லை. உடனே, அவற்றில் விலகி நனவுலகத்தில் மற்றவரைப் போல் இன்ப, துன்பத்துக்குத் தள்ளப்படுகின்றனர். புலவர்கள் அனுபவிக்கும் இன்ப துன்பத்திற்கும் மற்றவர்களுக்கும் வேறுபாடு உள்ளது.

## 2.20. மன உறுதி

ஒரு செயலை செய்து முடிக்க மன உறுதி மிக அவசியம். இது மன ஆளுமைக்கு அடுத்த அறன். மனம் ஒரு குரங்கு என்பர். ஒரு இடத்தில் நிலையாக நிற்காது. அதனை நிலைநிறுத்தியவர்கள் வாழ்வில் பல முன்னேற்றேங்களை அடைந்துள்ளனர். பெருஞ்சாத்தன் என்ற புலவர் வெளிமான் துஞ்சுவான் தம்பியிடம் சென்று பாடிவிட்டுப் பரிசில் கேட்கிறார். அவன் சிறிது கொடுக்க அதனை வாங்காது சூழுரைச் செய்கின்றான். உனது பரிசிலை நீயே வைத்துக்கொள். இதனைவிட அதிகமாகப் பரிசிலைப்பெற்று நான் மீண்டும் வருவேன்.

அவ்வாறு கூறியப்படியே பெருஞ்சாத்தன் குமணனைப்பாடிப் பரிசில் பெற்று வருகின்றான். வந்தவன் வெளிமான் துஞ்சுவான் தம்பியிடம் சென்று இதோ நான் உனக்குத் தரும் மிக உயர்ந்த பரிசாக இந்த யானையை வைத்துக்கொள் என்று அவனது கடிமரத்தில் யானையைக் கட்டி வைத்துவிட்டுத் திரும்புகின்றான். இது பெருஞ்சித்திரனாரின் மன உறுதியை வெளிப்படுத்தி நிற்கிறது.

"இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்
இரவலர் உண்மையும் காண், இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண், இனி; நின் ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்து யாம் பிணித்த
நெடு நல் யானை எம் பரிசில்
கடுமான் தோன்றல்! செல்வல் யானே"[103].

இதுபோன்றே ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சி பரிசிலைக் காலம் தாழ்ந்து கொடுத்தான் என்ற காரணத்திற்காகப் பரிசிலைப் பெற்றுக்கொள்ளாமல் திரும்புகிறார். அப்பொழுது எமக்கு எந்தத் திசைக்குச் சென்றாலும் பரிசிலும் உணவும் கிடைக்கும் என்று கூறி செல்கிறார். இச்செயல் அவரின் மன உறுதியைக் காட்டுகிறது.

### 2.20.1. கற்பனை

கற்பனை மனிதனுக்கு இயல்பாகவே வாய்ந்த ஒரு அணிகலன். அது மனிதனிடம் செயற்கையாக உருவாக்கப்படவில்லை. கற்பனை மனிதனின் எண்ணங்களைச் செதுக்குகிறது.

மனிதனிடம் இயல்பாகப் புதைந்து கிடக்கின்ற கனவு காணும் பன்புதான் கற்பனைக்கு அடிப்படை. கனவு, கற்பனை இரண்டுமே நிகழ்காலத்தில் மனிதனுக்கு ஏற்படும் சொல்ல முடியாத துன்பங்களிலிருந்து விடுதலை தருகிறது. இத்தகைய கற்பனையைச் சங்கப் புலவர்கள் மன ஆளுமையை வெளிப்படுத்தும் விதமாகப் பாடியுள்ளார்கள்.

பாலைப் பாடிய பெருங்கடுங்கோ பாலை நிலத்தில் நடந்து செல்லும் தலைவனும் தலைவியும் காணும் நிகழ்வுகளை ஆசிரியர் தனது கற்பனைத் திறத்தினால் வெளிப்படுத்துகிறார். ஆண்மானின் நிழலில் பெண்மான் படுத்துறங்கும் நிகழ்வைக்காட்டி தலைவனின் நிழலில் தலைவி ஓய்வு எடுக்கும் அன்பினைக் காட்டுகிறார்.

குறுந்தொகையில் தேவகுலத்தார் என்னும் புலவர் காதலை இயற்கையோடும், நிலத்தைவிட பெரியது, வானத்தைவிட உயரமானது, கடலைவிட ஆழமானது என காதலை உயர்வாகத் தன் கற்பனைத் திறத்தினால் செதுக்கியுள்ளார். இது புலவரின் மன ஆளுமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

“நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே; சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”[104].

இவ்வாறாகச் சங்க இலக்கியப் புலவர்கள் மன ஆளுமைக் கருத்துக்களை உலகிற்கு வழங்கியுள்ளனர். மனம் நல்லவையாக இருந்தால் செயல் நல்லவையாக அமையும். இதனைச் சங்க இலக்கியப் புலவர்களின் பாடல்கள் வழியாக நாம் கண்டு கொள்ள முடிகின்றது.

### 2.20.2. மனம்

மனம் என்பது சிந்தனை, நோக்கு, உணர்ச்சி, மன உறுதி, கற்பனை போன்றவற்றில் வெளிப்படுகின்ற அறிவு மற்றும் உணர்வுநிலை சார்ந்த அம்சங்களின் தொகுப்பைக் குறிக்கிறது.

### 2.20.3. சிந்தனை

சிந்தித்தல் அல்லது சிந்தனை மூளையில் முதன்மையாக இடம்பெறும் ஒரு அடிப்படைச் செயற்பாடு. ஆங்கிலத்தில் இதை ஒரு Cognitive Process (அறிதிறன் வழிமுறை) என்று கூறுவர். சிந்தித்தலின் ஊடாகச் சிந்தனைகள் அல்லது எண்ணங்கள் பெறப்படுகின்றன. இந்த எண்ணங்கள் மொழி, கணிதம்,

ஓவியம், இசை, கலைப்பொருட்கள், மனித செயற்பாடுகள் எனப் பல வடிவங்களில் வெளிப்படுகின்றன.

சிந்தித்தலின் உயர்வே கணியன் பூங்குன்றனாரின் உலகப்பார்வையைச் சற்று உயர்வாக எண்ணத் தூண்டுகிறது. மேலும் அவரது மன ஆளுமையையும் இப்பாடல் வெளிக்காட்டுகிறது. இன்றைய உலகம் சுயநலம் மிக்க மனிதர்கள் நிறைந்ததாகும். இந்த உலகத்தில் சுயநலம் சிறிதும் இல்லாத மனிதர்களின் மேன்மைப் பண்பினை இப்பாடல் விளக்குகிறது. இந்த உலகம் ஏன் இன்றளவும் நிலைப்பெற்றிருக்கிறது? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு இவ்வாசிரியர் விடை கூறுகிறார். தேவர்கள் அருந்தக்கூடிய அமிழ்தம் கிடைத்த போதும் தனக்கு மட்டும் உரியது என்று தனித்து உண்ணாத மனிதர்கள் உள்ளதால் இந்த உலகம் இன்றளவும் திகழ்கிறது. கோபப்பண்புச் சிறிதும் இல்லாதவர்கள், சோர்வடையாதவர்கள், மற்றவர்களின் கருத்துக்களுடன் இயைந்து செல்பவர்கள், புகழுக்காக உயிரையும் தரத் தயங்காதவரகள், தமக்கென எதனையும் பெற முயற்சி செய்யாதவர்கள், பிறருக்காகவே எப்போதும் முயற்சி செய்து உழைப்பவர்கள் போன்ற மனிதர்கள் இருப்பதால்தான் இந்த உலகம் இன்றளவும் நிலைப்பெற்றுள்ளது என்ற சிந்தனையைக் கூறியுள்ளார். மேலும் மனித உள்ளத்தினை மேம்பாடு அடையச் செய்யக்கூடிய கருத்துக்களைக் கொண்டது இப்பாடல்.

தீமையும் நல்லதும் அவரவரின் மனதைப் பொறுத்தது. அது மற்றவர்களால் நிகழக்கூடியது அல்ல என்கிறார்.

‘‘யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர் தரவாரா
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன
சாதலும் புதுவது அன்றே வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்,
இன்னாது என்றலும் இலமே; மின்னொடு
வானம் தண் துளி தலை இ, ஆனாது
கல் பொருது இரங்கும் மல்லல் பேர் யாற்று
நீர் வழிப்படூஉம் புணை போல், ஆர் உயிர்

முறை வழிப்படூஉம் என்பது திறவோர்

காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்

பெரியோரை வியத்தலும் இலமே;

சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே''[105]

தெளிந்த மனச்சிந்தனையுடையோரால் மட்டுமே இதுபோன்ற மன ஆளுமைச் செய்திகளைச் சொல்ல முடியும். எனவே தெளிந்த மனசிந்தனை வேண்டும். தன்னை ஆளுகின்றவன் எவனோ அவனால்தான் நல்ல சிந்தனைப் பிறக்கும். அப்பொழுதுதான் உலகை ஆளுகின்ற சக்தியைப் அவனால் பெற முடியும்.

இதைப்போன்றே

''பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந்தத்தங், கருமமே கட்டளைக் கல்''[106] என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். அவனவன் செய்கின்றே செயலே அவனை நல்லவனாக உயர்த்துகின்றது என்ற மன ஆளுமையை வெளிப்படுத்தியுளார்.

மேலும் தம் ஆளுமைப்பண்பை ஔவையார் குறிப்பிடும் போது, எந்த நிலமாக இருந்தாலும் அந்த நிலத்தில் நல்ல ஆடவர்கள் இருந்தால் அந்நிலம் வளமை அடையும் என்ற உயரிய சிந்தனையைத் தன் ஆளுமையின் மூலம் எடுத்துக்காட்டுகிறார்.

''நாடா கொன்றோ; காடா கொன்றோ;

அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;

எவ் வழி நல்லவர் ஆடவர்,

அவ் வழி நல்லை; வாழிய நிலனே''[107]

### 2.20.4. நோக்கம்

மன ஆளுமைக்கு அடுத்த சிறப்பு என்று கூறுவோமானால் நோக்கம் நல்லவையாக அமைந்திருக்க வேண்டும். அரசன் சட்டம் இயற்றலாம். அது மக்களுக்குப் பயன்படும் விதத்தில் அமைய வேண்டும். அதைவிடுத்து மக்களை துன்பப்படுத்தும் விதமாக இருத்தல் கூடாது. மன்னன் ஒருவன் வரிவசூல் செய்ய

படைவீரர்களை அனுப்பி வைக்கின்றான். அதிகமான வரியை மக்களுக்கு விதிக்கின்றான். இதனைக்கண்டு மக்கள் மனதை நன்கு அறிந்த புலவர் மன்னனுக்குத் தன் அறிவுரையாகவும், மன ஆளுமையை

''காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே

……… ……… ……… ………..

யானை புக்க புலம்போலத்

தானு முண்ணா உலகமொங் கெடுமே''[108]

என்று பாண்டியன் அறிவுடைநம்பிக்கு மக்களிடம் எவ்வாறு வரிவசூல் செய்ய வேண்டும் என்று பிசிராந்தையார் தரும் உலக நோக்கு கருத்தைக் மன்னனுக்குத் தெளிவுபடுத்தும் காட்சி. இது இன்றளவிலும் நடைமுறையில் உள்ளது. உலக நாடுகள் பல இன்று பொருளாதரத்தில் சிக்கித் தவிக்கும் சூழல் நமக்கு நன்றாகத் தெரியும்.

பழங்காலத்தில் புலவர்கள் பெருமிதத்தோடு வாழ்ந்தனர். அரசர்களிடமிருந்து பரிசு பெற்றனர். ஆனால், பெருமையோடும் மதிப்போடும் பெற்றனர். பொருள் கொடுக்கின்ற அரசன் காலந்தாழ்த்தியோ, மதிப்புக் குறைவுடன் பெறுவதில்லை. அதுமட்டுமல்ல, புலவர் கொடையாளர்களுக்குப் பரிசு கொடுப்பதும் உண்டு.

பிறருக்காக வாழ்வதே வாழ்க்கை, தமக்காக வாழ்வது வாழ்க்கையாகாது. உலகம் மக்களுக்காக மாந்தர் உழைக்கும் போது, அந்த உலக மக்கள் ஒருவராக இருக்கும் கவிஞருக்கும் பயன் கிடைக்கும். இந்த உலகம் இருப்பது பிறருக்காக வாழ்கின்றவர்களால் தான். தமக்காக வாழ்கின்றவர்களால் இல்லை. வள்ளுவர் பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர் தொடுத்தவற்றுள் எல்லாம் தலை என்று கூறினார். தனியாக உண்பதைக் காட்டிலும் பலரோடு உண்பது மகிழ்வைத் தரும். பிறருக்குக் கொடுத்து உண்பது இன்னும் சிறப்பாகும். பிறரை வெறுக்காமல் வாழ்வது மிகப்பெரிய சிறப்பு. எப்போதும் உழைத்துக் கொண்டிருப்பது அதைவிட சிறப்பு.

''பழங்காலத்தில் அரசர் குலத்தைச் சார்ந்தவர்களுக்குக் கூட மறவர் குலத்தலைவர்கள் தங்கள் பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதில்லை.

ஆற்றல் உடையவர்களுக்குத் தங்கள் பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பர். அரசர் குலத்தில் தோன்றினான் என்பதற்காகத் தங்கள் பெண்ணைத் தருவதில்லை. பெண் கேட்டு அரசர் பணியாளன் ஒருவன் மறவர்குலத் தலைவனைச் சந்திக்கின்றான். அரசன் ஓலையை அனுப்பி உள்ளான்"[109].

## 2.21. மதிப்பு

புலவர்கள் யாவரும் ஒருநிலையில் வைத்துப் பார்க்கப் பெறவில்லை. அப்படிப் பார்க்கப்பட்ட நிலையில் 'வரிசை அறிக' என்று திறமிக்க புலவர் மொழிந்தனர். எனவே,

1. கல்வி கேள்விகளில் வல்லமை
2. புலமைப் பிறராலும் மதித்துப் போற்றப்பட்ட சிறப்பு
3. தன்னலமற்ற பொது நோக்கு
4. இடித்துரைத்து அரசரையும் திருத்தமுனையும் பேராண்மை
5. பொருள் விரும்பி வாழாமை

ஆகிய அடிப்படையில் புலவர்கள் மதிப்புப் பெற்றிருந்தனர்.

பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் உரைக்கையில், கூறும் கூற்றுப் புலமைச் சிறப்பை நினைத்துப் போற்றுவதாக உள்ளது.

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை"[110]

என்று பாண்டியன் நெடுஞ்செழியன் கூறுகின்றான்.

"உலகப் போக்கை மாற்றும் குறிக்கோளுடையப் புலவர்க்கு நெடுஞ்செழியன் சரியான கருவியாக அமைந்தனன். சங்கச் சமூகம் இப்புலவர்களின் முயற்சியில் வேறு திசை நோக்கியிருக்கின்றது"[111].

புலவர்களின் இடித்துரையும் செவியறிவுறூஉம் அக்காலத்திருந்தன. எனினும் வேந்தனின் பேரதிகாரம் அவனை இறைவன் எனக் கருதச் செய்தது.

நிலவுடைமைச் சமுதாய அமைப்பின் எல்லாப் பண்புகளும் பலராலும் ஏற்கப்பட்ட நிலையில் இருந்தன என்பது தெளிவு. செல்வ மேலாண்மை, அதிகார மேலாண்மை என்பன அக்காலத்திருந்தன. இவற்றை ஏற்காதவர்கள், போற்றாதவர்கள் மிகச் சிலர் இருந்தனர். எனினும் அவர்களின் குரல் அறிவுறுத்தும் வகையிலேயே வெளிப்பட்டது. அறிவாண்மை சில சமயங்களில் அதிகார மேலாண்மையைக் கடிந்திருக்கிறது. எனினும் அக்குரல் எல்லாக் காலங்களிலும் அரசர்களால் கொள்ளப்படவில்லை என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

“ஒலியல் கண்ணிப் புலிகடி மாஅல்
நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே இயல்தேர் அண்ணல்”[112]

எனப் புலவனை இகழ்ந்தமையால் ஓரரசனின் நாடே கெட்டதாகக் குறிப்பர்.

புலவன் தன் அறிவு வீச்சைக் காட்டுவதற்கு அமைந்த களமாக அன்றைய பாட்டுலகம் இல்லை. கோட்டுக்குள் விளையாடுதல் போல சில விதிமுறைகளைத் தாண்டாது பாட்டுப் புனைவதில் தான் புலவனது திறனே அடங்கியிருக்கிறது. புலவன் சில சமயங்களில் இதற்காகத் தன் அறிவை மட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## 2.22. புலவர்களின் உலகியல் வாழ்க்கை

பெரும்பாலான புலவர்கள் புலமையே தொழிலாக இருந்தது எனத் தெரிகிறது. அரச ஆணைகளை மாற்றுவதாகவும் பெயர்த்தெரிவதாகும் புலவர் குரல் இயங்கிய காலம் சங்க காலம். இக்கருத்தின் வலிமைக்குச் சில சான்றுகளை இங்குக் காணலாம்.

கோவூர்கிழாரின் பாடல்களில் ஓர் ஆளுமை மிக்க குரலைக் காணலாம். மூன்று நிகழ்வுகளில் இவ்வாளுமை வேந்தனை இடித்துரைக்கவும் திருத்தவும் முற்பட்டிருக்கிறது. நலங்கிள்ளி ஆவுரை முற்றுகையிட்ட காலத்து நெடுங்கிள்ளி கோட்டை வாயிலை அடைத்து உள்ளொடுங்கி வாழ்கிறான். புலவர்க்கு இ∴து அறமாகவும் வீரமாகவும் தோன்றவில்லை.

"துன் அருந் துப்பின் வய மான் தோன்றல்!
அறவை ஆயின், 'நினது' எனத் திறத்தல்
மறவை ஆயின், போரொடு திறத்தல்:
அறவையும் மறவையும் அல்லையாக,
திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்
நீள் மதில் ஒரு சிறை ஒடுங்குதல்
நாணுத்தகவு உடைத்து, இது காணுங்காலே"[113]

என்று நெடுங்கிள்ளியை நோக்கிப் பாடுகிறார் புலவர்.

"ஒரு புலவர் அரசரை நோக்கிப் பாடிய பாடல் என்ற அளவில் மட்டும் கொள்ளுதற்கில்லை. வெட்கப்படத்தக்கது நின்செயல் என்று கொற்ற வேந்தனைக் குற்றமுரைக்கும் அளவு புலவர்க்கு ஒரு வலிமை இருந்திருக்கிறது"[114].

புலவர்களுக்கு அரசியல் தலையீடு செய்யும் பழக்கமில்லை. எந்த நாட்டிற்கும் பறந்து சென்று தங்கும் பறவை போன்ற வாழ்க்கை அவர்களுடையது என இப்பாட்டிற் புலவர் குறிக்கின்றார். "மனிதனின் உள்ளம் பண்டுபடுதற்கு இவை தேவை எனக் கருதிற்றுப் புலமைச் சமூகம்"[115]

"சங்கச் சமூகம் இப்புலவர்களின் முயற்சியில் வேறுதிசை நோக்கியிருக்கின்றது. பொருள் தேடுதல், போர் வினை மேற்கொள்ளல் போன்ற புறச்செயல்களில் அழுந்திக் கிடந்த மனித உலகைக் குடும்பக்களம் நோக்கித் திருப்புவதோடு இப்பாடல்கள் அமையவில்லை. நாடி வருபவர் பலர்க்கும் பொருளைப் பகுத்து வழங்குக, வேள்விகளை இயற்றுக, தேறல் உண்டு மகிழ்ந்தினிது வாழ்க என வேறு வேறு வினைகளின் மருங்காக உள்ளத்தைச் செலுத்தினர் புலவர்"[116].

"பகைவரை நோக்கிக் கூறுவார் போல, அதியமான் நெடுமானஞ்சியின் குணங்களை இவர் பாராட்டிக் கூறியிருக்கும் பகுதிகளும், அவனால் தூதனுப்பப்பட்டுச் சென்ற பொழுது தன் மேம்பாட்டைப் புலப்படுத்தற் பொருட்டுத் தொண்டைமான் தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டக் கண்டு அப்படைக்

கலங்களைப் புகழ்வார் போல அதியமானது போர்த்திறத்தை வெளிப்படுத்தியருக்கும் பகுதியும் மிக்க விம்மிதத்தை விளைவிக்கும். அதியமான் கோவலூரெறிந்ததனைப் பரணர் பாடியதையும் மூவேந்தரும் சேனைகளுடன் பாரியை வெல்லக் கருதி அவன் நகரைச் சூழ்ந்து புகல்போக்கின்றித் தடுத்த போது, பறவைகளால் நெற்கதிரைப் புறத்திருந்து வருவித்து உள்நகரத்தாரைப் பசியால் வருந்தாதபடிப் பாதுகாத்தளித்த கபிலர் செய்தியையும் புலப்படுத்தியிருத்தல் புலவரிடத்து இவருக்குள்ள பேரன்பை விளக்குகின்றது"[117].

இக்குறிப்பிலிருந்து புலவர் தம் உள்ளம் விழைந்தனயாவற்றையும் பாடினாரல்லர் என்பது விளங்கும். அவர்கள் பாட்டின் மையப்பொருள் சமுதாய நலனாகவும் மனித நேயமாகவும் இருந்தமை அறியப்படும் சமுதாயம் இதற்கீடாகப் புலவர்களைப் பெரிதும் மதித்திருக்கின்றது.

"பண்டைக்காலப் புலவர்க்கிருந்த தன்னலமற்ற பொதுநோக்கு அவர்களைச் சிறப்புடை இனமாகப் பிரித்துக் காட்டியிருக்கிறது. மதி தேய்ந்து போகிறதே என்ற கவலை புலவரை வாட்டுகின்றது"[118]. சமுதாயத்தின் உயிர் மக்கள் தொகுதி. அம்மக்கள் நல்லவர்களாக இருப்பின் சமுதாயக்குறை எதனையும் சீர்செய்து விட முடியும் என்று நம்பினர் பழந்தமிழ்ப் புலவர்.

## தொகுப்புரை

- புலமைத் தொழிலில் ஈடுபட்டு வந்த பாணர்கள், கூத்தர்கள், பொருநர்கள், விறலியர், புலவர்கள் ஆகியோர் நிலத்தலைவர்களிடமும் சீறூர்த் தலைவர்களிடமும் மன்னர்களிடமும் தங்களது திறன்களை வெளிப்படுத்திப் பரிசில் பெறுவதைத் தங்களின் முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். எனவே புலமைத் தொழில் என்பது தனித்த தொழிலாக வளர்ச்சி பெற்ற காலகட்டமாகச் சங்க காலத்தைக் குறிப்பிடலாம்.

- இரந்து பெறும் பொருளைத் தான் மட்டும் வைத்து வாழாது, தங்களது சுற்றத்திற்கும் பகிர்ந்து கொடுத்து வாழும் நிறைவான வாழ்க்கையைப் புலவர்கள் வாழ்ந்துள்ளனர். இவ்வாறு சுற்றத்தாரையும் பேணி வாழும் வாழ்க்கை, புலமைத் தொழிலில் ஈடுபடுவோர்க்கு மட்டுமின்றிச் சங்க காலக் குடிமக்களின் பொது வாழ்க்கைப் பண்பாக இருக்கிறது.

- தலைவர்களிடம் தங்களது திறனை வெளிப்படுத்திப் பரிசில்களைப் பெறும் புலவோரும் கலைஞர்களும் தங்களது ஆளுமைகளை மிகச் சிறப்பாக வெளிப்படுத்தத் தவறுவதில்லை. அவர்கள் வெளிப்படுத்தும் ஆளுமைத் திறன்களின் வாயிலாக நிலத்தலைவர்களும் அவர்களிடம் பெரும் மதிப்புக் கொண்டுள்ளனர் எனலாம்.

- அரசர்கள் தங்களது அரசாட்சியிலும் குடிகளைப் பேணுதலிலும் குறைபாடுடையவர்களாகவும் தவறு செய்பவர்களாகவும் இருந்தால், தயக்கமின்றி அவர்களது குறைகளைச் சுட்டிக்காட்டும் பொறுப்புணர்வு மிகுந்தவர்களாகவே பெரும்பாலான கலைஞர்களும் புலவர்களும் இருந்துள்ளனர். நிலத்தலைவர்களின் குறைகளை மிகவும் நயமாக வெளிப்படுத்தும் நயத்தக்க நாகரிகம் கொண்டிருந்தனர்.

- புலமைத் தொழிலில் ஈடுபட்ட பிரிவினர் தாங்கள் பொருள் இரப்பவர்களாக இருப்பினும் தங்களது வறுமை நிலையினை நேரடியாக மிகுதியும் வெளிப்படுத்தவில்லை. மாறாக, வறுமை நிலையில் இருப்பதாகப் பாடுவது ஒருவகையான பொருண்மை சார் உத்தியாக உள்ளது எனலாம்.

- பரிசில் பெற்று வாழும் இரவலர்களாகப் புலமைத் தொழிலினர் இருந்தபோதிலும் அவர்களுக்கான சமூக மரியாதை மிகவும் சிறப்பானதாக இருந்திருக்கிறது. தன் மதிப்பும் தற்சார்பும் உடையவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளவே இரவலர்கள் விரும்பியுள்ளனர். புலமைச் செருக்கு அவர்களிடம் மிகுந்திருந்தது. பொதுநிலைச் சமூகமும் அரசு சார் சமூகமும் அவர்களுக்கு மிகுந்த மரியாதை கொடுத்திருக்கின்றன. அரசர்களும் புலமைத் தொழிற்பிரிவினருக்கு உரிய மரியாதையை உறுதிப்படுத்தியுள்ளனர்.

- புலமைத் தொழிற்பிரிவினர் மிகுந்த நன்றியுணர்ச்சி உடையவர்களாகவும் அந்நன்றி உணர்ச்சியைத் தங்களது படைப்புகளில் தயக்கமின்றி வெளியிடுபவர்களாகவும் உள்ளனர். தங்களின் வாழ்க்கையும் இருப்பும் கொடைகளை வாரிக்கொடுக்கும் வள்ளல்களாலேயே சாத்தியமாகிறது என்பதை அவர்கள் உணர்ந்தவர்களாக உள்ளனர். அதனால் தங்கள் வாழ்க்கையைச் சாத்தியமாக்கும் வள்ளல்களுக்கு வாழ்வின் இறுதிவரை நன்றிக்கடன் பட்டவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொண்டுள்ளனர்.

- வள்ளல்களிடம் பெற்ற பொருள்களைத் தங்களது உறவுச் சுற்றம் மட்டுமின்றி விருந்தினர் உள்ளிட்ட பிறருக்கும் பங்கிட்டு அளிக்கும் பண்புடையவர்களாகப் புலமைத் தொழில் புரிவோர் இருந்தனர். தாங்கள் பெற்ற வளத்தைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்துள்ளனர்.

- நிலத்தலைவர்களாகிய வள்ளல்லகளிடம் இரந்து உண்ணும் வாழ்க்கை விதிக்கப்பட்டவர்களாயினும், ஆளுவோரிடம் முரண்பாடுகள் காணுமிடத்து அவற்றைச் சுட்டிக்காட்டத் தயங்காத துணிச்சல் மிக்கவர்களாகவும் புலமைத் தொழில் புரிவோர் இருந்துள்ளனர். நயமாக உரைத்தல், பணிவாக உரைத்தல் என்பதையும் தாண்டிச் சில வேளைகளில் கடுமையான முறையில் மறுத்துரைக்கவும் சுட்டிக்காட்டவும் செய்துள்ளனர் எனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. க.கைலாசபதி, தமிழ் விரநிலைக் கவிதை, ப.161.
2. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் : பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.54.
3. உ.வே.சாமிநாதையர், சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப.87.
4. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.263.
5. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.138.
6. புறம்.107
7. மேலது.235
8. மேலது.228:7
9. மேலது.273:15
10. நெடு.76-79
11. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டும் மரபும் எழுத்து மரபும், ப.76.
12. புறம்.47.
13. மேலது.375
14. அகம்.301:18-23
15. பதிற்.67:1-3
16. பெரும்பாண்.18-22
17. மதுரை.340-342
18. குறள்.226
19. மேலது.734
20. புறம்.162
21. வ.சுப.மாணிக்கம், வள்ளுவம், ப.136.
22. பாரதியார், பாரதியார் கவிதைகள்
23. நாலடி.285
24. புறம்.159:1-5
25. மேலது.159:7-11
26. மேலது.159:22-25
27. பதிற்.23:1-10
28. புறம்.181:7-10
29. சிறுபாண்.135-140
30. புறம்.145:3-4

31. குறள்.734

32. மணி. 1:70-71

33. ச.சிவகாமி, இலக்கியப் பொருட்பகுப்பாய்வு, பக்.151,152.

34. நாலடி.91

35. சிலம்பு.5:72-73

36. புறம்.180:1-2

37. மேலது.260:6-7

38. நா.செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, ப.97.

39. நா.பாலுசாமி, (ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம், தொகுதி – 8, ப.75.

40. சிறுபாண்.1-10

41. புறம்.138:1-5

42. பொருந.49-51

43. மலைபடு.14-20

44. மேலது. 47-50

45. புறம்.121:1-2

46. பொருந.58-59

47. மலைபடு.65-66

48. தேனப்பன், தமிழ் இலக்கியத்தில் மனித நேயம், ப.32.

49. கலி.133:6-9

50. சிறுபாண்.34-40

51. மேலது.143-145

52. மேலது.269

53. பெரும்பாண்.37

54. பொருந.61-63

55. மலைபடு.54-55

56. மலைபடு.64-65

57. பொருந.67-68

58. பெரும்பாண்.20-22

59. சிறுபாண்.38-40

60. புறம்.68:1-4

61. மேலது.69:5-6

62. மேலது.42

63. மேலது.266

64. மேலது.107

65. மேலது.142

66. மேலது.143

67. மேலது. 38:14-17

68. மேலது. 108:5

69. மேலது.110:4

70. மேலது.265:6-7

71. சிறுபாண்.218-220

72. புறம்.163

73. மேலது.27

74. மேலது.159

75. மேலது.201

76. மேலது.182

77. குறள்.

78. புறம்.139

79. மேலது.148

80. அகம்.78:15-16

81. பதிற்.85:10-12

82. புறம்.162:1-7

83. மேலது.148:5-7

84. ஔவையார், மூதுரை, பா.எண்.22

85. மேலது.15:3-5

86. குறள்.110

87. புறம்.46:1-4

88. புறம்.163:5-9

89. குறுந்.292:1-5

90. புறம்.151:7-9

91. தே.ப.பெருமாள், தமிழ்ச்சுவை இன்பம், ப.28

92. புறம்.195:6-9

93. மேலது.13:13

94. மேலது.379:6

95. மேலது.389:11

96. மேலது.394:2

97. முனைவர் க.கோ.வேங்கடராமன், தமிழிலக்கிய வரலாறு, ப.99

98. புறம்.

99. மு.வரதராசனார், புலவர் கண்ணீர், ப.35.

100. மேலது.65

101. புறம்.217

102. மேலது.242

103. மேலது.162

104. குறுந்.3

105. புறம்.192

106. குறள்.505

107. புறம்.187

108. மேலது.184

109. காவ்யா தமிழ், அக்டோபர் - டிசம்பர், 2012, ப.100

110. புறம்.72:13-16

111. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, ப.35

112. புறம்.202:10-13

113. மேலது.44:10-16

114. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, பக்.26-27

115. மேலது.ப.35

116. மேலது.ப.35

117. மேலது.ப.37

118. மேலது.ப.38

3.1. அறிவுத்திறமை

3.2. **சங்க காலப் புலவர்கள் அறிவித்தலும் அறிவுறுத்தலும்**

3.2.1. அறிவுறுத்தும் செய்திகள்

3.2.2. வரிச்சுமையை முறைப்படுத்துதல்

3.2.3. நீர் வளத்தை வலியுறுத்துதல்

3.2.4. குடிப்பெருமையை உணர்த்துதல்

3.2.5. ஒற்றுமையின் சிறப்புணர்த்தல்

3.2.6. மனைவியின் பிரிவுத்துயரை உணர்த்துதல்

3.2.7. கொலைக் குற்றம் புரியாமல் தடுத்தல்

3.2.8. புலவர்கள் அறிவுறுத்திய அறநெறிகள்

3.3. அறம் வலியுறுத்தும் இன்றைய கவிஞர்

3.4. சமூகம்

3.5. அரசின் அடிப்படைக் கூறுகள்

3.6. சங்க காலத்து அரசர்களின் நிலை

3.7. **அரசரின் சிறப்பியல்புகள்**

3.7.1. காட்சிக்கு எளியவன்

3.7.2. சுற்றம் காத்தல்

3.7.3. மன்னனே மக்களுக்குத் தாய்

3.7.4. மக்களின் நலன் நாடுதல்

3.7.5. வறுமைத்துயர் போக்குதல்

3.8. **ஈகையின் தன்மை**

3.8.1. ஈகையின் பயன்

3.8.2. கனவிலும் காணாத பொருளுதவி

3.8.3. ஈதல் கொள்ளல் பற்றிய சிந்தனை

3.9. இரவச்சம் தன்மை

3.10. இரவலரின் தன்மானம்

3.11. புலவருக்குப் புரவலர் கொடுத்த பரிசில்

3.12. வாழ்த்து

**3.13. புலவருக்கும் அரசருக்கும் உள்ள தொடர்பு**

3.13.1. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு

3.13.2. ஔவையார் - அதியமானின் நட்புத்திறம்

3.13.3. கபிலர் - பாரி நட்புறவு

**3.14. புலவர் - அரசர் முரண்பாடுகள்**

3.14.1. மன்னர்களை இடித்துரைத்தல்

3.14.2. நாட்டு வளம் பெறுக

3.14.3. குடிகளைக் காத்தல்

3.14.4. மன்னர் ஆட்சி முறை

3.14.5. பேகனின் புறவொழுக்கத்தை இடித்துரைத்தல்

3.15. நல்லாட்சியும் கொடுங்கோல் ஆட்சியும்

3.16. மக்கள் வரி செலுத்துதலில் மன்னன் பங்கு

3.17. கொடுங்கோல் அரசர்

3.18. போர்களால் ஏற்படும் அழிவு

3.19. புலவர்களின் பாராட்டு

3.20. புரவலர்க்கு இருக்க வேண்டிய பண்புகள்

3.21. புலவன் அரசரின் பெருமையைப் பேசுதல்

3.22. புலவர்களை ஆதரித்தல்

3.23. பாணர்களுக்கு ஆதரவு

3.24. அரசரின் மனமும் போர்க்குணமும்

3.25. அரசனின் மானப்பண்பு

3.26. மானம் கருதி வடக்கிருக்கத் துணிதல்

3.27. தோற்ற மன்னர்களின் நிலை

3.28. பகைவர் நாட்டில் எரியூட்டுதல்

3.29. நீர்நிலை அழித்தல்

3.30. முகக்குறிப்பு அறிந்து ஈதல்

3.31. இரவலர் புரவலரை நாடிச் செல்லும் தன்மை

3.32. பரிசிலர் தம் வரிசை கருதுதல்

3.33. இரவலரின் இளைத்த மேனி

3.34. சுற்றத்தாரைப் பாரமாகக் கருத வைக்கும் வறுமை

3.35. புலவர்.ˑ. பாணர் சமூக ஒருங்கிணைப்பு

3.36. பிறருக்காக வாழுதல்

3.37. பகுத்து வழங்குதல்

3.38. புகழ்பட வாழ்தல்

3.39. தொகுப்புரை

3.40. சான்றெண் விளக்கம்

# இயல் 3

## புலவர் – அரசர் – சமூகம் : உறவும் முரணும்

உலகில் அறம் தழைக்கவும் அறம் வளர்க்கும் ஆன்றோர் வாழ்வு சிறக்கவும் அரசனின் ஆட்சி முறையே காரணமாக அமையும். அக்காரணங்களை உணர்ந்தே சங்க கால அரசர்கள் நீதி, நேர்மை, நடுவுநிலைமை போன்ற நற்பண்புகளோடு விளங்கி, நல்லாட்சி புரிந்தனர். அதனால் தான் காலங்கள் மாறினாலும் சங்ககால அரசர்களின் பெருமை வாய்ந்த அரசாட்சி முறை இன்றும் போற்றப்பட்டுச் சங்ககாலம் ஒரு 'பொற்காலம்' என அழைக்கப்படுகிறது.

சங்க காலப் புலவர்கள் கல்வியில் சிறந்த கவிவாணர்களாகத் திகழ்ந்துள்ளனர். உலகியற் பொருள்களையும் இயற்கைப் பொருள்களையும் நுட்பமாக ஆராய்ந்து அவற்றைத் தமது பாடல்களில் சுட்டிக்காட்டி மக்களை அறநெறியில் செல்லுமாறு அறிவுறுத்தியுள்ளனர். அவ்வாறு புலவர்களால் பாடப்பட்ட பல பாடல்கள் எதிர்பாராமல் உடனுக்குடன் பாடப்பட்டவைகளாகும். மேலும், அரசர் முன்னிலையில் கண்டித்தல், அறிவுறுத்தல் என நேரடியாக நடந்த பல்வேறு நிகழ்ச்சிகளைக் குறித்தும் அப்பாடல்கள் விளம்புகின்றன. இவற்றின் மூலம் அக்காலப் புலவர்கள் அரசரைப் பாடிப் பரிசில் பெறுவதையே தொழிலாகக் கொள்ளவில்லை. அரசர்கள் தவறு செய்த போது பயப்படாமல் கண்டித்து, அறநெறிப்படுத்திய புலவர்கள் அரசர்களுக்கு அவ்வப்போது அறிவுரைகளை எடுத்துரைப்பதே இவ்வியல் ஆராய முற்படுகிறது.

### 3.1. அறிவுத்திறமை

"அறிவு என்னும் ஒன்றே மக்கட் பிறப்பின் சிறப்பியல்பு. மக்களாய்ப் பிறந்தவர் அறிவைத் தேடி உழைத்தல் வேண்டும். அறிவைப் பிறர்க்கு அளித்தல் வேண்டும். அறிவின் பயனால் இன்புறல் வேண்டும். இதுவே மக்களின் வாழ்வு. இவ்வாழ்வில் சீர்பெற வாழ்பவரே புலவர் பெருமக்கள்"[1] என்று மு.வரதராசன் தமிழ் நெஞ்சம் என்னும் தமது நூலில் புலவரின் இயல்பைக் குறித்துக் கூறியுள்ளார்.

சங்க காலத்தில் அரசரின் கொடையறமும் புலவரின் புலமை நலமும் போற்றப்பட்டுள்ளது. அரசர்கள் புகழ்மிக்க செயல்களைச் செய்த போது புலவர் பெருமக்கள் போற்றிப் பாராட்டியுள்ளனர். அதே சமயம் அரசர்கள் அறநெறி தவறி நடக்கும் போது பயப்படாமல் அதனைச் சுட்டிக் காட்டியும் அவர்களை நல்வழிப்படுத்தியும் உள்ளனர். சங்க காலத்தில் அரசர்களைக் காட்டிலும் புலவர்களுக்கு மக்களுடன் கலந்து பழகும் வாய்ப்பு மிகுதியாக இருந்துள்ளது. அதனால் மக்கள் புலவர்களின் செயல்களைக் கண்டு அவர்கள் மீது மிகுந்த மதிப்பு உடையவராக இருந்தனர்.

“புலவர்களில் பலர் வறுமையால் வாடிய வாழ்க்கையரேனும் தமது வயிற்றை வளர்ப்பதற்காக யாரையும் பாடித் தமது புலமையை விற்கவில்லை. வீரமன்னரைப் புகழ்ந்தனர். வீரமற்றோரை இகழ்ந்தனர். அறனழியச் செய்வோரையும் அவர் வழித் தோன்றல்களையும் வெறுத்தனர்”[2] என்ற தே.ப.பெருமாளின் கூற்று இதன் மூலம் உறுதியாகின்றது.

## 3.2. சங்க காலப் புலவர்கள் அறிவித்தலும் அறிவுறுத்தலும்

### 3.2.1. அறிவுறுத்தும் செய்திகள்

மக்களின் குறைகளை அறிந்து அதனைப் போக்கும் வகையில் புலவர்கள் அரசரிடம் பிரச்சனைகளைக் குறித்து எடுத்துரைத்துள்ளனர். புலவர்கள் கீழ் காணும் அரசர்களின் செயல்பாடுகளில் தலையிட்டு அவர்களுடைய குறைகளைச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

- வரிச்சுமையை முறைப்படுத்துதல்
- நீர்வளத்தை உணர்த்துதல்
- ஒற்றுமையின் சிறப்புணர்த்தல்
- மனைவியின் பிரிவுத்துயரை உணர்த்துதல்
- கொலைக் குற்றம் புரியாமல் தடுத்தல்

போன்றவை புலவர்கள் அரசருக்கு அறிவுறுத்தும் செய்திகள் ஆகும்.

### 3.2.2.வரிச்சுமையை முறைப்படுத்துதல்

பாண்டியன் அறிவுடைநம்பி என்னும் அரசன் தன் நாட்டு மக்களிடம் அதிக வரி வசூலித்து வந்தான். அப்போது பிசிராந்தையார் என்னும் புலவர் அவன் செயலைக் கண்டித்து அறிவுரை வழங்கினார். மக்களால் கொடுக்கக் கூடிய அளவிலான பொருளையே அரசன் வரியாக விதிக்க வேண்டும் என்று புலவர் கூறியதை,

''காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே

…………………………………………

யானை புக்க புலம்போலத்

தானும் உண்ணான் உலகமும் கெடுமே''[3]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. விளைந்த நெல்லை சேதம் இல்லாமல் அறுத்து யானைக்குக் கவளம் கவளமாக உணவளித்தால் ஒரு மா வுக்குக் குறைந்த நிலத்திலே விளைந்த நெல்லையும் பல நாட்களுக்கு உணவாகக் கொடுக்கலாம். அவ்வாறு இல்லாமல் நூறு வயல்களிலே விளைந்த அதிக அளவு நெல்லாக இருப்பினும் யானையே வயல்களில் இறங்கித் தனியாக நெற்கதிரை உண்ணுமாறு விட்டால் அவை அனைத்தும் வீணாகும். அதோடு யானையின் வாயிலே போகும் நெல்லை விட அதன் கால்களால் மிதிப்பட்டுச் சேதமாகும் நெல்லே மிகுதியாக இருக்கும். அதே போல, அறிவுடைய மன்னன் வரி வாங்கும் முறையை அறிந்திருக்கவில்லை எனில் யானை புகுந்த விளை நிலத்தைப் போல அவ்வரி அரசனுக்கும் அவனுடைய நாட்டு மக்களுக்கும் பயன்படாது அழிந்துபடும் என்று பிசிராந்தையார் தமது பாடலின் மூலம் அறிவுறுத்தினார். எனவே, மன்னன் மக்களின் நிலையறிந்து வரியை அறநெறிப்படி வாங்குவனாயின் மக்களும் மகிழ்ச்சியோடு அரசுக்கு வரி செலுத்துவர். அதனால், நாட்டின் பொருளாதாரம் கூடி மக்களும் தமது வாழ்வில் மகிழ்ச்சியடைவர் என்பதை உணர்ந்தான் பாண்டியன் அறிவுடைநம்பி.

இதேபோல, மக்களிடமிருந்து அளவுக்கு அதிகமாக வரிகளை வாங்கும் அரசு நீண்ட நாள் நிலைத்து நிற்க முடியாது. ஆதலால் குடிமக்கள் வரி செலுத்தும் தன்மையை அறிந்தே அரசு வரி விதிக்க வேண்டும். இதனை உணர்ந்தே சாமி சிதம்பரனார் அவர்கள்,

"ஏழை எளியவர்கள் தலையிலே வரியைச் சுமத்தும் அரசு கொடுங்கோல் அரசாகும். அது அறமன்று நீதியும் அன்று. வரி கொடுக்கும் வல்லமை அற்றவர்கள் தங்கள் துன்பத்தைத் தாங்க முடியாத போது ஆட்சிக்கு எதிராகத் திரும்பி விடுவார்கள்"[4] என்று பழந்தமிழர் அரசியல் என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

### 3.2.3. நீர் வளத்தை வலியுறுத்துதல்

நீர் இல்லை என்றால் இந்த உலகில் உள்ள எந்த உயிரும் உயிர் வாழ முடியாது. இதனை உணர்ந்தே வள்ளுவர்,

"நீர் இன்று அமையாது உலகு எனின்"[5]

என்று கூறியுள்ளார். நீர் உள்ள நாட்டிலே தான் உணவுப் பஞ்சம் உண்டாகாது. மழை நீரை வீணாக்காமல் ஏரிகளில் தேக்கி வைக்க நீர்த்தேக்கத்தை ஏற்படுத்தும் பணியை அரசர்களே செயலாற்றியுள்ளனர். இத்தகைய செயலில் கருத்தின்றி இருந்த அரசர்களுக்குப் புலவர்கள் அறிவுறுத்தி வந்துள்ளனர். சான்றாக, குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனிடம்,

"மல்லல் மூதூர் வய வேந்தே
…………………………………
உடம்பும் உயிரும் படைத்தி சினோரே"[6]

என்று கூறி நீர்வளத்தைப் பெருக்குமாறு அறிவுறுத்தினார். ஓர் அரசன் இறந்த பின் செல்லும் வீடுபேற்றை அடைய விரும்பினாலும் இவ்வுலகில் உள்ள அரசர்களின் வலிமையை அழித்து ஒப்பற்ற மன்னனாக விரும்பினாலும் தமது புகழை இவ்வுலகில் நிலைநாட்ட விரும்பினாலும் அதற்கான தகுதியைப் பெற்றிருக்க வேண்டும். அத்தகுதியானது அரசனானவன் நாட்டின் நீர் வளத்தைப் பெருக்குவதேயாகும். ஏனென்றால் உடம்புகளுக்கெல்லாம் நீர் இன்றியமையாததாகும். எனவே, நிலம் பள்ளமான இடத்தில் நீர்நிலை பெருகும்படி நீரைத் தேக்கி வைத்து நிலை பெற்ற புகழைப் பெறுவாயாக என்று புலவர் பாண்டியனிடம் அறிவுறுத்தினார்.

### 3.2.4. குடிப்பெருமையை உணர்த்துதல்

சங்க கால அரசர்கள் வேற்றுநாட்டு அரசர்களோடு போர்புரிந்ததோடு தமது குடியைச் சார்ந்த சகோதரர்களோடும் போர் புரிந்துள்ளனர். அந்நிலையில் புலவர்கள் அவர்களுடைய கோபத்தைப் போக்கி, பகைமையைக் கைவிடச் செய்து போரைத் தவிர்க்குமாறு கூறி அறிவுறுத்தியுள்ளனர். தமது குடிப்பெருமையை மறந்து பகைமை உணர்ச்சி கொண்டு செய்யும் இப்போரால் மக்களே பாதிக்கப்படுவர். இதனை உணர்ந்தே புலவர் போரைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். சோழன் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் சகோதரர்கள். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளியிடம் பகைமை கொண்டு அவனுடைய உறையூரை முற்றுகையிட்டான். அப்போது நெடுங்கிள்ளி கதவடைத்து இருந்தான். இந்நிலையைக் கண்ட கோவூர்கிழார் என்னும் புலவர் அவர்கள் இருவரையும் ஒன்றுபடுத்த நினைத்து,

“இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்

……………………………………………………

மேய்ம்மலி உவகை செய்யும் இவ்இகலே”[7]

என்ற பாடலைப் பாடியுள்ளார். அப்பாடலில் போர் செய்பவர்களாகிய அவர்கள் பனம்பூ மாலை சூடிய சேரனோ அல்லது வேப்பம் பூ மாலை அணிந்த பாண்டியனோ அல்ல என்பதை சுட்டிக்காட்டினார். மேலும், அவர்கள் இருவரும் மாலைகளும் சோழருக்குரிய அத்தி மாலையே என்பதை விளக்கி உங்களில் இருவரது வெற்றி பெறுதல் என்பது இயலாத காரியமாகும். ஆதலால் உங்களில் யார் தோற்றாலும் தோற்பது சோழர் குடியே. உங்களுடைய செயல் உமது குடிக்குப் பெருமையைத் தராது. மாறாக, பகைவர்கள் உங்கள் பகைமையைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைவர் என்று கூறினார்.

### 3.2.5. ஒற்றுமையின் சிறப்புணர்த்தல்

ஒன்றுபட்ட உணர்வே ஒற்றுமையின் சிறப்பம்சமாகும். இத்தகைய ஒற்றுமைப் பண்பை புலவரினம் வரவேற்றது. ஆனால், சங்க கால மன்னர்கள் ஒவ்வொருவரும் பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணம் உடையோராக விளங்கியுள்ளனர். ஒரு நாட்டின் அரசன் வலிமையுடையவனாக வளர்ந்து விட்டால், அந்நாட்டில் பிற குடிகளில் தோன்றிய ஏனைய அரசர்களை அடக்கித்

தானே பெருவேந்தனாக வேண்டும் என்ற பண்பு அரசர்களிடம் வலுப்பெற்றிருந்தது. நாட்டின் பெருவேந்தனான பிறகு, ஏனைய நாடுகளைத் தன் ஆட்சியின் கீழ் கொண்டு வர விரும்பிப் போர்களில் ஈடுபட்டனர். இவ்வாறு வாழ்ந்த அரசர்களின் ஒற்றுமையற்றச் சூழலில் ஒரு முறை சேரமான் மாரிவெண்கோவும் பாண்டியன் கானப் பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் நட்புணர்வோடு ஒன்றுபட்டிருந்தனர். இவர்களுடைய ஒற்றுமை உணர்வைக் கண்ட ஔவையார் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். அதனால் அவர் தம்முடைய விருப்பத்தை வாழ்த்தோடு கூடிய அறிவுரையாகத் தமது பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார். அதனை,

> ‘‘கொற்ற வெண்குடைக் கொடித் தேர் வேந்திர
> ……………………………………………………..
> உயர்ந்து சமந்தோன்றிப் பொலிக நும்நாளே’’[8]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. ஓர் அரசனுடைய நாடு அனைத்து வளங்களையும் உடையதாக இருப்பினும் அவர் இறக்கும் பொழுது அந்நாடு அவருடன் செல்வதில்லை. அதுவரை அந்நாட்டுடன் தொடர்பில்லாதவரிடமே நாட்டின் ஆட்சியுரிமை முழுவதும் சென்று விடுகிறது. எனவே, இவ்வாட்சியுரிமை அழிவுடையது, நிலையற்றது என்பதை ஒவ்வோர் அரசரும் உணர வேண்டும். அதனை உணர்ந்தால் அரசருக்கிடையே உள்ள பகைமை உணர்வு அழிவதோடு போரும் நிகழாமல் இருக்கும். எனவே, போரைக் கைவிட்டு இறந்த பிறகு இறுதிவரை நம்முடன் வருகின்ற நல்வினையைச் செய்ய வேண்டும். நீங்கள் மூவரும் இவ்வுண்மையை உணர்ந்து பகைமை இன்றி எப்போதும் நட்போடு இருப்பீர்களாக என்று அறிவுறுத்தியுள்ளார்.

அரசர்களுக்குள் பகைமை இன்றி ஒற்றுமை உணர்வுடன் இருக்க வேண்டும் என்றும் புலவரால் அறிவுறுத்தப்பட்டுள்ளது. அப்போது தான் நாட்டில் போரின்றி அமைதி நிலவும். நாடு அமைதியாக இருந்தால் தான் மக்களின் வாழ்வும் வளம் பெறும் என்பதை சங்கப்புலவர் உணர்ந்தே அதனை அரசர்க்கு அறிவுறுத்தியுள்ளனர்.

### 3.2.6.மனைவியின் பிரிவுத் துயரை உணர்த்துதல்

சங்க கால அரசர் போரின் காரணமாக மனைவியைப் பிரிந்து வாழ்ந்துள்ளனர். அத்தகைய சூழல்களில் புலவர் பெருமக்கள் அரசனிடம் மனைவியின் பிரிவுத்துயரையும் அவளுடைய அன்புத்திறத்தையும் எடுத்துரைத்து அவளைச் சென்று காணுமாறு அறிவுறுத்தியுள்ளனர் என்பதை சங்கப்பாடல்கள் வழி அறிய முடிகிறது. சான்றாக, கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய பேகன் தன் மனைவியாகிய கண்ணகியைப் பிரிந்து பரத்தையரோடு தங்கியிருந்தான். இதனை அறிந்த அரிசில்கிழார் என்னும் புலவர் பேகனிடம் சென்று, அவனைப் புகழ்ந்து பாடினார். பின்பு அதற்கான பரிசிலாகப் பேகன் தன் மனைவியிடம் சென்று அவள் துயரைப்போக்க வேண்டும் என்று கூறியதை,

> "சீறியாழ் செவ்வழி பண்ணி நின்வன்புல
> ………………………………………..
> வண்பரி நெடுந்தேர் பூண்க நின்மாவே"[9]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. எனவே, சங்ககாலப் புலவர்கள் பொன்னையும் பொருளையும் தாம் பெற்று மகிழ்வதை விட தன்னைப் போற்றிப் பாதுகாக்கும் அரசனின் இல்வாழ்க்கைச் சிறப்போடு விளங்க வேண்டும் என்ற பண்புடையராக இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. அதனால்தான் தம்மைப் பாதுகாக்கும் வள்ளலுடைய மனைவியின் உள்ள வேதனையை உணர்ந்து அதனைப் போக்கும் விதமாகத் தமது பரிசிலை வேண்டியுள்ளனர் என்பதும் இதன் மூலம் புலனாகிறது. மேலும், தனக்குப் பரிசு கொடுக்கும் வள்ளல் என்பதற்காக அவனுடைய முறையற்ற செயலை ஏற்காது அவனை நல்வழிப்படுத்தும் நடுநிலைப் பண்பாளராகவும் புலவர் பெருமக்கள் விளங்கியுள்ளனர்.

### 3.2.7. கொலைக்குற்றம் புரியாமல் தடுத்தல்

தன்னிடம் அடைக்கலமாக வந்த புறாவிற்காகத் தன் உடல் தசையையே அறுத்துக் கொடுத்த சிபிசக்கரவர்த்தி போன்றோரின் அரிய செயலால் சோழர் குடிப்பெருமை உடையதாக விளங்கியது. அத்தகைய குடியில் தோன்றிய சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன், தன்னுடைய பகைவனாகிய மலையமான் போரில் இறந்துபட்ட சூழலில் அவனுடைய குழந்தைகளை

யானைக்காலில் இட்டுக் கொல்ல முற்பட்டான். அதிகார பலமும் ஆத்திரமும் அவனுடைய அறிவை செயலிழக்கச் செய்தது. அப்போது கிள்ளிவளவனுடைய கொடுமையான செயலை அவனுடைய அமைச்சர்களும் பிறரும் கூடத் தடுக்க முன்வரவில்லை. அப்போது கோவூர்கிழார் என்னும் புலவர் அதனைத் தடுத்து நிறுத்தினான். அதனால் கிள்ளிவளவனும் கொலைக் குற்றம் புரியாமல் காப்பாற்றப்பட்டான். இதனை,

"நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்

...................................................

கேட்டனை ஆயின் நீ வேட்டது செய்ம்மே"[10]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. சினம் கொண்டு தவறான காரியத்தைச் செய்யக்கூடாது என்று கோவூர்கிழார் கிள்ளிவளவனுக்கு அறிவுரை கூறியுள்ளார். இதன் மூலம் சங்க கால அரசர்கள் சினத்தின் காரணமாக ஆராய்ந்து பார்க்காது, தவறான செயல்களில் ஈடுபடும் போது, புலவர்கள் சிறிதும் தயக்கமின்றி அவர்களுடைய சினத்தைத் தணிக்கும் வகையிலான அறநெறிகளை எடுத்துரைக்கும் நற்பண்புடையோராக விளங்கினர். ஆதனால், அரசர்களும் குற்றம் புரியாது நல்வழியில் தமது ஆட்சியை நடத்தியுள்ளனர்.

ஆழ்ந்த புலமை, தெளிந்த சிந்தனை, அறம் உரைக்கும் பண்பு, குறை கண்டவிடத்து இடித்துரைக்கும் தைரியம், அரசர்களுக்காக உயிர் கொடுக்கும் தியாகம் போன்ற பல்வேறு பண்புகள் பண்டைய புலவர்களிடம் நிறைந்துள்ளமையை உணர முடிகிறது.

அரசன் தவறு செய்கின்ற பொழுதும் நேர்மையற்ற முறையில் நடக்கும் பொழுதும் வேண்டாத செயல்களில் ஈடுபடும் போது தக்க ஆலோசனை கூறி திருத்தும் உரிமை புலவரிடம் காணப்பட்டது.

சங்கப்புலவர்கள் அரசர்களின் வாழ்வோடு மிகத் தொடர்பு உடையவர்களாக இருந்ததோடு, அரசர்களுக்குத் தேவையான அறிவுரைகளையும் அஞ்சாது எடுத்துக் கூறும் உரிமையும் உயர் பண்பும் அவர்களுக்கு இருந்துள்ளது.

### 3.2.8. புலவர்கள் அறிவுறுத்திய அறநெறிகள்

பண்டைக் காலத்தில் அரசர்களும் புலவர்களும் நெருங்கிய நண்பர்களாக வாழ்ந்தனர். அதியனின் அவைக்களப் புலவராக ஔவை விளங்கினார். பாரியின் உயிர் நண்பராகக் கபிலர் திகழ்ந்தார். கோப்பெருஞ் சோழனின் நண்பராகப் பிசிராந்தையார் விளங்கினார். புலவர் பெருமக்கள் அரசர்கள் புகழ்தரத்தக்க செயல்களைச் செய்தவிடத்துப் போற்றிப்பாராட்டினர். அவர்களிடம் குறை கண்டவிடத்து, அஞ்சாது எடுத்துரைத்து, அவர்களை அறநெறிப்படுத்தும் பண்பும் புலவரிடம் இருந்தது.

மக்களின் குறைகேட்டு முறை செய்வதற்குரியவன் மன்னன். எனவே, மக்கள் காணுதற்கு எளிமையுடையனாகவும் இனிய சொல்லை உடையனாகவும் விளங்க வேண்டும் என்ற அறநெறியினைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுக்கு ஆவூர் மூலங்கிழார் அறிவுறுத்தினார்.

புகழ் பெறுதற்குப் பொருள் பயன்பட வேண்டும் என்ற அறநெறியினை முதுகண்ணன் சாத்தனார்,

“நகைப்புற னாகநின் சுற்றம்
இசைப்புற னாகநீ யோம்பிய பொருளே”[11]

என்று அறிவுரை கூறியுள்ளார். மூவேந்தரும் ஒருங்கிருந்ததைக் கண்ட ஔவையார்,

இந்நிலவுலகம் வேந்தர்க்குரியதாயினும், அவர் இறந்து போகுங்கால் உடன் போவதில்லை. அரசியல் வன்மையுடையோர்க்கே சென்று சேரும். அதனால் அரசியலை அறவழியில் செலுத்திப் பொருளீட்டு, இரவலர்க்கு உதவி, நல்வினையாற்ற வேண்டும் என அரசியலறம் உரைக்கின்றார்.

இவ்வாறு புலவர் பெருமக்கள், மன்னர்க்கு அன்பின் ஆழத்தையும் அருளின் ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தி அறநெறியில் பற்றுக்கொள்ளச் செய்து அவர்களை நன்னெறிப்படுத்திய பெருமையைச் சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது.

## 3.3. அறம் வலியுறுத்தும் இன்றைய கவிஞர்

பழந்தமிழ்ப் புலவர் அறவுரை கூறியும் இடித்துரைத்தும் மன்னரை நெறிப்படுத்திச் செங்கோன்மை செய்வித்தனர். அவ்வாறே இந்நாளிலும் தம்மைச் சார்ந்தாரைத் திருத்தும் நற்பணியைச் சான்றோர் மேற்கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தும் நோக்கில் பாவேந்தர்,

"அறிஞர்தம் இதய ஓடை
ஆழநீர் தன்னை மொண்டு
செறிதரும் மக்கள் எண்ணம்
செழித்திட ஊற்றி ஊற்றிக்
குறுகிய செயல்கள் தீர்த்துக்

குவலயம் ஓங்கச் செய்வாய்"[12]

என்று கூறுவதையும் இங்கு நினைத்தல் தகும் அவ்வாறே பசியின் கொடுமையை உணர்ந்து உணவு அறம் செய்வதை மேற்கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தும் வகையில் பாரதியார்,

"தனியொருவனுக்கு உணவில்லை எனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"[13]

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்னாயாவினும் புண்ணியம் கோடி"[14]

"வயிற்றுக்குச் சோறிட வேண்டும்"[15]

என்றெல்லாம் நவில்வனற்றை ஈண்டு நோக்கி மனங்கொளல் தகும்.

## 3.4. சமூகம்

மனிதன் இயல்பாகவே கூடி வாழும் குணம் உடையவன். பொதுவாகத் தனித்து வாழ்வதை அவன் விரும்புவதில்லை. இந்த இயல்பு மட்டும் அல்லாமல், அவனுடைய வாழ்க்கைத் தேவைகளும் பிறரோடு கூடி வாழ அவனைக் கட்டாயப்படுத்துகின்றன. ஏனெனில், மனிதன் தன் வாழ்க்கைத் தேவைகளைத் தனியொருவனாக நிறைவேற்றிக் கொள்ள முடிவதில்லை. இந்த இரண்டு காரணங்களால் தான் மனிதன் பிறரோடு கூடி வாழும் சமூக வாழ்வை ஏற்படுத்திக் கொண்டான். சமூகமாகப் பலர் கூடி வாழும் போது சிக்கல்கள் தோன்றின. இச்சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளவும் ஒருவரோடு ஒருவர் கொள்ளும் பல்வேறு வகையான தொடர்புகளை ஒழுங்குபடுத்தவும் சட்டதிட்டங்கள் தேவைப்பட்டன. இச்சட்ட திட்டங்களை உருவாக்கவும் அவற்றைச் செயல்படுத்தவும் ஓர் அமைப்பு வேண்டியதாயிற்று. இவ்வமைப்பே அரசாங்கம் எனப்பட்டது. இத்தகைய அரசாங்கத்தின் செயல்பாடுகளும் மன்னரின் ஆட்சி முறைகளுமே அரசியல் அமைப்பாகக் கருதப்பட்டது. ‘அரசியல் என்பது ஆங்கிலத்தில் பாலிடிக்ஸ் (***politics***) என்று வழங்கப்படுகிறது. இச்சொல் போலிஸ்.. என்ற கிரேக்க மூலச் சொல்லிருந்து தோன்றியதாகும். மேலும், தமிழில் அரசியல் என்பதை, வடநூலார், ராஜதர்மா என்று கூறியுள்ளனர்’’[16] என்று அப்துல் ரகுமான் கம்பனின் அரசியல் கோட்பாடு என்னும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

“அரசு சமூகத்தின் அங்கமாக விளங்குவதால் இது ஒரு நாட்டின் மக்களிடையே நிகழும் உறவு முறைகளையும் மக்களுக்கும் அரசுக்கும் இடையே நிகழும் உறவு முறைகளையும் இரு அரசுகளுக்கு இடையே நிகழும் உறவு முறைகளையும் கருத்திற்கொண்டு செயல்பட வேண்டும்”[17] என்று முத்து சிதம்பரம் அவர்கள் தமிழியல் என்னும் தமது நூலில் அரசு என்பதற்கான தம் கருத்தைப் பதிவு செய்துள்ளார்.

## 3.5. அரசின் அடிப்படைக் கூறுகள்

பண்டைத் தமிழர் நாட்டின் நல்வாழ்வுக்கு அரசு இன்றியமையாதது என்பதை உணர்ந்திருந்தனர். அரசு என்பது சமுதாயத்தில், மக்கள் அடிப்படைத் தேவைகளுடனும் அமைதியுடனும் அச்சமின்றியும் வாழ்வதற்கு உருவாக்கப்பட்ட அமைப்பாகும். அறங்களை மேற்கொண்டு ஆட்சி புரிதலும் போரறங்களைப்

பின்பற்றிப் பகைவர்களை அழித்தலும் அரசின் கடமையாகும். “மக்களை கூட்டத்தினின்றும் தலைமை முகிழ்த்து, தலைமையின் வல்லாண்மையால் அரசு தோன்றுகிறது. வலிமை குன்றுமாயின் அரசும் அழிந்து விடும். எனவே, அரசுக்கு முதல் அடிப்படை, வலிமை வாய்ந்த மக்கள் குழுவாகும். இரண்டாவதாக, வரையறுக்கப் பெற்ற நிலப்பரப்பு இருக்க வேண்டும். மக்கள் வாழிடம் அரசின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். மூன்றாவதாக, முறையான ஆட்சி முறை அமைய வேண்டும். நான்காவதாக, இறைமை என்பது மக்களுக்கும் நிலப்பரப்புக்கும் ஏற்ற வகையில் மேலான அதிகாரங்கள் பெற்றுத் தனித்தன்மையுடன் இயங்குவதாகும். இந்நான்கும் நிறைவு பெற்றிருப்பதே அரசு”[18] எனப்படும் என்று முனைவர் அ.ஆறுமுகம் அவர்கள் அரசு என்பதற்கு சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு என்ற தமது நூலில் விளக்கம் தந்துள்ளார். அவருடைய கூற்றிற்கேற்பவே அக்கால அரசர்கள் மிகச் சிறந்த அரசியல் பண்புகளோடு வாழ்ந்துள்ளனர் என்பது சங்கப் புற நூல்கள் வாயிலாக உறுதியாகின்றது.

ஒரு நாடு மலைவளத்தையும் காட்டு வளத்தையும் ஆற்று வளத்தையும் கடல் வளத்தையும் பெற்றிருக்கலாம். உணவுப் பண்டங்களை மிகுதியாக உண்டாக்கலாம். இத்தொழில்களைப் பெருக்கலாம். இருப்பினும் வளமை பொருந்திய அந்நாட்டினை பகைவரிடமிருந்து பாதுகாக்கவும் அந்நாட்டில் நீதி நிலவுவதற்கும் தேவைக்கு மேற்பட்ட உணவுப் பொருள்களையும் கைத்தொழில் பொருள்களையும் பிறநாடுகளுக்கு அனுப்புதற்கும் பிறநாட்டுப் பொருள்களைத் தம் நாட்டுக்கு வருவித்தற்கும் பொறுப்புள்ள அமைப்பு ஒன்று வேண்டும். அந்த அமைப்பை இயக்குபவனே அரசனாவான். அவ்வரசன், ‘நண்பரிடத்து வஞ்சகமின்றிப் பழகியும் பகைவரை ஒறுத்தும் மேலோர் சிறுபிழை பொறுத்தும் முறை தவறாது குடிமக்களை வருத்தாமல் ஆண்டு வர வெண்டும்’ என்று தமிழ்நாடன் அவர்கள் மனுதர்மம் என்னும் தமது நூலில் அரசன் என்பதற்கான விளக்கத்தைத் தருகிறார். இதனால் குடிமக்களின் நலன்கருதி சட்டம் இயற்றுதல், நிர்வகித்தல், நீதி வழங்குதல் என்னும் மூன்றுக்கும் அரசனே தலைவனாக இருந்தான். நாட்டில் ஒழுங்கையும் அமைதியையும் நிலை நாட்டுவதற்குத் தேவைப்படும் போதெல்லாம் அரசன் ஆணைகளைப் பிறப்பித்துள்ளான். அரசனின் ஆணைகளே அன்றைய வலிமைமிகு சட்டங்களாக விளங்கின. நாட்டின் அனைத்து அதிகாரங்களும் அரசனிடத்திலேயே குவிந்து

கிடந்தன. அதனால் அரசனை மையமாகக் கொண்டே அனைத்தும் நிகழ்வுகளும் நடைபெற்றுள்ளன.

### 3.6. சங்க காலத்து அரசர்களின் நிலை

சங்க காலத்தில் தமிழ் மன்னர்கள் முழு அதிகாரம் உடையவர்களாய் இருந்துள்ளனர். அமைச்சர்கள், அறிஞர்கள் ஆகியோரின் அறிவுரைகளையும் புலவர்களின் பொன் போன்ற உரைகளையும் அரசர்கள் மதித்துள்ளனர். ஆனால், அவற்றை ஏற்றுக் கொள்வதும் தள்ளுவதும் அரசரது விருப்பத்தைப் பொறுத்ததே ஆகும். இதனால் சங்ககாலத்தில் முடியாட்சியே நிலவியது எனக் கூறலாம். ஆனால், அரசனது விருப்பத்திற்கு மாறாக மக்கள் கிளர்ந்து எழுந்ததாகச் சங்கப் பாடல்களில் எந்த ஒரு குறிப்பும் இல்லை. எனவே, சங்க காலத்தில் அரசன் தன் அதிகாரத்தால் மக்களை அடிமைப்படுத்தாமல் அவர்களுக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்து பாதுகாத்து வந்தான் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

### 3.7. அரசரின் சிறப்பியல்புகள்

சங்ககால அரசர்கள் நல்லாட்சி நடத்துவதில் மட்டுமல்லாது நற்குண, நற்செயல்களிலும் சிறந்து விளங்கியுள்ளனர். காட்சிக்கு எளியவனாகவும் சுற்றம் காப்பவனாகவும் மன்னனே மக்களுக்குத் தாயாகவும் குடிமக்களின் நலன் நாடுபவனாகவும் மனித நேய மாண்புடையவனாகவும் வாய்மை தவறாது, ஆதரவற்றோருக்கு உறவினராகவும் அந்தணர் சொல் கேட்டுப் பணிந்து செயலாற்றும் பண்புடையவர்களாகவும் திகழ்ந்துள்ளனர.

### 3.7.1. காட்சிக்கு எளியவன்

அரசன் என்பவன் மக்களால் காண்பதற்கு எளியவனாகவும் கடுஞ்சொல் கூறாதவானகவும் மக்கள் குறைகளைக் கேட்டு ஆவண செய்யும் இயல்பு உடையவனாகவும் இருக்க வேண்டும். இதனை உணர்ந்தே வள்ளுவர்,

> "காட்சிக்கு எளியவன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
> மீக்கூறும் மன்னன் நிலம்"[19]

என்று அரசனுக்குரிய இயல்பினைத் தம் குறட்பாவின் மூலம் விளக்கியுள்ளார். அரசன் தனது பார்வையாலும் மனத்தாலும் பேச்சாலும் செயலாலும் மக்களுக்கு மனநிறைவை ஏற்படுத்துகின்றவனாக இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு அக்கால மக்களிடம் இருந்துள்ளது. தலைவன் மக்களின் குறையைக் கேட்பதற்கும் கேட்டு முறை செய்வதற்கும் தன்னை நாடி வரும் புலவருக்கும் வறியவருக்கும் பரிசில் நல்குவதற்கும் அரசன் வீற்றிருக்கும் அவையை நாள் மகிழிருக்கை, நாளவை என்று அழைத்துள்ளனர். சேரமான் செங்குட்டுவன் கோதையின் நாளவையில் உரிமையோடு செல்லுதல் இரவலர்க்கு மிக எளிது என்ற செய்தியை,

“செம்மனாள் நாளவை யண்ணாந்து புகுந்து
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே”[20]

என்னும் அடிகள் உணர்த்துகின்றது. அத்தகைய நாளவையில் அரசன் முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் யார், யார் எதனை வேண்டினரோ, அவரவர்க்கும் அவ்வவற்றை அருளிச் செய்யும் வகையில் வேந்தன் காட்சிக்கு எளியனாயிருந்தான். இதனைப் பெரும்பாணாற்றுப்படையும்,

“முறை வெண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்

வேண்டுப வேண்டுநர்க்கு அருளி”[21]

என்ற பாடலில் விளக்கியுள்ளது.

### 3.7.2. சுற்றம் காத்தல்

‘உறவுகள்’ என்பது மனித வாழ்வில் தவிர்க்க முடியாத ஒன்றாகும். இவ்வுறவுகளால் நன்மையும் தீமையும் விளையும். இருப்பினும் அத்தகைய நம் உறவோர் துன்புறும் வேளையில் பகைமை பாராட்டாது, வெறுப்பு கொள்ளாது ஆறுதல் கூறி அரவணைக்க வேண்டும். மேலும், தம்மால் முடிந்த உதவிகளையும் அவர்களுக்குச் செய்ய வேண்டும். இத்தகைய உயர்ந்த பண்புகளை உடையோராக அக்கால அரசர்கள் காணப்பட்டனர். இதையே நாலடியார்,

“நல்லார் எனத் தாம் நனி விரும்பிக் கொண்டாரை

அல்லார் எனினும் அடக்கிக் கொளல் வேண்டும்
நெல்லுக்கு உமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு;
புல்லிதழ் பூவிற்கு உண்டு"[22]

என்று குறிப்பிடுகின்றது. இவ்வுலகில் தோன்றிய அனைத்துப் பொருள்களிடத்தும் நிறை, குறை உண்டு. நெல்லுக்கு உமியும், நீருக்கு நுரையும் புல்லிதழ் பூவிற்கும் இருப்பதைப் போன்றே உறவுகளுக்குள்ளும் சிலர் நற்பண்பு இல்லாதவர்களாக இருப்பர். இதனை உணர்ந்து பொறுத்துக் கொள்ள வேண்டும். இதையே ஔவையார் தமது ஆத்திச்சூடியில் 'குற்றம் பார்க்கின் சுற்றமில்லை' என்று கூறியுள்ளார். எனவே, உறவினர் குற்றம் செய்தால் அதனைப் பொறுத்துக் கொண்டு, அவர்கள் துன்பம் அடைந்தால் அதனை முன்னமே உணர்ந்து, போக்காமைக்காக நாணம் கொள்ள வேண்டும். இத்தகைய மனித இனத்தின் இயல்பான பண்புகள் தம் அரசன் ஏறைக்கோனுக்கே உரியது என்று குறமகள் இளவெயினி என்னும் புலவர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"தமர் தன் தப்பின் அது நோன்றல்லும்
பிறர் கையறவு தான் நாணுதலும்
பெருங்கல் நாடன் எம் ஏறைக்குத் தகுமே"[23]

என்ற புறநானூற்றுப்பாடல் மூலம் அறிய முடிகிறது. எனவே, சங்க கால அரசர் தமது சுற்றத்தைப் பாதுகாக்கும் பண்பில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பது இதன் மூலம் தெளிவாகின்றது.

### 3.7.3. மன்னனே மக்களுக்குத் தாய்

சங்க கால அரசர் தன் நாட்டு மக்களுக்குத் தாய் போல இருந்து, மக்களாகிய குழந்தைகளின் துயர் துடைத்துப் பசியைப் போக்கும் பண்புடையவர்களாக இருந்துள்ளனர். 'ஈன்றெடுத்து ஊட்டி வளர்க்கும் தாய் இவன்' எனக் கருதும்படி அன்பு நிறைந்தவனாகவும் இருந்து மக்களைப் பாதுகாக்க வேண்டும். இக்கூற்றை மையமாக வைத்து பல பாடல்கள் புறநானூற்றில் பாடப்பட்டுள்ளது. உதாரணமாக,

"குழவி கொள்வாரின் குடி புறந்தந்து"[24]

"காவல் குழவி கொள்வாரின் ஓம்புமதி"[25]

போன்ற தொடர்கள் இதனை, மெய்ப்பிக்கின்றன. ஆகையால், ஒரு தாய் தன் குழந்தையை எவ்வளவு பொறுப்புடனும் பாசத்துடனும் கடமை உணர்வுடனும் பாதுகாப்பாளோ அவ்வாறே ஆள்வோரும் குடிமக்களைப் பாதுகாப்பது தம் கடமையெனக் கருதி வாழ்ந்துள்ளனர் என்பது இதன் மூலம் தெளிவாகின்றது.

### 3.7.4. மக்களின் நலன் நாடுதல்

மக்கள் நலங்கருதுவோரே ஆட்சி புரிதல் வேண்டும். தன்னலம் துறந்து பொது நலம் புரியும் உள்ளம் படைத்தவர்களே நாட்டை ஆள வேண்டும். இத்தகைய கருத்துடையவர்களாக சங்ககால மக்கள் திகழ்ந்துள்ளனர். அதனால் தான் இவ்வுலக மக்களை உயிர் வாழச் செய்வது உணவும், நீருமாக இருப்பினும் அவ்வுணவையும் நீரையும் மக்கள் அனைவரும் பெறுமாறு செய்கின்றவன் அரசனே என்ற எண்ணம் நிலவியது. எனவே, இவ்வுலகம் அரசனை உயிராகக் கொண்டு இயங்கியது என்பதை மோசிகீரனார்,

"நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான் உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"[26]

என்ற பாடல் வழி எடுத்தியம்பியுள்ளார். எனவே, அரசனுடைய நற்செயல்களே அந்நாட்டு மக்களின் நல்வாழ்விற்குத் துணைபுரியும் என்ற கருத்துடையவர்களாக சங்ககால மக்கள் விளங்கினர்.

"மன்னுயிர் எல்லாம் மண் ஆள்வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின்று ஆகும்"[27]

என்று குறிப்பிடுகின்றது. எனவே, சங்க காலத்தில் மக்கள் துன்புற்றால் மன்னனின் ஆட்சி செம்மையாக இருக்காது என்பதும், மன்னன் உடலாகவும் மக்கள் உயிராகவும் கருதப்பட்டு நல்லாட்சி புரியும் நற்பண்பாடோடே அரசர் இருந்துள்ளனர் என்பதும் இதன் மூலம் புலனாகிறது.

### 3.7.5. வறுமைத்துயர் போக்குதல்

மழைத்துளி நிலத்தில் விழவில்லையானால் பச்சைப் பசும்புல்லின் தலையைக் கூட காண முடியாத அளவிற்கு வெறுமையும் வறட்சியும் உண்டாகும். அதுபோல நாடாளும் ஒருவன் அருள் உள்ளம் இல்லாதவனாய் இருப்பானேயானால் அவனுடைய ஆட்சியில் மக்கள் வறுமையில் துயருறுவர் என்பதை வள்ளுவர்,

"துளி இன்மை ஞாலத்திற்கு எற்றுஅற்று வேந்தன்
அளிஇன்மை வாழும் உயிர்க்கு"[28]

என்ற குறள் வழி எடுத்துரைத்துள்ளார். எனவே, மழை பெய்தால் ஆறு, ஏரி, குளம் எங்கும் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி நிலத்தடி நீரையும் உண்டாக்கி, தாவரங்களை உருவாக்கி உயிர்களுக்கும் மக்களுக்கும் மகிழ்ச்சியை மிகுவிக்கும். அதுபோல நாட்டை ஆளும் அரசனும் அன்போடும் அருளோடும் ஆட்சி செய்வானேயானால் அவனது நாட்டு மக்களும் இன்பமும் மகிழ்ச்சியும் அடைவார்கள். அவ்வாறே சேரமான் யானைக்கட் சேய் மாந்தருஞ்சேரல் இரும்பொறையும் தம் மக்களிடம் அன்பு காட்டி நல்லாட்சி புரிந்துள்ளான். அதனால் தான் அவனுடைய நாட்டில் வாழும் மக்கள் உணவு சமைக்கும் தீயுடன் கதிரவனின் வெப்பத்தையே அன்றி வேறு வெம்மையாகிய துன்பத்தை அறியாமல் இருந்துள்ளனர் என்பதை, குறுங்கோழியூர் கிழார்,

"சோறு படுக்குந் தீயோடு
செஞ் ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிது தெறல் அறியார் நின்நிழல் வாழ்வோரே"[29]

என்ற பாடல் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். இவற்றைக் கொண்டு அக்கால அரசர்கள் தம் குடிமக்களை வறுமையும் துன்பமும் நாடாது அவர்களைப் போற்றிப் பாதுகாக்கும் பண்பாளராக விளங்கினர். இத்தகைய சிறப்பியல்புகளைக் கொண்டு ஆட்சிபுரிந்த காரணத்தால் தான் அரசர்கள் மக்களால் வாழ்த்தப்பட்டனர். இதனையே மணிமேகலை,

"மன்னவன் கோன்நிலை திரியாக் கோலோன் ஆகுக"[30]

என்று குறிப்பிடுகின்றது. எனவே, இதன் மூலம் பிற உயிர்களின் துன்பத்தைப் போக்கி நல்லாட்சி நடத்த வேண்டும் என்ற உன்னதப் பண்பு அரசரிடம் இருந்துள்ளது என்பதை இதன் வழி அறிய முடிகிறது.

## 3.8. ஈகையின் தன்மை

ஈகையின் தன்மை கொடுப்போரைப் பெரிதும் சார்ந்துள்ளது. ஈகைக்கு இன்றியமையாதது அளவு (Quantity) அல்ல; வழங்கப்பட்ட தருணமும் வழங்கிய விதமுமமே இன்றியமையாதது.

''வெந்தீக்கண் வெண்ணெய், மெழுகுநீர் சேர்மண் உப்பு அந்தமண் மகன் சார்ந்த தந்தை என்று – ஐந்தினுள் ஒன்று போல் உள் நெகிழ்ந்து ஈயின் சிறிதெனினும் குன்றுபோல் கூடும் பயன்''[31].

நெருப்பினைக் கண்ட மாத்திரத்தில் வெண்ணெய் மெழுகு இரண்டும் உருகும்; நீரைச் சேர்ந்தவுடன் மண்ணும் உப்பும் கரையும்; தன் குழந்தையின் செயலைக் கண்டதும் தந்தையின் மனம் நெகிழும். இந்த ஐந்து செயல்களில் ஒன்றைப்போல் உள்ளம் நெகிழ்ந்து கொடுப்பதுதான் ஈகையாகும். அப்போது குன்றிமணி போல அளவு சிறிதாயினும் பயன் குன்றுபோல ஆகிவிடும்.

''தினைத் துணை நன்றி செயினும் பனைத்துணையாகக்
கொள்வர் பயன்தெரி வார்''[32]

என்னும் திருக்குறளும் கிடைக்கும் பயன் பற்றி நன்கு அறிந்தவர்க்குத் தினை அளவும் பனை அளவாகத் தெரியும் என்று உணர்த்துகிறது.

''உவந்து நீ
இன்புற விடுதி யாயிற் சிறிது
குன்றியுங் கொள்வல் கூர்வேல் குமன''[33]

என்று பெருஞ்சித்திரனார் கூற்றும் இதனை மெய்ப்பிக்கிறது.

### 3.8.1. ஈகையின் பயன்

ஈதலின்பம் வேண்டித் தனது துணையினைத் துறந்து பொருளீட்டச் செல்வதை அகப்பாடல்கள் கூறுகின்றன. இத்தகைய ஈதலால் ஏற்படும் பயனையும் இப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

“இம்மைக்குரிய புகழும் இருமைக்குரிய இன்பமும் மறுமையில் இன்புறுதலுக்கு ஏதுவாகிய இரந்தோர்க்கு ஈதல் செய்ய வினைமேற் சென்றுள்ளான்”[34]. இக்கருத்தின் மூலம் ஈகையானது இம்மை, மறுமை என இருமைக்கும் இன்பம் தரும் என்பதை அறியலாம்.

### 3.8.2. கனவிலும் காணாத பொருளுதவி

சங்க கால அரசர்கள் தம்முடைய புகழ் ஓங்குவதற்காகக் கொடை அளிக்காமல் பிறருடைய வாழ்க்கை உயர்வதற்காகக் கொடையளிக்கும் பண்புகொண்டு விளங்கினர். இதனை உறுதிப்படுத்தும் விதமாகச் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி தன்னை நாடி வந்த பொருநனின் வறுமையைப் போக்கும் பொருட்டு, பொன்னையும் மணியையும் முத்துக்களையும் பல்வேறு வகையான உடைகளையும் கொடுத்துள்ளான் என்பதை,

“மலை பயந்த மணியும் கடறு பயந்த பொன்னும்
கடல் பயந்த கதிர் முத்தமும்
வேறுபட்ட உடையும் சேறுபட்ட தசும்பும்
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப
நனவின் நல்கியோன் நகைசால் தோன்றல்”[35]

என்ற பாடல் தெளிவுறுத்துகின்றது. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பொருநன் இனி வறுமையுற்று வருந்தாமல் இருக்கவும், செல்வ நிலையிலே நிலைத்து நிற்கவும் பொருள்களை வழங்கிய தன்மை கனவு போலத் தோன்றியதாகப் புலவர் உலோச்சனார் தமது பாடலில் எடுத்துரைத்துள்ளார். இதன் மூலம் தம்மை நாடி வருவோர் எண்ணும் அளவை விட அதிக அளவு பொருள் வழங்கி வறுமையோடு வாழ்ந்தவரை வாழ்நாள் வரையிலும் வளமையோடு வாழவைக்கும் இரக்கப் பண்பு அவர்களிடம் இருந்துள்ளது என்பதை உணர முடிகிறது.

### 3.8.3. ஈதல், கொள்ளல் பற்றிய சிந்தனை

ஈதல் என்பது யார்க்குத் தேவையோ அவரை நாடிச் சென்று ஈகின்ற தன்மையாக சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படவில்லை. பரிசிலர் கொடையாளியை நோக்கி வருகின்றனர். காடு, மலை, சுரம் எனப் பலகடந்து நெடுந்தூரம் பயணம் செய்து வருகின்றனர். எதிரே சந்திக்கும் தம்மைப் போன்ற மற்றொரு இரவலரின் ஆற்றுப்படுத்தலால் உரியவரை வந்து சேர்கின்றனர். மறுமைக்கும் பயன் தருமென்பது கருதாமல் அன்று தம்மை நாடி வருபவர்க்கு அளிப்பவர் யாரெனத் தேடி வருகின்றனர்.

இரத்தலைக் குறிக்கும் சொற்களாக தொல்காப்பியர் ‘‘ஈ, தா, கொடு’ என்னும் மூன்று சொற்களைக் குறிப்பிடுகிறார்.

‘‘ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே’’ [36]

‘‘தாவென் கிளவி ஒப்போன் கூற்றே’’[37]

‘‘கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே’’[38]

இரவலர் ‘ஈ’ என்பது கேட்பது இழிவானது; அப்படி இரப்போர்க்கு இல்லை என்பது அதனினும் இழிவானது. கேட்காமலேயே ‘கொள்’ எனக் கொடுப்பது உயர்ந்தது. அவ்வாறு கொடுப்பதை ஏற்க மறுப்பது அக்கொடையிலும் உயர்ந்தது என்று எண்ணி வாழ்ந்த சங்கச் சமுதாயத்தில் இரத்தலும் கொடுத்தலும் மாறாத நடைமுறையாகவே இருந்தது.

‘‘ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்

ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்

கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று’’[39]

என்ற பாடலின் அறிய முடிகிறது.

## 3.9. இரவச்சம் இன்மை

புரவலர்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்று புலமையை மதித்துப் பரிசில் அளித்ததால் இரவலர்களும் இரவச்சம் இன்றி கேட்டுப் பெற்றனர்.

“இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின்”[40]

என்பதால் ஈயென இரத்தல் இழிவாகவில்லை.

‘ஈயேன்’ என்று சொல்வதை மிக இழிவாகக் கருதியவன் பாண்டியன் நெடுஞ்செழியன். அவன் வஞ்சினம் உரைக்கும் பொழுது,

“இரப்போர்க்கு ஈயாஇன்மை யான்உறவே”[41]

என்று அந்நிலையைச் சுட்டுகிறான்.

நாள்தோறும் வருபவர்க்கெல்லாம் கொடுக்கும் அளவிற்குச் செல்வம் இல்லாதிருந்தும் இல்லை என்று மறுக்காத பண்பினர் பலர் இருந்தனர்.

“நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே”[42]

என ஈர்ந்தூர்கிழான் தோயன் பாராட்டப்படுகிறான்.

## 3.10. இரவலரின் தன்மானம்

கொடை தருபவர்கள் பண்புநலன் குறித்தும் பெற்றுக் கொள்ளும் இரவலர்கள் கூர்மையான கவனம் செலுத்தியுள்ளனர். தங்கள் பெருமையை மதித்து அதற்கேற்பப் பரிசில் பெறுவதையே பெரிதும் விரும்பினர். இதன் மூலம் புலவர்களின் தன்மானம் வெளிப்படுகிறது.

“முற்றிய திருவின் மூவர் ஆயினும்
பெட்பின்றி ஈதல் யாம் வேண்டலமே”[43]

என்று அன்பு கொண்ட நெஞ்சத்தால் ஈயாமல் கடமைக்காகச் செய்யும் கொடையைப் பெறப் புலவர்கள் மறுத்திருக்கின்றனர்.

கல்வியால் பெருமை பெற்ற புலவர்கள் அகம் மலர்ந்து தராத பொருளை ஏற்காததை,

“அகனக வாரா முகனழி பரிசில்
தாளி லாளர் வேளா ரல்லர்”[44]

என்ற வரிகளால் அறியலாம்.

அதியமான் நெடுமான் அஞ்சி, பரிசில் தரக்காலம் நீட்டித்த போது, ஒளவையார், ‘மழுப்படையுடன் காட்டிற்குச் செல்லும் தச்சர்களுக்கு, எளிதில் மரம் கிடைப்பது போல, புலவர்கள் எந்தத் திசையில் சென்றாலும் அந்தத் திசையில் சோறளிப்பவர் இருப்பர்’ என்று புத்தி புகட்டுவத போல

“மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே”[45]

எனப் பாடியதும் மான உணர்வு மிக்கதாகும்.

## 3.11. புலவருக்குப் புரவலர் கொடுத்த பரிசில்

- பதினாறாயிரம், முப்பதினாயிரம், நூறாயிரம், நாற்பது நூறாயிரம் என்ற எண் அளவில் பொன் கொடுத்தல்
- ஊர்களைப் பிரமதாயமாகக் கொடுத்தல்
- அரச வருவாயில் பங்களித்தல்
- ஆட்சி உரிமையில் பங்களித்தல்
- புலவர் குன்றேறி நின்று, அவர் கண்ணிற் கண்ட நிலப்பரப்பெல்லாம் கொடுத்தல்
- தன் நாட்டு ஆட்சியையே கொடுத்தல்
- புலவரும் அவர் மனைவியும் மேலுலகம் புக வேண்டி வேள்வி செய்தல்.
- தன் மகனையே புலவருக்குத் தொல் கடனாற்றப் பணித்தல்

வேந்தர்களின் கொடைப் பண்பில் குறிப்பிடத்தக்கன, புலவருக்காக வேள்வி செய்தது, தன் மகனைத் தொல்கடனாகப் பணித்ததும் ஆகும்.

போரில் வெற்றி பெற்ற அரசன், தோற்ற அரசனிடமிருந்து பெற்ற பொருள்களைப் புலவர்களுக்கும் வீரர்களுக்கும் அளிப்பது மரபாக இருந்துள்ளது. பகையரசர் திறையாக அளித்த பொருளையும் புலவர்களுக்குக் கொடையாகக் கொடுப்பர் என்பதை,

"பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குர வகற்றி"[46]

எனப் புறநானூறு புகழ்கின்றது.

அரசர் தம் கொடைப் பண்பிற்கு வேறு நோக்கில் காரணம் கூறுவோர் உளர். "அரசனின் புகழையும் அவனது ஆட்சியின் சிறப்பையும் எடுத்துப் பரப்பி, அரசனது ஆட்சிக்கு உறுதுணையாகச் செயல்பட்ட புலவர்க்கே, அரசர் பொருள் கொடுத்தனர்"[47] என ஆய்வாளர்கள் சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர். இவர்கள் இவ்வாறு கருதுவதற்கும் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன.

## 3.12. வாழ்த்து

பாடிப் பரிசில் பெறும் புலவர், தமக்குப் பரிசில் நல்கிய புரவலரை வாழ்த்துதல் இயல்பாக இருந்துள்ளது. பாடாண்திணையமைந்த பாடல்கள் அனைத்தும் புரவலனை வாழ்த்தும் நோக்கில் பாடப்பட்டவையாகும். வாழ்த்தும் பொழுது இயற்கைப் பொருள்களை உவமை கூறி வாழ்த்துதல் பழந்தமிழ்ப் புலவர் மரபும் ஆகும். இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள் தமிழர். பழந்தமிழ்ப் பாடல்களில் இயற்கையின் செல்வாக்கு மிகுதியாக உள்ளது. புலவர்கள் புரவலர்களை வாழ்த்திய தன்மையினை,

புலவர் பெருமக்களிடம் அமைந்திருந்த பண்புகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது நன்றியறிதல் எனும் பண்பாகும். புலவரின் வாழ்த்தில் இப்பண்பு பொதிந்திருப்பதைக் காண முடிகிறது.

“அவர்களிடமிருந்த எல்லாக் குணங்களிலும் செய்ந்நன்றியறிதல் எனும் குணம் மிகச் சிறப்பாக விளங்கியது”[48] என்பதை அவர் பாடல் வழி உணர முடிகின்றது.

பழந்தமிழகத்தில் புலவர் புரவலர் உறவு சிறப்பாக அமைந்திருந்தது. “புலவர் நல்லுரை கேட்டு அரசர் பலர் உண்மை உணர்ந்து முற்றுகை விடுத்தனர்! போர் தவிர்த்தனர். வெஞ்சினம் தவிர்த்தனர்! ஒறுத்தல் நிறுத்தினர். புலவர் உறவே பேருறவாகக் கொண்டனர்; அவரையே கண்போல் நண்பின் கேளிராகப் போற்றி ஒழுகினர். அவர்தம் நட்பால், ‘இன்களி மகிழ்நகை’யுற்றனர்; அவர் நாட்டைப் பாடி வாழ்வித்து விடுவர் என எதிர்பார்த்திருந்து வாழ்த்துப் பெற்று மகிழ்ந்தனர். அவர் கடுஞ்சொல் கொண்டு வேம்பும் கடுவும் போல்வன கூறிக் கடிந்த போதும் உண்மை உணர்ந்து உள்ளம் குளிர்ந்தனர்; அறம் உணர்த்திய அறிவுரைக்காக நன்றி பாராட்டினர்; தாமும் புலமையொளி பெற முயன்றனர்; புலவராய்ப் பாடினர்”[49] என்ற கருத்து கருதத்தக்கது.

“தமிழையே தாய்மொழியாகக் கொண்ட தலைமையோரே அரசராய் அக்காலத்து விளங்கியதால், அரசவைகளில் தமிழ்ப்புலவர்கள் முதலிடம் பெற்றுப் பெருமையுடன் விளங்கினர்”[50].

அரசருக்கும் புலவருக்கும் இடையே ஏற்பட்டிருந்த உறவு தவிர்க்க முடியாததாயும் காலத்தின் தேவையாயும் அமைந்திருந்தது. புலன் உழுது உண்ணும் புலவர்களின் அறிவுரை அரசருக்கு வழிகாட்டியாய் அமைந்தது. படையேருழவராக விளங்கித் தம் வலிமையால் வளத்தோடு வாழ்ந்த வேந்தரின் பொருள் புலவர்களின் வாழ்க்கைக்குப் பயன்பட்டது. ஆழ்ந்த புலமையும், தெளிந்த சிந்தனையும் உடைய புலவர்கள் சிறந்த மன உணர்வினைப் பெற்றிருந்தனர். சிறந்த மன உணர்வினைப் பெற்றிருந்த காரணத்தினால், இவர்களின் வாழ்க்கை உயர்ந்த உணர்வுகளில் திளைப்பது பெரும் பகுதியாகவும் வாழ்க்கைத் தேவைகளைப் பற்றி நினைப்பது சிறு பகுதியாகவும் அமைந்துவிட்டது. அதனால் பரிசில் நல்கும் வள்ளல்களையோ, அரசரையோ நாடிச் செல்கின்ற நிலை புலவர்களுக்கு ஏற்பட்டது. அரசர்களின் வாழ்க்கை பெரும்பகுதி போர்களிலும் எஞ்சிய சிறுபகுதி அடுத்துவரும் பெரும்பகுதி போரைப் பற்றியச் சிந்திப்பதிலுமே கழிந்தது. அதனால் இவர்களால் சிறந்த உணர்வினைப் புலவர்கள்போல் பெற முடியாது போயிற்று. இன்று இருப்பது

போன்ற அச்சு வசதிகள் அக்காலத்தில் இல்லாத காரணத்தால், ஒவ்வொரு புலவரையும் நேரில் சந்தித்தே, கருத்துகளைக் கலந்து கொள்ள முடிந்தது. எனவே, அரசரும் புலவரும் ஒருவரை ஒருவர் சார்ந்து, ஒருவரை ஒருவர் போற்றி வாழ்வது தவிர்க்க முடியாததாக இருந்தது. அரசருக்கும் புலவருக்கும் உள்ள தொடர்பிற்குப் பின்வருமாறு காரணம் கற்பிப்பர் ஆ.வேலுப்பிள்ளை.

"மன்னருக்கும் புலவருக்குமிடையிலான தொடர்புக்குப் புலவருடைய பொருளாதார நிலை ஒன்றே காரணம் என நிறுவ முடியாது. வேறு சில காரணங்களும் காட்டலாம். பூர்வீகச் சமுதாயங்களிற் புலவர்களே அறிஞர்களாகவும் விளங்குவதால், அவர்களுக்கும் அவர்கள் வாக்குக்கும் மன்னர்களிடையிலும் மக்களிடையிலும் செல்வாக்குக் காணப்படுவதுண்டு. சங்க காலப் புலவர்களை மன்னரும் மக்களும் மதித்தற்கு இதுவும் ஒரு காரணமாகலாம். செயற்கரிய செய்த மன்னர் சிலரைப் புலவர் சிலர் பாடியிருப்பர். புகழை விரும்பிய மன்னர், அப்புலவரை ஆதரித்திருப்பர். இவ்வகையிலும் மன்னர் புலவர் தொடர்பு ஏற்பட்டிருக்கும்"[51] என்பதை உணர முடிகின்றது.

## 3.13. புலவருக்கும் அரசருக்குமுள்ள தொடர்பு

அன்பு செலுத்துவதில் பலவகை நிலைப்பாடு உண்டு. அத்தகைய அன்பில் தலைசிறந்து விளங்குவது நட்பேயாகும். நட்பின் அருமையை உணர்ந்தே வள்ளுவர் நட்பு, நட்பாராய்தல், கூடா நட்பு, நட்பிற் பிழை பொறுத்தல் என்ற அதிகாரங்களை திருக்குறளில் அமைத்துள்ளார். பிறைச் சந்திரன் வளர்ந்து முழுமதியாவதைப் போன்று நற்சான்றோரிடம் கொண்ட நட்பானது நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே செல்லும். ஆனால், தீயோருடன் கொண்ட நட்பு முழுமதி தேய்ந்து கொண்டே செல்வதைப் போன்று நாளுக்கு நாள் குறைந்து கொண்டே செல்லும். இதனையே வள்ளுவர்,

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு"[52]

என்று குறட்பாவின் மூலம் குறிப்பிட்டுள்ளார். அவ்வகையில் சங்கப்புலவர்களுக்கும், சங்க கால அரசர்களுக்கும் இடையிலான நட்பும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே இருந்துள்ளது. தம்மோடு பழகிய

அரசர்களின் ஆட்சிமுறைக்கும் அவர்களுடைய அகவாழ்வின் மேம்பாட்டிற்கும் புலவர்கள் நல்வழி காட்டும் பண்பு கொண்டு விளங்கினர்.

பழங்காலத்தில் மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்தன. பாரி கபிலரை எப்போது தன் அருகில் துணையாகக் கொண்டிருந்தார். கபிலர் பாரியின் அமைச்சராகவும் தானைத் தலைவராகவும் நண்பராகவும் விளங்கினார். கோப்பெருஞ்சோழன் பொத்தியார் என்னும் புலவரை எப்போதும் தன்னருகிலேயே வைத்திருந்தார். அதியமான் ஔவையாரைப் பிரிய மனமின்றிப் பல தந்திரங்களைக் கையாண்டு அவரை எப்போதும் தன் அருகிலேயே கொண்டிருந்தார். குமணனிடம் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் கொண்டிருந்த நட்பு மிக உயர்ந்ததாகும். தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியனிடம் மாங்குடி மருதனார் தலைமைப் புலவராய் விளங்கினார். பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனின் நட்பு இன்றளவும் நட்புக்கு ஓர் இலக்கணமாய் அனைவராலும் போற்றக்கூடியதாக உள்ளது. இவ்வாறு பல்வேறு புலவர்கள் அக்கால மன்னர்களிடையே நட்பு கொண்டிருந்தனர்.

மோசிகீரனார் என்ற புலவர் முரசு கட்டில் என்பதை அறியாது அக்கட்டிலின் மீது படுத்து உறங்கினார். அக்கட்டில் வெற்றித் திருவின் இடமாகக் கருதப்படுவதால் அதில் படுப்பவர் கொல்லப்பெறுவர். ஆனால் பெருஞ்சேரலிரும்பொறை அப்புலவர் செய்த தவறை அறிந்தார். அவர் மீது கொண்ட பெருமதிப்பால் கவரிகொண்டு வீசி அவரை மகிழ்வித்தார் என்பதை,

‘‘மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும்நற் றமிழ்முழுது அறிதல்
அதனொடும் அமையாது அணுக வந்துநின்
மதனுடை முழுவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடம் கமழ
இவண்இசை உடையோர்க்கு அல்லது அவணது

உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசில்நீ ஈங்குஇது செயலே”[53]

என்பதிலிருந்து தம் உயரிய பண்பாட்டால் மன்னர்கள்பால் பெற்றிருந்த நன்மதிப்பையும் நட்பையும் உணரலாம். மேலும் பெருஞ்சேரல் இரும்பொறையின் பெருந்தன்மை என்னும் ஆளுமைப் பண்பு வெளிப்பட்டு உயர்ந்து நிற்கின்றது.

### 3.13.1. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு

நட்பு என்பது ஒருவரையொருவர் நேரில் கண்டு அளவளாவி மகிழ்வது மட்டுமன்று. ஒருவரையொருவர் சந்திக்காமலேயே ஒருவரைப்பற்றி அறிந்து மனதால் நட்பு கொள்வதும் மிக உயர்ந்த நட்பாகும். இதனையே வள்ளுவர்,

“புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்”[54]

என்று கூறியுள்ளார். நண்பர்கள் இருவருடைய மனமும் ஒன்றுபட்டு விட்டால் எங்கிருப்பினும் அந்நட்பு மேலும் தொடரும். முாறாக மன ஒற்றுமையற்றவர் பல நாட்கள் சேர்ந்திருந்து பழகினும் அவர்களுக்குள் நட்பு தொடராது. மனம் ஒன்றுபட்ட இருவர் ஒரு கணமே கூடிப் பிரியினும், அவர்கள் நட்பு அவ்விருவரும் உள்ளவரை நிலைத்து நிற்கும். இவ்வாறு மன ஒற்றுமைப்பட்டோர் வெகு தொலைவில் வாழ்ந்த போதிலும் உள்ள வேறுபாடின்றி, நண்பராகக் கருதி உணர்வில் ஒன்றுபடுவர். இத்தகைய நட்புணர்விற்கு மன ஒற்றுமை மிக அவசியமாகும். அத்தகைய மனஒற்றுமையோடு கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையார் என்னும் புலவரும் வாழ்ந்துள்ளனர்.

சோழநாட்டின் உறையூரை ஆண்ட கோப்பெருஞ் சோழனிடம் பாண்டிய நாட்டைச் சார்ந்த பிசிராந்தையார் என்னும் புலவர் அவனை நேரில் காணாமலேயே நட்பு கொண்டிருந்தான். கோப்பெருஞ்சோழன் ஒருமுறை தன் வாழ்க்கையில் வெறுப்புற்று வடக்கிருக்கத் துணிந்தான். அப்பொழுத பொத்தியார் முதலான புலவர்களை நோக்கி, பாண்டிய நாட்டிலுள்ள பிசிர் என்னும் ஊரைச் சார்ந்த என் நண்பர் நான் செல்வம் பெற்றிருந்த காலத்து வராமற் போயினும், யான் துன்புறும் இக்காலத்து உறுதியாக வருவார் என்று கூறியதை,

"பிசிரோன் என்ப என்உயிர் ஓம்புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே"[55]

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. மேலும், என் நண்பர் பிசிராந்தையார் என்னுடன் வடக்கிருக்கும் பொருட்டு அவருக்கும் ஓர் இடம் ஒதுக்கி வைப்பீராக என்று கூறியதை,

"இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே"[56]

என்ற தொடரின் மூலம் அறிய முடிகிறது. இவ்வாறு சோழன் கூறியபடியெ பிசிராந்தையாரும் அவனுடன் வடக்கிருக்கும் பொருட்டு வந்தார். ஒருவரையொருவர் காணாமலேயே இவ்விருவரும் கொண்ட நட்பின் திறத்தைப் பொத்தியார் என்னும் புலவர்,

"வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுதின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்தன்றே"[57]

என்று வியந்து போற்றியுள்ளார். வேற்று நாட்டிலுள்ள சான்றோன் நட்பின் பொருட்டு வருவான் என்று துணிந்து கூறிய வேந்தனது நட்புத்திறமும் அவன் சொல்லிய சொல் பழுதில்லாமல் வந்தவனது நட்புணர்வும் வியத்தற்குரியதாகும் என்று பொத்தியார் அவர்களுடைய நட்பைப் புகழ்ந்துரைத்துள்ளார். இதன் மூலம் பிசிராந்தையாரும் கோப்பெருஞ்சோழனும் கொண்ட நட்பு மனதளவில் ஒன்றுபட்டதாகும். அதனால் தான் இந்நட்பு இறப்பிலும் அவர்கள் இருவரையும் ஒன்று சேர்த்தது. இதனையே வள்ளுவர்,

"அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு" [58]

என்று கூறியுள்ளார். இவ்வாறு தன் நண்பருடைய துன்பத்தில் தாமும் பங்கு கொள்வதே நல்ல நட்பின் அடையாளமாகும். இத்தகைய நட்புத்திறத்தோடு தான் அக்காலப் புலவர் பெருமக்கள் வாழ்ந்துள்ளனர். அரசனிடம் ஆதாயம் தேடாமல் துன்பத்தில் பங்குகொண்டு தன் உயிரையும் கொடுக்கும்

உன்னதமான பண்பு புலவர்களிடம் இருந்துள்ளது. இதன் மூலம் அவர்களுடைய நட்பின் மேன்மையும் புலனாகிறது.

### 3.13.2. ஔவையார் - அதியமானின் நட்புத்திறம்

சங்க கால அரசர்களும் வள்ளல்களும் தம்முடைய உயிரைப் பெரிதென மதிக்காது புலவர் பெருமக்களின் உயிரைப் போற்றிப் பாதுகாக்கும் பெருந்தன்மை பண்புடன் விளங்கினர். புலவர்களின் தமிழறிவும் அறிவுரைகளும் மக்களுக்குத் தேவை என்பதை சங்ககால அரசர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். அதனால் தான் அதியமான், நெடுங்காலம் வாழச் செய்யும் நெல்லிக்கனியைத் தான் உண்டு பயன்பெறாமல் ஔவையாருக்குக் கொடுத்துள்ளான். அதனை எண்ணி மகிழ்ந்த ஔவையார் அவன் செயலை, அனைவரும் அறியும் பொருட்டு,

"பெருமலை விடரகத்து அருமிசை கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே"[59]

என்ற பாடலைப் பாடியுள்ளார். தான் நெடுங்காலம் வாழ வேண்டும் என்ற விருப்பமில்லாது அக்கனியை ஔவையாருக்குக் கொடுத்துள்ளதன் மூலம் அதியமானின் நட்புத்திறமும் சுயநலமின்றி செயல்பட்டுள்ள பொதுநலப் பண்பும் புலனாகிறது. 'கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்பதற்கேற்ப புலமை வாய்ந்த ஔவையார் பல்வேறு நாடுகளுக்கும் சென்று மக்களுக்கு நல்வழி காட்டும் அறிவுரைகளை வழங்க வேண்டும் என்ற உயர்ந்த பண்பு காணப்பட்டது. மேலும், ஔவையார் நீண்டநாள் வாழ வேண்டும் என்ற அதியமானின் பரந்துபட்ட தொலைநோக்குப் பார்வையும் இதன் மூலம் புலனாகிறது. எனவே, நட்புமுறையையும் தாண்டி புலவர்களின் சேவை, இந்நாட்டிற்குத் தேவை என்பதையும் உய்த்துணரும் பண்பு அக்கால அரசர்களிடம் காணபப்பட்டமையை இந்நிகழ்வின் மூலம் அறிய முடிகிறது.

### 3.13.3. கபிலர் - பாரி நட்புறவு

உலக உயிர்களின் இயக்கத்திற்கு அடிப்படையாக விளங்குவது அன்பு. அன்பின் சக்தி மகத்தான சக்தி. அச்சக்தி இல்லையேல் உலகம் நிலைக்காது.

அன்பே மனிதனின் சேமிக்கும் மகத்தான செல்வமாகும். ஒருவரிடம் நாம் அன்பு காட்டும் போது தான் அவருக்காக வாழ வேண்டும் என்ற எண்ணம் தோன்றும். இதனையே வள்ளுவர்,

"அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"[60]

என்னும் குறளின் மூலம் விளக்கியுள்ளார். இத்தகைய குறளுக்குப் பாத்திரமாக கபிலர், பாரியின் நட்பு காணப்பட்டது. பாரி இறந்த பின்பு, அவன் புதல்வியரை கபிலர், விச்சிக்கோ, இருங்கோவள் ஆகியோரிடம் அழைத்துச் சென்று மணஞ் செய்து கொள்ளும்படி வேண்டினார். அதனை,

"பரந்து ஓங்கு சிறப்பின் பாரி மகளிர்
யானே பரிசிலன் மன்னும் அந்தணன் நீயே
வரிசையில் வணக்கும் வாள்மேம்படு நன்
நினக்கு யான் கொடுப்பக் கொண்மதி" [61]

என்ற புறநானூற்றுப் பாடலும் உணர்த்துகின்றது. கபிலர் அம்மன்னர்கள் இருவரிடமும், "இவர்கள் பறம்பிற்குத் தலைவனாகிய பாரியின் மகளிர் யான் இவர்கள் தந்தையின் தோழன். ஆதலால் அவர் பாரியின் மீது வைத்திருந்த அன்பும், நட்புத்திறமும் வெளிப்படுகிறது. மேலும், அரசர்களிடம் பரிசில் பெற்றுத் தம் துன்பத்தை மட்டும் போக்கிக் கொள்ள விரும்பாது, அந்த அரசர்கள் எதிர்பாராது இறந்துவிடும் சூழலில் அவர்களுடைய வாரிசுகளுக்கு நல்வழி காட்டும் நற்செயலையும் புரியும் பாங்கு அவர்களிடம் காணப்பட்டது என்பதும் இதன் மூலம் புலனாகிறது. அதனால் தான் கபிலர் பாரியின் புதல்வியரைத் தம் புதல்வியராகக் கருதி அவர்களுக்கு ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கும் பெருந்தன்மைப் பண்போடு செயல்பட்டுள்ளார்.

இத்தகைய உயர்ந்த நட்பே சங்ககால புலவருக்கும் அரசருக்கும் இடையே நிலைபெற்றிருந்தது. அதிகார பலமும் செல்வ வளமும் மிக்க அரசன், வறுமையில் வாடிய புலவரொடு ஏற்றத்தாழ்வு கருதாது அவர்களுடைய புலமைத் தன்மையின் உயர்வுக்காகவும் சிறந்த நற்பண்பிற்காகவும் நட்புடன் விளங்கிய பாங்கும் புலனாகிறது.

## 3.14. புலவர் - அரசர் முரண்பாடுகள்

அதியமான் நெடுமான் அஞ்சி சிறந்த வள்ளல்; ஔவையாருக்கு நெல்லிக்கனி நல்கிய தந்த பெருமான்; அவனை நாடிச் சென்றோர் பெருஞ்சித்திரனார். யாது காரணம் பற்றியோ அதிகமான் புலவரை நேரில் காணவில்லை; பரிசிலை மட்டும் புலவர்க்கு அனுப்பினான். புல சிறுகுன்றுகளும் பெருமலைகளும் கடந்து அதிகமானைக் காண வந்த புலவரது மனம் பெரிதும் துன்புற்றது. 'பரிசில் பெறுவதென்றே புலவர் தொழில் என்றன்றோ கருதிவிட்டனன் இவ்வதிகமான்! என்று புலவர் தம் நெஞ்சம் நைந்தது. பரிசில் பெற மறுத்து, அவர் ஒரு பாடல் பாடினார்,

"குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற் கென
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்!
காணாது ஈந்த இப்பொருட்கு யான்ஓர்
வாணிகப் பரிசிலன் அல்லேன்!"[62]

என்னும் இப்பாடற் பகுதியில் உள்ள எள்ளற்சுவை ஊன்றி உணரத்தக்கது.

புலமைக்கு நிகழ்ந்த வேதனையும் வண்மைக்கு நேர்ந்த இளிவரவும் குறித்த புலவர், மற்றொருவனையும் கூறியுள்ளார். 'பாட்டுப் பாடினேன்; பாட்டுக்கு விரலையாகப் பரிசு கொடுத்தான் என்று பண்டமாற்றுப் பேசும் வாணிகப் பரிசிலன் அல்லேன்!' என்று தம் பெருமிதத்தையும் அதிகமான் நெஞ்சு தைக்க எடுத்தியம்பினார். இவற்றில் வாணிகப் பரிசிலன் அல்லேன் என்று தம்மை எதிர் மறையாற் குறிப்பது கொண்டு அக்காலத்தே வாணிகப் பரிசிலரும் இருந்திருத்தல் கூடும் என்று நாம் முடிவு செய்யலாம். அத்தகையோர் இருந்திருப்பினும், அவர் ஒரு சிலராகவே இருந்திருப்பர்.

வெளிமான் என்பான் ஒரு சிற்றரசன். சிறந்த வள்ளல். ஆவன்பால் பரிசில் பெறும் நோக்கங்கொண்டு பெருஞ்சித்திரனார் போயினார். புலவர் செல்லுமுன் வெளிமான் இறந்து பட்டனன். இவன் தம்பி இளவெளிமான் பெருஞ்சித்திரனாரின் தரமறியாது சிறிது பொருள் கொடுத்தனன். அகமகிழ்ச்சியின்றி முகம் மாறுபடத்தரும் பிச்சைப் பொருளை முயற்சியற்ற கீழ்மக்கள் விரும்பக் கூடும்.

பெருஞ்சித்திரனார் அத்துணை இழிதகவுடையார் அல்லர். அவர்தம் வரிசையறிந்து 'வருக' வருக! வரவேற்க இப்பரந்த உலகில் பலர் உண்டு. புலமையின் சிறப்பை இழிவு செய்து ஈந்த புன்மையால் ஏற்படும் உள்ளத் தளர்ச்சியை அவர் விரும்பவில்லை. தம் நெஞ்சினை நோக்கி, 'நெஞ்சமே, தளர வேண்டர் இந்த உலகம் விசையுடையார்க்குப் பெரிது' என்று உரைக்கிறார்:

"அகன் நக வாரா முகன் அழி பரிசில்
தாளி லாளர் வேளாளர் அல்லர்;
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே உலகம்! பேணுநர் பலரே!"[63]

வள்ளல்களின் செவிகளில் விளக்கம் அமைந்த சொற்களை விதைத்தத் தாங்கள் நினைத்ததை முடிக்கும் நெஞ்ச வலிமை படைத்தவர்கள் புலவர்கள். அவர்கள் தங்கள் சிறப்பைப் பாதுகாக்கப்படும் பரிசில் வாழ்க்கையுடையவர்கள்.

### 3.14.1. மன்னர்களை இடித்துரைத்தல்

மன்னர்கள் தவறான வழியில் செல்லும் போது அவர்களை நெறிப்படுத்தி அறிவுரைகள் பல வழங்கியுள்ளனர். நாட்டினை நல்ல வழியில் வழிநடத்திச் செல்லவும் குடிமக்களைக் காக்கவும் நீதி வழங்கவும் குடிமக்களிடம் வரி வாங்கும் முறையும் குறித்து பல்வேறு அறிவுரைகளை மன்னர்களுக்குப் புலவர்கள் வழங்கினர். அறிவுரை வழங்கும் புலவர்க்கு அறிவுரை கூறத்தக்க ஆளுமையும் மன்னர்களுக்கு அதனைக் கேட்கும் ஆளுமைத் திறனும் இருந்ததை அறிய முடிகின்றது.

### 3.14.2. நாட்டு வளம் பெறுக

ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு முதுகெலும்பாகத் திகழ்வது அந்நாட்டில் இருக்கும் நீர்வளமும் நிலவளமுமேயாகும். இவற்றைப் புலவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். நாட்டினை வளப்படுத்தும் இத்தகைய செயலைச் செய்யாது நீங்குவதால் நாட்டில் ஏற்படும் விளைவுகளைக் குறித்தும் அவற்றைச் செய்வதால் ஏற்படும் நன்மையையும் புகழையும் குறித்து புலவர் மன்னருக்கு எடுத்துரைத்ததை,

"நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தோடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே"[64]

என்ற பாடலின் மூலம் உணரலாம்.

### 3.14.3. குடிகளைக் காத்தல்

மழை பெய்ய வேண்டிய காலத்தில் பெய்யாமல் விளைச்சல் குறைந்து மக்கள் இயல்பாக இல்லாமல் செயற்கையாக இருந்தால் மன்னனையே இந்த உலகம் பழிக்கும். அதை நீ நன்கு உணர்ந்திருந்தால் நீயும் மற்றவரின் பழிச்சொற்களைக் கேளாது, ஏரைக் காப்பவரின் உழவர் குடிகளை காத்து அதனால் மற்றக் குடிகளையும் காப்பாயானால் உன்னுடைய பகைவரும் உன்னைப் போற்றி வணங்குவர் என்று புலவர் அறிவுறுத்துவதை,

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்
அதுநற்கு அறிந்தனை யாயின் நீயும்
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே"[65]

என்பதன் மூலம் அறியலாம். அன்பையும் அருளையும் நீக்கிப் பாவம் செய்து, நீங்காத நரகத்தை அடைபவருடன் சேராது, உன்னால் காக்கப்படும் நாட்டையும் நாட்டில் உள்ளவர்களையும் குழந்தையைப் பேணுவது போல நின்று பாதுகாப்பாயாக. இவ்வாறு காப்பது எளிதன்று என்பதை,

"அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரோடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி

அளிதோ தானேஅது பெறல்அருங் குரைத்தே"[66]

என்ற பாடல்வரிகளின் மூலம் புலவர் மன்னரை இடித்துரைக்கின்றார்.

### 3.14.4. மன்னர் ஆட்சி முறை

இவ்வுலகத்திற்கு அரசனது முறையான ஆட்சியே உயிர். எனவே இவ்வுலகத்தை ஆளும் மன்னன் முறையறிந்து ஆட்சி புரிய வேண்டும் என்பதை,

"நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர்அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேனிகு தானை வேந்தற்குக் கடனே"[67]

என்பதால் அறியலாம். மன்னர் பகைவர் நாடுகளுடன் போர் புரியும் போது, வளைந்த கதிர்களை உடைய வயல்களை உன்னுடைய வீரர்கள் அழித்தாலும் ஊரைத் தீயிட்டு கொழுத்தினாலும் பரவாயில்லை அவர்களின் காவல்மரங்களை மட்டும் வெட்டாதே என்று புலவர் அறிவுறுத்தியதை,

"நீயே பிறர்நாடு கொள்ளும் காலை அவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் ஒளிறுஇலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க என்னதூஉம்
கடிமரம் தடிதல் ஓம்புநின்
நெடுதல் யானைக்குக் கந்தாற் றாவே"[68]

என்ற வரிகளில் காவல் மரங்களை வெட்டி, உன்னுடைய யானைகளை கட்டி வைக்கும் கட்டுத்தறியாக இருக்கக்கூடியவை அம்மரங்கள் அல்ல என்றும் அதனால் போரைத் தவிர்க்க வேண்டும் என்றும் வலியுறுத்தினார்.

நெடுங்கிள்ளியின் நாட்டை நலங்கிள்ளி முற்றுகையிட்டான். அப்போது நெடுங்கிள்ளி அவனை எதிர்த்துப் போரிடாமல், தன்னுடைய கோட்டைக் கதவுகளை திறக்காமல் உள்ளேயே இருந்தான். இதனைக் கண்ட புலவர் அவனை இடித்துரைத்ததை,

"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்து
அலமரல் யானை உருமென முழங்கவும்
பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைஉடிக் கேட்பவும்
இன்னாது அம்ம ஈங்குஇனிது இருத்தல்
துன்னரும் துப்பின் வயமான் தோன்றல்
அறவை யாயின் நினது எனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல்"[69]

என்ற பாடலடிகள் யானைகள் உணவின்றி பசியில் இடியைப் போல் முழங்குகின்றது. பால் இல்லாமல் குழந்தை அழுதும், மகளிர் பூ இல்லாமல் வெறும் கூந்தலை முடித்தும் குடிமக்கள் நீர் இல்லாமல் வருந்தியும் இருக்கின்றனர். இதை எல்லாம் பார்த்து நீ எதுவும் செய்யாமல் இருப்பது இழிவான செயலாகும். நீ நலங்கிள்ளியின் முன் வந்து இது உன்னுடைய நாடு என்று சொல்லி கதவை திறந்து விடு. இல்லை என்றால் அவனுடன் போரிட்டு நாடு திரும்பு என்று புலவர் இடித்துரைத்தார்.

### 3.14.5. பேகனின் புறஒழுக்கத்தை இடித்துரைத்தல்

புலவர்களின் புலமையையும் ஆளுமைத் திறனையும் பார்த்த பேகன் பரிசில் வழங்க வந்தான். இதனை அறிந்த புலவர்கள் நாங்கள் பசித்து வரவில்லை. நீ அறம் செய்தல் வேண்டும். இன்றிரவே தேர் ஏறிச் சென்று உனது மனைவி கண்ணகியின் துன்பத்தைப் போக்க வேண்டும். இதுவே நீ எனக்கு வழங்கும் பரிசில் என்று அறிவுறுத்தினார். இதனை,

"பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறம்செய் தீமோ அருள்வெய் யோய்என
இ஼தியொம் இரந்த பரிசில் அ஼து இருளின்

இனமணி நெடுந்தேர் ஏறி

இன்னாது உறைவி அரும்படர் களைமே''[70]

என்பதால் அறியலாம். மேலும் நேற்று யாம் செவ்வழிப் பண்ணைப் பாடினோம். அப்போது ஒருத்தி கண்ணீர் விட்டு வருந்தினாள். அவள் தன்னுடைய கூந்தலை முடித்து பூச்சூடி மகிழ அருள் செய்ய வேண்டும் என்று எடுத்துரைத்ததை,

''சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல

நன்னாடுபாட என்னை நயந்து

பரிசில் நல்குவை யாயின் குரிசில் நீ

நல்கா மையின் நைவரச் சாஅய்

அருந்துயர் உழக்கும்நின் திருந்திழை அரிவை

கலிமயிற் கலாவம் கால்குவித் தன்ன

ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇ

தண்கமழ் கோதை புனைய

வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே''[71]

என்றும்,

''கன்முழை அருவிப் பன்மலை நீந்திச்

சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்

கார்வான் இன்னுறை தமியள் கேளா

நெருநல் ஒருசிறைப் புலம்புகொண்டு உறையும்

அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை

நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்

மண்ணுறு மணியின் மாசுஅற மண்ணிப்

புதுமலர் கஞல இன்று பெயரின்

அதுமன்எம் பரிசில்''[72]

என்ற பாடல்களின் மூலம் புலவர்கள் பேகனை தன் மனைவிடம் சென்று சேர வேண்டும் என்று இடித்துரைத்தனர். இவ்வாறு புலவர்கள் தங்களின் ஆளுமைத்திறனால் மன்னர்களின் தவறுகளைச் சுட்டிக்காட்டி அவர்களை நல்வழிப்படுத்தவும் இடித்துரைத்தனர் என்பதை அறிய முடிகின்றது.

### 3.14.6. காணாதீயும் பரிசில் மறுப்பு

காணாது ஈயும் பரிசில் என்றும் இரவலரை நோகச் செய்யும். தினைத்துணை ஆகினும் நேர்நின்று புலவரின் வரிசை அறிந்து ஈதலையே அவர்கள் விரும்பினர். அதியமான் நெடுமான் அஞ்சி தன்னை நாடி வந்த பெருஞ்சித்திரனாரைக் கண்டு பேசி அவர்க்குத் தேவையான பொருளை வழங்காமல் வேற்றார் மூலம் ஏதோ ஒரு பொருளைக் கொடுத்து ‘போய் வருக’ என அனுப்பிவிட்டான். இது தன் புலமையையும் தகுதியையும் அவமதித்த செயல் என்பதால் அதை ஏற்க மறுத்த அப்புலவர்,

“குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற என்னயந் தருளி ஈதுகொண்டு
ஈங்கனஞ் செல்க தானென என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த இப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்
தினையனைத் தாயினும் இனிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே”[73]

எனக் கூறி அவ்விடம் விட்டு அகன்றார். தம் தகுதி அறிந்து, விருப்பம் அறிந்து, நேரில் கண்டு உபசரித்து வழங்கும் பொருள் சிறிதாயினும் அதைப் பெறுவதில் உவப்படைந்த புலவர்கள் தம்மை எப்படி வரவேற்றுப் பரிசில் வழங்க வேண்டும் எனவும் விளக்கியுள்ளனர். நேரில் கண்டு உள்ளம் உருகியும் உவந்தும் தரவேண்டும் என்பதில் புலவர்கள் உறுதியாய் இருந்தனர். இளவெளிமான் காணாமல் ஈத்த பொருளைப் பெறாமல் வெளிச் சென்ற பெருஞ்சித்திரனார்.

"வருகென வேண்டும் வரிசை யோர்க்கே

பெரிதே உலகம் பேணுநர் பலரே

மீளி முன்பின் ஆளி போல

உள்ளம் உள்ளவிந் தடங்காது வெள்ளென

நோவா நோன்வயிற் றிரங்கு

வாயா வன்கனிக்கு உலமரு வோரே"[74]

என்று பாடிய பாடலில் அந்த உறுதியும் தன்மானமும் வெளிப்படுகின்றன.

## 3.15. நல்லாட்சியும் கொடுங்கோல் ஆட்சியும்

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி

ஒல்லாது வானம் பெயல்"[75]

"ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்

காவலன் காவான் எனின்"[76]

அரசன் நிர்வாகக் குறையால் மழை குறைய, விளைச்சல் குறைய, மக்கள் வாழ்க்கையும் திசைமாறும் என்பதை இக்குறட்பாக்கள் உணர்த்துகின்றன.

"கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்

பெயல் பிழைப் பறியாப் புன்புலத்ததுவே"[77]

நல்லாட்சி புரிந்த மன்னர்கள் மறுமையில் துறக்கம் என்னும் சொர்க்கம் செல்வர் என்ற நம்பிக்கை நிலவியது. அதே போல் அன்பும், அருளும் நீக்கிக் குடிமக்களை வருத்துபவர் நரகம் செல்வர் என்றும் நம்பினர்.

"நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான் செய்த

தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போல்"[78]

மேலும்,

“அன்பும் அருளும் நீக்கி நீங்கா

நிரையம் கொள்பவரோடு ஒன்றாது காவல்

குழவி கொள்பவரின் ஓம்புமதி”[79]

### 3.16. மக்கள் வரி செலுத்துதலில் மன்னன் பங்கு

போர் இல்லாத காலங்களில் குடிமக்கள் மன்னனுக்கு வரி செலுத்தினர். அது புரவு, இறை எனப்பட்டது. ‘இறை’ என்னும் சொல் மன்னனைக் குறிப்பது. எனவே அவனுக்குரிய பொருள் என்பதால் ‘இறை’ எனப்பட்டிருக்கலாம். ‘புரவு’ என்ற சொல் காத்தலையும் விளைநிலத்தையும் குறித்தது. போர்களின் பொழுது பெரிதும் பேரழிவுக்குள்ளானது விளைநிலமே ஆதலின் அதனைக் காக்கும் பொருட்டு மக்கள் வரி செலுத்தியமை பொருத்தமே ஆகும்.

“விருந்திறை சான்மென”[80]

“குடிபுரவு இரக்கும் கூரி லாண்மை”[81]

“புரவுதொடுத்து உண்குவை யாயினும்”[82]

உழவர் தந்த வரி ‘புரவு’ என்றும் வணிகர் தந்த வரி ‘உல்கு’ எனவும் பெயர் பெற்றன.

“உல்கு செயக் குறைபடாது”[83]

“உல்குடைப் பெருவழி கவலை காக்கும்”[84]

மன்னன் வரி வாங்கும் பொழுது மக்களைத் துன்புறுத்தாமல் நடந்து கொள்ள வேண்டும். மக்களை அலைத்துப் பொருள் பெற்றால் அவனுமம் கெட்டு, அவன் நாடும் கெடும்.

“அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே

கோடி யாத்து நாடு பெரிது நந்தும்

………………………………………..

பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்

யானை புக்க புலம்போலத்

தானும் உண்ணான் உலகமும் கெடுமே''[85]

''பகடு புறந் தருநர் பாரமோம்பிக்

குடிபுறந் தருகுவை யாயினின்

அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே''[86]

என்று பிசிராந்தையாரும் வெள்ளைக்குடி நாகனாரும் மன்னனுக்கு அறிவுறுத்தியுள்ளனர்.

## 3.17. கொடுங்கோல் அரசர்

தனது அரசாட்சியில் மக்கள் நலம் பாராது தன்னலம் மட்டுமே நாடும் அரசரைக் கொடுங்கோலர் என்பர்.

''ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்ட''[87]

''ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோல்''[88]

தனக்கு நல்லதே நினைத்து அறிவால் அரசனுக்குதவும் அமைச்சர்களையும் கடுஞ்சொல் உரைத்து, அளவில்லாக் கொடுமைகள் செய்து கொல்லும் தன்மை உடைய அரசன் கொடுங்கோலன் என்றால் காமம் அதைவிடக் கொடியது என்பது தலைவியின் உள்ளக் குமுறல், தலைவியின் காமம் எவ்வளவு கொடுமையானது என்பதற்கு கொடுங்கோல் அரசன் உவமிக்கப்படுகிறான்.

''இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா

மன்னவன் கோற்கீழ்ப் படின்''[89]

கொடுங்கோல் அரசர் கீழ் வாழ்பவர்க்குப் பொருள் உடைமையே இன்னாதது என்பதால் வறுமை நன்றாகும் என்ற நிலை நிலவியது.

## 3.18. போர்களால் ஏற்படும் அழிவு

''பண்டைத் தமிழகத்தில் இடையறாத போர்கட்கிடையே மக்கள் வாழவேண்டியிருந்தது. படையெடுத்துச் சென்றவர் பகைவர் நாட்டில் புரியும்

மறச்செயல்கள் பலவாக இருந்தன. ஊர்களையழித்தல், நீர்நிலைகளைப் பாழாக்குதல், விளை வயல்களைச் சிதைத்தல், மன்றங்களை அழித்தல் ஆகிய செயல்கள் இவற்றிற் சிலவாகும்''[90] என்று முனைவர் அ.தட்சிணாமூர்த்தி சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள் என்ற தமது ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பகைநாட்டை வென்று அவ்வரசரிடம் திறைப்பொருள் பெறுவதுடன் மன்னர்கள் தம்நாடு திரும்புவதில்லை. மன்னர்கள் எதிரியாகக் கொள்ளப்படுவது இயல்பு. ஆனால் அந்நாட்டு மக்களும் எதிரிகளாகக் கருதப்பட்டு அவர்களின் வாழ்விடங்களும் வாழ்வதற்கு உறுதுணையாக இருக்கும் நீர்நிலைகள், விளைநிலங்கள், ஊர்மன்றங்கள் ஆகியனவும் அழிக்கப்பட்ட செயல் அக்கால மன்னர்களின் போர்வெறியையும் மனிதநேயமற்ற செயல்பாட்டையும் வெளிப்படுத்துகின்றன. அப்படி ஊர்களை அழித்த செயலைப் பாராட்டி, அம்மன்னர்களை மேலும் மேலும் அதுபோலச் செய்ய வைக்கத் தூண்டிய புலவர்களும் சிலர் இருந்துள்ளனர். இதனைக் க.கைலாசபதியின் கூற்று உறுதிப்படுத்தும்.

''தமிழ் மன்னரின் இலக்கிய ஆர்வத்தையும் வள்ளண்மையையும் ஒப்பிலக்கிய நோக்குடன் பார்க்கும் பொழுது மேல் நோக்கிற்குத் தெரியும் கொடைச் சிறப்பிற்கு அடிப்படையாக ஆளும் வர்க்கத்திற்கு அனுசரணையாகப் புலவர் பிரச்சாரம் செய்த பணி தெரியவருகின்றது''[91] என்பது அவர் கருத்து.

## 3.19. புலவர்களின் பாராட்டு

''நீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியும் நைக்க''[92]

''மயங்கு வள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும்பல்லது காடறியாப்
ஏமநன்னா டொள்ளெரி யூட்டினை''[93]

என்னும் இத்தகைய புலவர்களின் பாராட்டுகள் மன்னனை மேலும் அழிக்கத் தூண்டின. பாண்டியன் இலவந்தகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்,

பெருநற்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் போன்ற மன்னர்கள் எதிரிநாட்டு மக்களுக்கு இழைத்த இன்னல்களில் முக்கியமானவை நீர்நிலைகளை அழித்தலும் விளைநிலங்களையும் வீடுகளையும் தீயிட்டக் கொளுத்துதலும் எனலாம். பொருள்களைக் கொள்ளையடித்துச் செல்லும் கொள்ளைக்காரர்களைவிட மோசமாக நடந்து கொண்ட தன்மையை, பெண்களைக் கைதிகளாக்கி அடிமைகள் போல் நடத்திக் கொண்டிமகளிர் என்று அழைத்த கொடுமையைச் சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தியுள்ளன.

## 3.20. புரவலர்க்கு இருக்க வேண்டிய பண்புகள்

புரவலர்கள் தங்களை நாடிவரும் இரவலர்களின் வறுமை குறித்தும் அவர்களின் எதிர்பார்ப்பு குறித்தும் எள்ளலாக நினைக்காமல் இருக்க வேண்டும். அதுவே நற்பண்பு, அதுவே புகழுக்கு அடிப்படை,

‘‘தன்னச்சிச் சென்றாரை எள்ளா ஒருவனும்
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்
என்றும் அழுக்காறு இகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார்’’[94]

என்கிறது திரிகடுகம்.

கேள்வியுள் எல்லாம் தலை என்பதற்கு கேள்விப்படவேண்டிய தலைமையான செய்தி என்பது பொருள்.

‘‘அலந்தார்க்கு ஒன்று ஈத்த புகழும்’’[95]

‘‘இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமை’’[96]

என்றபடி இல்லாதவர்க்குத் தரும் கொடையால் வருகிற புகழ் என்பதுதான் கேள்விப்பட வேண்டிய தலையாய செய்தி என்கிறது திரிகடுகம்.

## 3.21. புலவன் அரசனின் பெருமையைப் பேசுதல்

‘‘உள்நாட்டில் தீமையே இல்லாததாக்கி நன்மையே மிகவும் புரிந்து கடலாலும் காடு கழனிகளாலும் பெற்ற செல்வங்களால் பன்பெற்ற மக்கள் ஒருவரையொருவர் நலியாமலும் மக்கள் பிறர்க்கு உரிமையுள்ளதாய்த் தமக்கு

இயைபு இல்லாத பொருள்களை விரும்பாமலும் மக்களை வழி நடத்தும் தம்படையணி மறவரை உடையவனாக"[97] என அவன் புகழப்படுகிறான்.

மன்னனிடத்தில் புலவர் அனைவரது உறவும் சமநிலையில் இல்லை எனத் தெரிகிறது. இக்கட்டத்தில் சங்க காலத்தில் "புலவர்கள் பலர் இருந்திருப்பினும் எல்லோரும் சமநிலையில் போற்றத்தக்கவராய் இருந்திருக்கிறார்கள். ஏனையோர் நிலையைக் கடந்து நிற்கும் புலவர் எவரையும் நாம் அங்குக் காணவில்லை"[98]

"மேல் நோக்கிற்குத் தெரியும் கொடைச் சிறப்பிற்கு அடிப்படையாக ஆளும் வர்க்கத்துக்கு அனுசரணையாகப் புலவன் பிரசாரம் செய்த பணி தெரிய வருகிறது"[99]

## 3.22. புலவர்களை ஆதரித்தல்

"பட்டினப்பாலையில் உருத்திரங்கண்ணனார் கரிகாலனுடைய செழுமையான நாட்டைப் பற்றி முழு விவரங்களையும் மற்றும் அவனுடைய வெற்றியான போர்களையும் நீதியான ஆட்சியையும் பற்றியும் தருகிறார"[100].

## 3.23. புரவலர் புலவர்களைப் போற்றிய முறை

புரவலர், புலவர்பால் கொண்டிருந்த மதிப்பு குறிப்பிடத்தக்கதாயிருந்தது. புலவர்களைப் பெரும் புலமையாளராகவும் சான்றோராகவும் கருதிப் போற்றினர். பாண்டியன் தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உரைத்த வஞ்சினம், பழந்தமிழ்ப் புலவர்கள் பெருமக்களின் சிறப்பான வாழ்வை உணர்த்துகிறது.

"ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை"[101]

எனக் குறிப்பிடும் செழியனின் கூற்று கருதத்தக்கது. ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி எனப் புலவரின் புலமைத் திறத்தைக் குறிப்பிட்டு, அப்புலவரால் தன்

நாடும் தானும் பாராட்டுப் பெறுவதை உயர்வாக மதித்தது புரவலரின் தமிழ் நெஞ்சம். கபிலரின் புலமையை,

“செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த வேள்வி விளங்குபுகழ்க் கபிலன்”[102]

மாந்தரஞ்சேரலிரும் பொறை மதிப்பிடுவது உணரத்தக்கது. பழந்தமிழகத்தில் புலவர்கள் பெற்றிருந்த செல்வாக்கையும் புரவலர்கள் அவர்களைப் போற்றிய திறத்தையும் இவ்விரு சான்றுகள் எடுத்துக்காட்டுகின்றன.

புரவலர் புலவர்களைப் போற்றி மதித்த சிறப்பிற்குக் குட்டுவனின் செயல் சான்றாக அமைகிறது. புலவரைப் போற்றியுரைப்பது, அவருக்குப் பரிசில் தருவது இவற்றோடு அமையாது, தன் மகனையே அவருக்குத் தொண்டு செய்ய அனுப்புவது புலமைக்குப் பழந்தமிழ் ஆட்சியாளர்கள் தந்த மதிப்பினை உணர்த்துகிறது. புலவர்களை, வறியவர் என்று எண்ணாது, கற்றறிந்த சான்றோர் என மதித்துப் போற்றிய சிறப்பு எண்ணத்தக்கது.

“புரவலர்கள் தம்மை நாடிவந்த புலவர் பெருமக்களை அன்புடன் வரவேற்று, வேண்டியன நல்கிப் போற்றினர். தம்மை விட்டுப் பிரியும் பொழுது ஏழடி புலவரின் பின்சென்று வழியனுப்பும் பண்பாட்டையும் பெற்றிருந்தனர். இத்தகைய பண்புநலன்களைப் புரவலர்கள் பெற்றிருந்ததால், அவர்களைப் புலவர்கள் தாங்கள் விரும்பிய நேரத்தில் காணவும் கண்டு பேசவும் உரிமை பெற்றிருந்தனர்”[103].

பெரும்பாலும் அரசர்களே புரவலர்களாக இருந்துள்ளனர். புலவர்களின் வரவைத் தடுக்காதவையாக அந்நாளைய வேந்தரின் வாயில்கள் விளங்கின. ஒரு நாட்டிற்குரிய வேந்தன் அந்நாட்டுள் தன்னை எதிர்நின்று தடுப்பார் எவரும் இல்லாமையால், எவரும் கேளாதே, மாறாக எல்லோரும் எதிர்வந்து போற்ற, இறுமாந்து தலைதூக்கிச் சென்று அரசவையில் புகுவது போல் குட்டுவன் கோதை அரசவையில் சென்று இருத்தல் புலவர்களுக்கு மிகமிக எளிது என்பதை,

“உடையோர் போல விடையின்று குறுகிச்

செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்

எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே"[104]

எனக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் குறிப்பிட்டுள்ளார். புலவர்களுக்கு அடையாத பெரும் வாயில்களாக, வேந்தரின் அரண்மனை வாயில்கள் திகழ்ந்தன என்பதை இந்தப் புலவரின் பாடல் காட்டுகிறது. நாடாளும் வேந்தர்க்கு இணையாக, மொழியாளும் புலவர்கள் உரிமையும் செல்வாக்கும் பெற்று விளங்கியதை இதனால் அறிய முடிகிறது. புலவரின் அரண்மனை நுழைவிற்கு வேந்தனின் நுழைவை ஒப்புமைப்படுத்திக் கூறியிருப்பது கருதத்தக்கது. இதனால் புலவர் பெருமக்களுக்கு இருந்த மதிப்பும் செல்வாக்கும் புலனாகின்றன.

"கன்றைப் பார்த்து இரங்கும் பசுவைப்போல், புலவர்களின் வறுமை நிலையைக் கண்டு புலவர்கள் இரங்கினான். அவன் கண்களில் புலவர்களின் துன்பங்களைப் போக்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது"[105]

"வேர்வையினால் நனைந்த, ஈறும் பேனும் உலவும் கந்தையைக் களைந்து, அருமையான ஆடையை உடுக்க நல்கினான். அழகுடைய அரியையவர் புதுத்தேறலை மழையென வார்க்கும்படிச் செய்தான். தம் பசித்துன்பம் போகுமாறு தேறலை மாந்தி, அதனால் தம் மனத்துன்பமும் நீங்கப்பெற்று அரசன் கோயிலிலேயே புலவர் துயின்றனர். துயில் நீங்கிய பின்னர், தாம் அளவிற்கு மிகுதியாகத் தேறலைப் பருகி விட்டதை நினைத்து வியப்புற்றனர்"[106] என வறுமையில் வாடி, நலிவுற்று வருவோரைப் புரக்கும் புரவலனின் அருளுடைமையைச் சிறப்பாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

## 3.23. பாணர்களுக்கு ஆதரவு

தொல்காப்பியர் புறத்திணை இயல் 36-ஆம் சூத்திரத்தில் 'பொருநர்' என ஒருவகை மக்கட் கூட்டத்தவரைக் குறிப்பிடுகிறார். 'பொருநர்' என்பதற்குப் போரில் வெற்றி பெற்ற அரசனுடைய பகழைப் பாடுபவர் என்று உரையாசிரியர் பொருள் கூறுகின்றனர். பொருநராற்றுப்படையில் புலவர் முடத்தாமக்கண்ணியார், ஓர் வறிய பொருநன் அல்லது பாணன், ஏழைப் பாணனோடும், விறலியரோடும் கரிகாற்சோழ அரசனைப் போய்ப் பார்த்ததையும் அவர்களுக்கெல்லாம் அவன் விருந்தளித்துப் பரிசில்கள் வழங்கியதையும் விவரமாகக் கூறுகிறார். இப்பொருநன் உறையூரில் அரசனுடைய அரண்மனையிலிருந்து திரும்பி வரும் வழியில் வேறொரு பொருநனைக் கண்டு, சோழன் கரிகாலன் அவனுக்களித்த

விருந்தையும் அரிய, பெரிய பரிசில்களையும் எடுத்துக் கூறி, இரண்டாவது பொருநனை ஆற்றுப்படுத்தி, அவனும் சோழனிடம் சென்று தனது வறுமையை நீக்கிக் கொள்ளுமாறு வழிப்படுத்துகிறான். இவ்வாறு இந்நூல் முழுவதும் கரிகாற்சோழ அரசனைக் கண்டு வந்த ஒரு பொருநன் வேறொரு பொருநனை அவனிடத்துச் செல்லுமாறு கூறும் ஓர் ஆற்றுப்படையாக அமைந்துள்ளது.

இந்தப் பொருநன் தனது வறிய பெரிய சுற்றத்தோடு உறையூரில் அரசனுடைய அரண்மனையை அடைந்ததும், அரசன், அவர்களுடைய பழைய கிழிந்த, அழுக்கேறிய ஆடைகளை அகற்றச் செய்து, புதிய மெல்லிய ஆடைகளை உடுத்தச் செய்து பெண் ஏவலரை அனுப்பி பொற்குவளைகளில் நிறைய நல்ல மதுவை வழங்கச் செய்து அவர்களெல்லாம் தங்களுடைய வழி நடந்த வருத்தத்தைப் போக்கிக் கொள்ளும் பொருட்டுத் தனதரண்மனையில் ஒரு பக்கம் தங்கி ஓய்வெடுக்குமாறு செய்தான். அவர்கள் விழித்தெழுந்ததும் பாணனையும் உடன் வந்த இளையோரையும் அரசன் அன்புடன் வரவேற்று அவர்களுக்குப் பெருவிருந்தளித்தனன்: அதில் ஆட்டின் இறைச்சியும், இனிய உணவுகளும், சமைக்கப்பட்ட காய்களும் நல்லரிசிச் சோறும் வழங்கப்பட்டன. இவ்விருந்தைப் பாணனும் அவனுடைய கூட்டமும் பல நாள் ஏற்றியிருந்தனர்.

“ஒரு நாள் பொருநன் தனது ஊருக்குத் திரும்பும் விருப்பத்தை அரசனிடம் தெரிவிக்க, அரசனுக்கு அவனை விட்டுப் பிரிய மனமில்லாவிடினும் அவனுக்குக் கன்றுகளை உடைய பிடிகளையும் ஆடைகளையும் அணிகலன்களையும் பரிசில்களாக வழங்கினான். இப்பரிசில்கைளப் பெற்றுத் திரும்பிய பொருநன் இவ்வாறு தன் வறுமையை ஒழித்தான். இப்பாணன் மற்றப் பாணனை கரிகாற்சோழனிடம் ஆற்றுப்படுத்துகிறான். அவன் மற்றப் பாணனை கரிகாற் சோழ அரசனிடம் ஆற்றுப்படுத்துகிறான். ஆவன் மற்றப் பொருநனும் அச்சோழனிடத்துச் சென்றால் அவன் புதிய பட்டாடைகளும் அவனுடைய பெண்கள் பொன் அணிகளும் பெறுதல் உறுதி என்றும், அரசன் அவர்களைச் செல்ல விடுத்து அவர்களுக்கு யானைகளைப் பரிசிலாக வழங்குவானென்றும் கூறுகிறான். சோழன் கரிகாலனை இப்பாணன் புகழும் போது, காவிரி பாயும். நாடு முழுவதையும் அவ்வரசன் தனது முழுக்கட்டுப்பாட்டில் வைத்திருந்தானென்றும் அந்நாட்டில் ஒரு சிறிய நிலப்பகுதியும் பெருமளவு விளைச்சலைத் தந்தது என்றும் கூறுகிறான்”[107].

வேந்தர்க்குப் புலவர்கள் கட்டுப்பட்டவர்களாக இல்லை. மாறாக வேந்தர்கள் புலவர்களின் புலமைச் செருக்கு, தம்மை மதியாத போது காட்டிய சினம், இடித்துரைக்கும் கசப்பான அறிவுரை ஆகியவற்றுக்குப் பணிந்து

போயிருக்கின்றனர். கபிலர் இருங்கோவேள் தாம் கூறியவற்றைக் கேட்கவில்லை என்பதற்காக,

“இருபாற் பெயரிய உருகெழு மூதூர்,
கோடி பல அடுக்கிய பொருள் நுமக்கு உதவிய
நீடு நிலை அரையத்துக் கேடும் கேள், இனி:
நுந்தை தாயம் நிறைவுற எய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்!
நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே”[108]

என்று கூறுகிறார். உன்னைப் போல அறிவற்ற ஒருவன் புகழ்மிக்க புலவராகிய கழாத்தலையாரை இகழ்ந்ததன் பயனாக அவன் நாடு கெட்டது என்கிறார். இதில் அறிஞர்கள் கருதுவது போல மந்திர சக்தியோ தெய்வீக ஆற்றலோ புலவர்களுக்குரியதாகப் பேசப்படவில்லை. புலவரை இகழ்தல் என்பது அறமற்ற செயல் என்றே கூறப்பட்டது. அரசர்களை விடப் புலவர்கள் மன்பதையால் மதிக்கப்பட்டவர் என்ற கருத்து இது போன்று பலவிடங்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

புலவர்கள் அன்றைய சமூகக் குரலாக இருந்தனர். மக்களின் குறைகளை அரசர்கள் உணராத காலத்தில் அவர்களைத் தெருட்டி உரிய செயலிடத்து ஊக்குதல் தமக்குரிய கடமை எனக் கருதினர் அக்காலப் புலவர். பாண்டியன் அறிவுடை நம்பியுழைச் சென்று பிசிராந்தையார் மக்கள் செலுத்த வேண்டிய பழஞ்செய்க் கடனை வலிந்து பெற முயல்தல் தவிர்க எனப் பாடியதனான் அறியப் பெறும்.

“புலவர்களின் பாடுபொருள் அரசர்களின் மேம்பாடாக இருந்தது என்பதினும் மக்களின் வாழ்க்கை நலனாகவே இருந்தது என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. இந்த நிலை அவர்களுக்கு அரசரினும் மேம்பட்ட ஒரு மதிப்பை நல்கியுள்ளது. தம் கல்விப் பெருமை, மக்கள் போற்றிய தம் தகுதி ஆகியவற்றின் அடிப்படையில் அவர்கள் அரசர்களிடம் பேசுங்கால் ஒரு மேலாங்கிய ஆளுமை மிக்க குரலில் எக்கருத்தையும் உரைக்கும் வாய்ப்பைப் பெற்றிருந்தனர் என அறியலாம்”[109].

“அரசர்கள் அரசவையில் தம் பெருமைகளையும் சாதனைகளையும் கல்லிலும் சொல்லிலும் பொறிக்கப் புலவர்களையும் சிற்பிகளையும் வைத்திருந்தார்கள். இதனால் அரசர் செய்த செயல்களான குளம் வெட்டுதல், கோயில் கட்டுதல், போர் புரிதல், தானம் வழங்கல், சாலைகள் அமைத்தல் போன்றவை கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் இடம் பெறலாயின”[110].

## 3.24. அரசனின் மனமும் போர்க்குணமும்

போரில் ஈடுபட்ட அரசர்களின் மன உணர்வுகளும் போர்த்திறத்தால் வெற்றியடையும் போது அவர்கள் செய்த செயல் முறைகளும் அரசருடைய போர்க்குணத்தை வெளிப்படுத்துகின்றது.

## 3.25. அரசனின் மானப்பண்பு

சங்ககால அரசர்கள் தம் வாழ்வு, உயிர் இரண்டைக் காட்டிலும் மானத்தையே பெரிதும் போற்றி வந்தனர். எத்தகைய சூழலிலும் தன்னிலையில் தாழாமையும் தாழின் உயிர் வாழாமையுமே மானம் எனப்பட்டது. அத்தகைய மானப்பண்பை அரசர் உயிராகக் கருதி வாழ்ந்துள்ளனர். இத்தகைய மானத்தின் சிறப்பைப் பற்றி வள்ளுவர்,

“மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை

பீடழிய வந்த இடத்து”[111]

என்ற குறளின் மூலம் விளக்கியுள்ளார். ஒருவனுடைய பெருந்தகைமையின் சிறப்புக் கெடும் போது, அவன் உயிரை விடாது உடம்பை மட்டும் காத்து வாழ்தல் மானம் உடையவரின் செயலன்று என்று குறிப்பிடுகின்றார். இக்குறளுக்கு ஏற்ற மானப்பண்போடு அக்கால அரசர் திகழ்ந்துள்ளனர்.

எடுத்துக்காட்டாக, சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் செங்கணானுக்கும் கழுமலத்தை அடுத்த “திருப்போர்ப்புறம்” என்னும் இடத்தில் போர் நிகழ்ந்தது. அதில் இரும்பொறை தோல்வியுற்றதால் செங்கணான் அவனை சிறையிலிட்டான். அப்போது இரும்பொறைக்கு நீர்வேட்கை ஏற்பட்டதால் காவலரிடம் நீர் கேட்டான். அவர்கள் காலம் தாழ்த்தி நீரைத் தந்தனர். அதனால்

அந்நீரை அருந்துவது மானம் உடையவரின் மாண்பாகாது என்பதை உணர்ந்த கணைக்கால் இரும்பொறை,

"தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத் தீத்தணியத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ் உலகத்தானே"[112]

என்ற பாடலைப் பாடி, அதன் மூலம் தன்னுடைய மானத்தின் மேன்மையை விளக்கியுள்ளான். தனக்கு இழிவு நேர்ந்த போதும், தன் நிலையிலிருந்து தாழ்ந்த நிலையை அடைந்த போதும் தன் உயிரை இழக்காது இன்னும் இவ்வுலகில் வாழ்வது தன்னுடைய அரச குலத்திற்கே இழிவு ஏற்படும் என்று கருதினான். அதனால் போரில் வாளால் வெட்டுண்டு மடியாது, சங்கிலியால் கட்டப்பட்ட நாய் போல் விலங்கைப் பூட்டிச் சிறைப்பட்டுள்ள இந்நிலையில், பகைவரால் கொண்டு வரப்பட்ட இந்நீரை அருந்துவதா? என்று எண்ணினான்.

அதனால் பகைவரிடம் நீரை யாசித்துக் கேட்டு அருந்தக் கூடாது என்ற மன உறுதியில்லாமல், என்னுடைய வயிற்றில் ஏற்பட்ட தீயைத் தணிக்க வேண்டி, அந்நீரை யாசித்து உண்ணுவதா? அப்படி உண்ண வேண்டிய நிலையில் உள்ள என் போன்ற இழிந்த பண்புடையவர்களை இனி அரசர்கள் புதல்வர்களாகப் பெறாதிருப்பாராக என்று எண்ணி கணைக்காலிரும்பொறை அந்நீரை அருந்தாமலேயே தன் உயிரை விட்டான். இதன் மூலம் சங்க கால அரசர்கள் போரில் தோல்வியடைந்து, பகையரசர்களால் சிறைபிடிக்கப்பட்ட போது அவ் அவமானத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது தம் உயிரையும் இழந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## 3.26. மானம் கருதி வடக்கிருக்கத் துணிதல்

ஏதேனும் ஒரு காரணத்தால் உயிர் விட எண்ணுபவர் வடதிசை நோக்கி, ஆற்றோரத்தில் அமர்ந்து உணவு உண்ணாதிருந்து உயிர் விடுதலே வடக்கிருத்தல் எனப்படும். இவ்வடக்கிருத்தல் பெரும்பாலும் உயிர் வாழ

விரும்பாத நிலையிலேயே நிகழ்ந்துள்ளது என்பதை சங்கப்பாடல்கள் வழி அறிய முடிகிறது.

ஒருமுறை சேரமான் பெருஞ்சேரலாதனுக்கும் சோழன் கரிகால் பெருவளத்தானுக்கும் 'வெண்ணி' என்ற இடத்தில் போர் நடைபெற்றது. அப்போது கரிகால் பெருவளத்தான் சேரலாதன் மார்பிலே எறிந்த வேல் அவன் உடலுக்குள் ஊடுருவி முதுகு வழியாகச் சென்றது. நேருக்கு நேர் நின்று போர் செய்த மான உணர்வு மிக்க சேரலாதன் தன் உடலில் ஏற்பட்ட அந்த விழுப்புண்ணையும் புறமுதுகிட்டு ஓடியதற்கு அடையாளமான புறப்புண்ணாகக் கருதினான். அதனால் உயிர் வாழ விரும்பாமல் உயிர் நீத்தான் என்பதை கழாத்தலையார் என்னும் புலவர்,

"தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள் வடக்கு இருந்தனன்"[113]

என்ற புறநானூற்றுப் பாடல் மூலம் எடுத்துரைத்துள்ளார். இவற்றைக் கொண்டு சங்க கால அரசர்கள் மானம் இழந்து வாழ்தலினும் சாதலே நன்று எனக் கருதும் தன்மானப் பண்புடையவர்களாகத் திகழ்ந்துள்ளனர் என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது. இந்நிலையையே வள்ளுவர், தமக்கு யாதேனும் இழிவு நேர்ந்தால் உயிர் வாழாத மானம் உடையவரின் புகழை இவ்வுலகத்தார் என்று மறவாது இருப்பார் என்னும் பொருளில்,

"இளியவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு"[114]

என்று கூறியுள்ளார். அவ்வகையில் சங்ககால அரசர்களின் மானப் பண்பாடு இன்றும் புகழ்ச்சிக்குரியதாகவே விளங்கி வருகிறது.

## 3.27. தோற்ற மன்னர்களின் நிலை

போரில் தோற்றவர்கள் இழிவாக நடத்தப்படுவதும் உண்டு. பகைவரின் இரு கைகளை முதுகின் புறத்தே சேர்த்துக் கட்டித் தலையில் நெய்பூசித் தம் நகர மக்கள் காணும்படி அழைத்து வருவர் என்பதை,

“நயன்இல் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபின் கொளீஇ”[115]

என்ற பாடல் உறுதிப்படுத்துகின்றது. மேலும், பகைவர் நாட்டை அழிக்கும் சினத்தின் காரணமாக வரம்பு கடந்து செயல்பட்ட மன்னரையும் சங்கப்புறப் பாடல்களில் காண முடிகின்றது. சான்றாக, சேரன் செங்குட்டுவன் பகைவர் நாட்டை அழித்து அந்நாட்டுப் பெண்களின் கூந்தலை அறுத்துக் கயிறாகத் திரித்து, அக்கயிற்றினால் யானையைப் பூட்டிச் செலுத்தினான் என்பதை,

“வாலிழை கழிந்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தல் முரற்கியால்
குஞ்சர ஒழுகை பூட்டி”[116]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. பெண்களையும் குழந்தைகளையும் நோய்வாய்ப்பட்டோரையும் பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பிவிட்டு அறநெறிப் போர்க்கொள்கையோடு போர் செய்த அரசர்களுள், பெண்களின் கூந்தலை அறுத்து பெண்மையை இழிவுபடுத்தும் அரக்கப் பண்புடைய அரசர்களும் சங்ககாலத்தில் இருந்துள்ளனர் என்பதை இதன் மூலம் உணர முடிகிறது.

## 3.28. பகைவர் நாட்டில் எரியூட்டுதல்

வெற்றி பெற்ற வேந்தர் தம் வெற்றிக்குப் பிறகு பகைவர் நாட்டைத் தீயிட்டுப் பாழாக்குவர். பகைவர் நாடுகளைத் தீயிட்டுக் கொளுத்திய செய்தியினை பதிற்றுப்பத்து மிகுதியாகக் கூறுகின்றது. சான்றாக,

“முனையெரி பரப்பிய துன்னரும் சீற்றமொடு”[117]

போன்ற தொடர் உறுதிப்படுத்துகின்றன. போரில் வெற்றி பெற்றோர் பகைநாட்டை தீக்கு இரையாக்குதலை ‘எரிபரந்தெடுத்தல்’ அல்லது ‘உழுபுல வஞ்சி’ என்றும் உரைப்பர். மேலும், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காற்றைப் போன்று விரைந்து சென்று பகை நாட்டிற்குத் தீமூட்டியதையும் சோலைகளையும் அழித்து பாழ்படுத்தியதால் அந்நாட்டிலுள்ள மக்கள் தம் உறவினரின் நாட்டுக்கு இடம் பெயர்ந்து சென்றனர் என்பதையும் மதுரைக்காஞ்சி வழியே அறிய முடிகிறது.

இந்நிலையையே நந்திக் கலம்பகம்,

> "ஊரும் அரவமும் தாமரைக் காடும் உயர் வளமும்
> தேரும் உடைத்தென்பர் சீறாத நாள் நந்தி சீறியபின்பு
> ஊரும் அரவமும் தாமரைக்காடும் உயர்வளமும்
> தேரும் உடைத்தென்பரே தெவ்வர் வாழும் செழும்பதியே"[118]

என்ற பாடல் வழி உணர்த்துகின்றது. இதன் மூலம் தன் நாட்டையும் தன் நாட்டு மக்களையும் பாதுகாக்கும் ஓர் அரசர் பகையுணர்ச்சி வந்து விட்டால் சிறிதும் மனித நேயமின்றி பிறநாடுகளை முன்னேற முடியாதவாறு அழித்து அந்நாட்டு மக்களை துன்புறுத்தும் இரக்கமற்ற பண்போடும் இருந்துள்ளனர் என்பது இதன் மூலம் புலனாகிறது. இந்நிகழ்வுகள் அரசர்களிடையே இருந்த பகை உணர்ச்சியையும் போராற்றலையும் வெளிப்படுத்துகின்றது.

## 3.29. நீர்நிலை அழித்தல்

வெற்றி பெற்ற வேந்தன் பகைவரின் காவலமைந்த நீர் நிலைகளையும் வயல் வெளிகளையும் பாழ்படுத்திய செய்தியைச் சங்கப்பாடல்கள் வழி அறிய முடிகிறது. உதாரணமாக,

> "ஒளிறு மருப்பின் களிறு அவர
> காப்புடைய கயம்படியினை"[119]

என்று நெட்டிமையாரும்,

> "களிறு படிந்து உண்டெனக் கலங்கிய துறையும்"[120]

என்று கல்லாடனாரும் புறநானூற்றுப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். இவ்வாறு சங்ககால அரசர்கள் போருக்குப் பின் அவர்களால் அழிக்கப்பட்ட பகைவர், விரைவில் நிலைபெற்று தம்மை எதிர்க்கும் ஆற்றலைப் பெற்றுவிடக் கூடாது என்பதில் உறுதியொடு இருந்துள்ளனர். அதனால் தான் பகைவர்களுடைய ஆற்றலைத் தவிர்க்கும் பொருட்டும் தம் வெற்றியை வெளிப்படுத்தும் நோக்கிலும் பகைவர் நாட்டை, எரியூட்டுதல், பாழாக்குதல், நீர்நிலை அழித்தல் போன்ற செயல்களில் ஈடுபட்டுள்ளனர் என்பது தெளிவாகின்றது.

அரசருக்கு ஏற்படும் பல்வேறு சூழ்நிலைகளிலும் நல்வழியை வலியுறுத்தி அறிவுறுத்திய புலவர்களும் அரசருடைய இப்பகைமைச் செயலை கடிந்துரைக்காது போற்றியே பாடியுள்ளனர். போரில் புறமுதுகு காட்டாது போரிடுமாறும் விழுப்புண் ஏற்று வீரமரணம் அடையுமாறும் வீரசுவர்க்கம் அடையுமாறும் அரசரைப் புகழ்ந்து பாடிய புலவர்களும் போரில் பிறநாட்டிற்கு ஏற்படும் அழிவினை அரசனுக்கு சுட்டிக்காட்டி அச்செயலைச் செய்யக்கூடாது என்று அறிவுறுத்தவில்லை. மாறாக அரசர் மேற்கொள்ளும் பகைநாட்டின் அழிவு குறித்து புகழ்ந்தே பாடியுள்ளனர். இதனால் 'யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற பரந்த நோக்குடைய புலவர்களும் தம் நாடு, தம் அரசன், தம் நாட்டு மக்கள் என்ற சுய நலத்தோடு இருந்திருக்கக் கூடுமோ என்ற எண்ணம் தோன்றுகின்றது. ஏனெனில், அப்புலவர்களே பகை அரசன் அழிந்துபடுவதையும் அவனுடைய நாடு அழிந்து சீர்குலைவு அடைவதையும் தன் அரசனுடைய ஆற்றலின் வெற்றியாகக் கருதித் தம் பாடல்களில் பெருமிதத்தோடு அந்நிகழ்வுகளைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

## 3.30. முகக் குறிப்பு அறிந்து ஈதல்

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பதற்கு இவ்வுலகில் வாழ்க்கை நடத்தப் பொருள் மிக அவசியம் என்பது பொருள். பொருள் என்பது தமக்கு வேண்டியவற்றைப் பெறுவதற்குரிய நாணயம், காசு, பணம் என்றழைக்கப்படுவர். இல்லார்க்கு உணவு, உடை, உறையுள் எதுவாயினும் தாமே கிடைப்பது அரிது. அதைப் பெற ஒருவரை, கொடுக்கும் குணம் உடைய வள்ளலை நாடிச் சென்று இரத்தல் எளியாரின் பண்பாகும்.

சிலர் தமது குறையை, தேவையை வாய் விட்டுக் கேட்டுவிடுவர். சிலரோ அப்படிக் கேட்க நாணுவர். இருப்பினும் தமது தேவை நிறைவேற்றப்படவேண்டும் என்ற வேண்டுதல் முகத்தில் தெரியும். அதை உணர்ந்து அத்தேவையை நிறைவேற்றுதல் மனிதநேயம் ஆகும்.

> ''நின்னசை வேட்கையின் இரவலர் வருவர் அது
> முன்னம் முகத்தின் உணர்ந்து அவர்
> இன்மை தீர்த்தல் வண்மை யானே''[121]

என்கிறார் இரும்பிடர்த் தலையார்.

முகக் குறிப்பினைக் கண்டு, அதை உணர்ந்து அவர் தேவையை நிறைவேற்றும் வள்ளல் தன்மை சிலரிடமே இருப்பதால் அத்தகையோர் மனிதரில் சிறந்து விளங்குகின்றனர்.

''முகம் நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி

உற்ற துணர்வாய்ப் பெறின்''[122]

என்ற திருக்குறளும்,

''கொற்றவன் அறிதல் உற்றிடத்து உதவி''[123]

என்ற கொன்றை வேந்தனும் இதை வலியுறுத்துகின்றன.

''ஒளிப்பினு முள்ளம்

படர்ந்ததே கூறு முகம்''[124]

''நோக்கி

முகனறிவார் முன்ன மறிப''[125]

''முன்ன, முகம்போல முன்னுரைப்ப தில்''[126]

இவற்றை எல்லாம் நன்குணர்ந்து வள்ளல்கள் தம்மிடம் வாய்விட்டுக் கேட்க முன்பே அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றி உள்ளனர். பன்னாள் நடந்து மாசுபட்ட உடையுடன் பசியால் மயங்கிவரும் கலைஞரான சிறுபாணரை நல்லியக்கோடன் உபசரித்த விதம்,

''காம்பு சொலித் தன்ன அறுவை உடீஇப்

பாம்பு வெகுண் டன்ன தேறல் நல்கிக்

காவெரி ஊட்டிய கவர்கணைத் தூணிப்

பூவெரி கச்சைப் புகழோன் தன்முன்

பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்

பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்

……………………………………..

ஆனா விருப்பின் தானின் றூட்டி''[127]

என விளக்கப்படுகிறது. வழிநடை வருத்தம் உடையாலும் உணவாலும் நீங்கிய பின்னரே பரிசில் அளித்த பண்பும். நாள்நீட்டிக்காது அன்றே யானை, குதிரை, பாகனுடன் தேர் என அளவின்றி ஈந்த சிறப்பும் புலப்படுத்தப்படுகிறது.

## 3.31. இரவலர் புலவலரை நாடிச் செல்லும் தன்மை

தங்களுக்கு யார் உதவுவார்களோ அவர்களை நாடிச் செல்வது இரவலர் இயல்பு. பழமரத்தைத் தேடிச் செல்லும் பறவைகள் போல எத்தனை தூரமானாலும் கடுமையான வழியானாலும் செல்லக் கூடிய இரவலர்கள் குறித்து,

''பழுமரம் உள்ளிய பறவையின் யானுமவன்

இழுமென் சும்மை இடனுடை வரைப்பின்

நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்

இசையேன் புக்கென் இடும்பை தீர''[128]

''களிகொள் புள்ளினம்

அனையர் வாழியோ இரவலர் அவரைப்

புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் ஆடவர்

உடைமையாகும் அவருடைமை

அவர், இன்மை யாகு மவரின் மையே''[129]

என்பது போல அவர்கள் வறுமையும் வருத்தமும் வள்ளன்மை மிக்க புரவலர்களைக் கண்டதும் விலகிவிடுகின்றன. பெருஞ்செல்வம் உடைய அரசர் ஆயினும் இரவலர் பண்பறிந்து போற்றாதாரிடம் அவர்கள் செல்வதில்லை.

''திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்

அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்

சின்னீர் வினவுநர் மாந்தர் அதுபோல்

அரசர் உழைய ராகவும் புரைதபு

வள்ளியோர்ப் படர்குவர் புலவர்''[130]

என்கிறார் மோசிகீரனார். கடற்கரை ஓரமாகச் செல்வோர், தாகம் தணிக்க கடல்நீரை நாடாமல் குடிநீரை நாடுவது போல அரசர் என்று கருதாமல் வள்ளல்களையே நாடிச் செல்வது இரவலர் இயல்பாக இருந்தது.

## 3.32. பரிசிலர் தம் வரிசை கருதுதல்

பாணர், கூத்தர், பொருநர், விறலியர் ஆகிய கலைஞர்களும் புலவர்களும் புரவலரை நம்பியே வாழ்ந்தனர் எனினும் புலவர்கள் மற்றவர்களிடமிருந்து தம்மை வேறுபடுத்திப் பார்க்க விரும்பியுள்ளனர். கலைத்திறமையை விட புலமைத்திறம் சிறந்தது என்ற பெருமிதம் அவர்களுக்கு இருந்தது. மன்னர்கள் தம்மை நாடிவரும் கலைஞருக்கும் புலவருக்கும் வேற்றுமை பாராட்டாது ஒரே மாதிரியாகப் பரிசுகள் வழங்கியதைப் புலவர்கள் சுட்டிக்காட்டி அதை மாற்றிக் கொள்ள அறிவுறுத்தியுள்ளனர். பரிசில் பெற்றுத்தான் வாழவேண்டும் என்ற நிலை இருந்தாலும் வரிசை அறிந்து வழங்கினால் தான் தங்களுக்குச் சிறப்பு என எடுத்துக்காட்டியுள்ளனர்.

"வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை"[131]

என்பது கோவூர் கிழார் கருத்து,

"ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை அறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே"[132]

என்று மலைமான் திருமுடிக்காரிக்குக் கபிலர் இதுகுறித்து அறிவுறுத்தி உள்ளார்.

"வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்"[133]

“தத்தம்

வரிசையான் இன்புறூஉம் மேல்”[134]

என்னும் சான்றுகள் புரவலர்களும் வரிசை அறிந்து நல்கிச் சிறப்பித்த தன்மையைப் புலப்படுத்துகின்றன.

## 3.33. இரவலரின் இளைத்த மேனி

உண்ண உணவு இல்லாத வறியநிலையை உடல் வெளிப்படுத்தும் தன்மையைச் சங்க இலக்கியங்கள் பலவாறு குறிப்பிட்டுள்ளன. பாணர் முதலிய கலைஞர்கள் கூட்டமாக வாழும் இயல்பினர். ஓரிடத்தில் இருந்து மற்றோரிடம் செல்லும் பொழுதும் சுற்றத்தார் அனைவரையும் அழைத்துச் சென்றிருக்கின்றனர். சாப்பிட்டுப் பல நாட்கள் ஆனதன் வெளிப்பாடு உடலிலும் கண்களிலும் தெரிகின்றது. பசிக்காக உணவுண்பது மறந்து போய், பசி அவர்களைத் தின்னும் அளவிற்கு வறுமை வாட்டிய நிலையை அவர்களைக் காண்போர், அறிந்து கொண்டு அவர்களுக்கு உணவளிக்கின்றனர்.

ஒருவேளை உணவு கிடைப்பினும் பலவேளையும் பலநாட்களும் பசியின்றி வாழும் வகையில் பொருள் பெறவேண்டும் என்பதற்காகப் பல ஊர்களைக் கடந்து, காடு மலை என்றும் பாராமல் நடந்து செல்கின்றனர். வறுமை நிலையை எப்பாடுபட்டேனும் மாற்ற வேண்டும் என்ற எண்ணம் அவர்களை வழிநடத்துகிறது. தங்கள் உடல் இளைத்தாலும் ஊக்கத்துடன் வள்ளலை நாடிச் சென்றதை,

“இசையோன் புக்கென் இடும்பை தீர

எய்த்த மெய்யேன் எய்யே னாகி”[135]

என்று பொருநராற்றுப்படை புகல்கின்றது. பெரும்பாணாற்றுப் படை பாணனும் இளைத்த யாக்கையனாய் இருக்கிறான.

“பழுமரம் தேரும் பறவை போலக்

கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்

புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண”[136]

எய்ப்பு என்பது இளைத்த தன்மையைக் குறிக்கும். தகுந்த உணவின்றேல் உடல் இளைப்பது இயல்பு. புல்லென் யாக்கை என்பதும் உடல் இளைப்பைக் குறித்து வந்தது. பசியால் அழுகின்ற குழந்தைகளும் சுற்றத்தினரும் சூழ்ந்து வர, பெரும்பாணன் பொலிவு இழந்த உடம்பொடு ஓரிடத்திலிருந்து உணவு கிடைக்கும் வேறு இடத்தைத் தேடி அலைகின்ற கால்களை உடையவனாய் இருக்கிறான்.

வறுமையை நீக்குவார் யாரெனத் தேடிச் செல்லும் பொழுது அவருக்கு வள்ளல் இருக்கும் இடத்தை அறிமுகப்படுத்துவோரை ஆற்றுப்படுத்துவோர் என்பர். அத்தகைய ஆற்றுப்படுத்தும் பணியை வறுமையே ஏற்றுக் கொண்டு சிறுபாணனை ஓரிடத்தில் தங்கவிடாது நடக்கச் செய்கிறது.

“இயங்கா வையத்து நள்ளியோர் நசைஇத்

துனிகூர் எவ்வமொடு துயர்ஆற்றுப் படுப்ப

முனிவிகந் திருந்த முதுவாய் இரவல”[137]

உலக வாழ்க்கையை வெறுத்துவிடும்படி செய்யும் வலிம உடைய வறுமை, மாபெரும் துன்பத்தை தருவதால் ‘துனிகூர் எவ்வம்’ எனப்பட்டது. இனி யாரேனும் வள்ளலைத் தேடிச் சென்றே ஆகவேண்டும் என்ற நிலையில் துயரம் தரும் வறுமை சிறுபாணனை ஆற்றுப்படுத்துகின்றது.

சத்து அற்ற உணவு ஆயினும் அதுவும் கிடைக்கப் பெறாமல் கடும்பசி வாட்டியதால் உடலில் எலும்புகள் வெளித்தெரியும் சுற்றத்தினருடன் பாணன் நொந்து போய் இருக்கிறான்.

“உடும்பு உரித்து அன்ன என்பெழு மருங்கின்

கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது

சில்செவித் தாகிய கேள்வி நொந்து நொற்து

ஈங்கெவன் செய்தியோ பாண!”[138]

என்று கோவூர் கிழார் பாணனிடம் வினவுகிறார். சுற்றத்தினர் பசியால் துன்புறுவதை ஆலந்தூர் கிழாரும் கண்டு,

“பூட்கை இல்லோன் யாக்கை போலப்

பெரும்புல் லென்ற விரும்பேர் ஒக்கலை”[139]

என்று கூறி வருந்துகிறார்.

பூட்கை என்பது கொள்கை, நல்ல கொள்கையை மேற்கொள்ளாதவன் யாக்கை வாடியிருக்கும் என்பதை இவ்வரிகள் உணர்த்துகின்றன. பாணருடைய சுற்றம் ‘ஒக்கல்’ என்றும் ‘கடும்பு’ என்றும் கூறப்படுகிறது. அவர்கள் எண்ணிக்கையில் அதிகம் இருந்ததால் ‘இரும்பேர் ஒக்கல்’ எனப்பட்டனர். இரவலராகச் செல்லும் சுற்றத்தினர் அனைவருமே பசியால், களைப்பால், திரங்கிப் போய் உள்ளனர். இவர்களைக் காணும் யாவருமே முதலில் வயிற்றுப் பசி நீக்குதலையே விரும்பி விருந்தோம்பல் செய்தனர்.

## 3.34. சுற்றத்தார் பாரமாகக் கருத வைக்கும் வறுமை

சுற்றத்தாரைப் பாதுகாத்தல் எளியவர்க்கு ஒரு பாரமாக இருந்ததும் அப்படிப்பட்ட பாரமும் பசியும் தமக்கு இல்லை என்று ஒரு புலவர் கூறுவதும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது.

“கடாஅ யானைக் கலிமான் பேக

பசித்தும் வாரேம் பாரமும் இலமே”[140]

தற்காலத்தில் போதிய வருமானம் இன்றி குடும்பத்தினரின் தேவைகளைப் புரிந்து கொண்டு இருந்தாலும் அதை நிறைவேற்ற இயலாதவர்கள் குடும்பத்தைப் பாரம் என்று கருதுவதைக் குடும்பப் பாரத்தைச் சுமந்து கொண்டு இருக்கிறேன் என்று பேச்சு வழக்கில் குறிப்பிடுவர். பசியும் பிணியும் பகையும் இல்லாத நாடே சிறந்தது.

“உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்

சேரா தியல்வது நாடு”[141]

என்பதால் அவை மூன்றும் நீங்க வேண்டும் எனறே சான்றோர் விரும்பினர்.

“பசியும் பிணியும் பகையும் நீங்கி

வசியும் வளனும் சுரக்க எனவாழ்த்தி”[142]

என்பதில் பசியே பிணியாகவும் பகையாகவும் வறுமையாளர்க்குத் தென்பட்டது. பசிப்பிணிக்கு மருத்துவம் உணவு என்பது போல பசிப்பகையைப் போக்கவும் உணவே ஆயுதமாகவும் அடைக்கலமாகவும் கருதப்பட்டது.

## 3.35. புலவர் தோழன்

புலவனாய்த் திகழ்ந்த இவன் இயல்பான உணர்வோடு புலவர்களுடன் அன்புடன் பழகி வந்தார். புல்லாற்றூர், எயிற்றியனார், பொத்தியார், கண்ணகனார், கருவூர்ப் பெருஞ்சதுகத்துப் பூதநாதனார் இவர்களுடன் நட்புக் கொண்டதுடன் தானும் நட்புடன் இருந்தார். இந்நால்வருள் பொத்தியார் உடனான நட்பினை மிகவும் போற்றியுள்ளார் என்பதனை பொத்தியாண்ட பெருஞ்சோழன் என வரும் பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகத்தால் அறியலாம்.

“கோழி யோனே கோப்பெருஞ்சோழன்
பொத்தி னண்பிற் பொத்தியொடு கெடுஇ
வாயார் பெருநகை வைகலு நக்கே”[143]

என்னும் பாடல்வரிகள் கோப்பெருஞ்சோழன் புலவர்களும் நட்புக் கொண்டிருந்தமையை அறிய முடிகிறது.

“பகைவரை நோக்கிக் கூறுவார் போல, அதியமான் நெடுமானஞ்சியின் குணங்களை இவர் பாராட்டிக் கூறியிருக்கும் பகுதிகளும் அவனால் தூதனுப்பப்பட்டுச் சென்ற பொழுது தன் மேம்பாட்டைப் புலப்படுத்தற் பொருட்டுத் தொண்டைமான் தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டக் கண்டு அடிப்படைக் கலங்களைப் புகழ்வார் போல அதியமானது போர்த்திறத்தை வெளிப்படுத்தியிருக்கும் பகுதியும் மிக்க விம்மிதத்தை விளைவிக்கும். தியமான் கோவிலூர் எறிந்ததனைப் பரணர் பாடியதையும் மூவேந்தரும் சேனைகளுடன் பாரியை வெல்லக் கருதி அவன் நகரைச் சூழ்ந்து புகல் போக்கின்றித் தடுத்த போது, பறவைகளால் நெற்கதிரைப் புறத்திலிருந்து வருவித்து உன் நகரத்தாரைப் பசியால் வருந்தாதபடிப் பாதுகாத்தளித்த கபிலர் செய்தியையும் புலப்படுத்தியிருத்தல் புலவரிடத்து இவருக்குள்ள பேரன்பை விளக்குகின்றது”[144].

இக்குறிப்பிலிருந்து புலவர் தம் உள்ளம் விழைந்தன யாவற்றையும் பாடினாரல்லர் என்பது விளங்கும். அவர்கள் பாட்டின் மையப்பொருள் சமுதாய

நலனாகவும் மனித நேயமாகவும் இருந்தமை அறியப்படும் சமுதாயம் இதற்கீடாகப் புலவர்களைப் பெரிதும் மதித்திருக்கின்றது.

"அரசனை இறைவன் என்ற சொல்லாற் குறித்தமை அரசனைத் தெய்வமாகவே கருதிய நிலையைக் காட்டும். அரசனது குடையைக் கண்டு தொழுதல் மக்களின் வழக்கம் என்பது அறியப் பெறுகின்றது. முழு நிலாவைத் தொழுதல் வழக்கமில்லையெனினும் அரசனது குடை போன்றிருந்தமையின் அது தொழப்பட்டது என்பர் மருத்துவன் தாமோதரனார்"[145].

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யானுயி ரென்ப தறிகை
வேள்மிகு துணை வேந்தர்க்குக் கடனே"[146]

என்ற கூற்றில் எல்லாம் அடங்கிவிடக் காணலாம்.

## 3.35. புலவர் / பாணர் சமூக ஒருங்கிணைப்பு

"இனக்குழவினரின் பாரம்பரியமான வாழ்க்கை முறை சடங்குகள், விலக்குகள், குலக்குறிச் சின்னங்கள், பலிகள், தொல்சமய நம்பிக்கைகள் போன்றனவற்றைச் சிதைத்துவிட்டுப் புதிய வாழ்க்கை முறையை வாழ வேண்டிய நெருக்கடியை ஏற்படுத்தின மாறிவரும் அரசியல் நிலைமைகள். இதனால் தான் மனிதர்களிடையே இயல்பூக்கமாகப் பொதிந்துள்ள காதலும் சண்டையும் சங்க இலக்கியத்தில் முதன்மைப்படுத்தப்பட்டன. எதிர் இனக்குழுவைப் போரில் வென்று, அக்குழுவினரின் நிலப்பரப்பைத் தனது நிலத்துடன் இணைக்கும் போது, பிரச்சனைகள் தோன்றுகின்றன. இத்தகு சூழலில் பாணர்கள், புலவர்கள் மூலம் நடைபெற்ற சமூக ஒருங்கிணைப்புகள் முக்கியமானவை"[147].

## 3.36. ஈதலும் ஏற்றலும் அறவியல் நோக்கு

'அறம்' என்னும் சொல் ஆழ்ந்தகன்ற பொருளையுடையது. 'அறம்' என்னும் சொல்லுக்குரிய பல்வேறு பொருள்களில் ஒன்றாக 'ஈதல்' அமைந்துள்ளது. சங்க இலக்கியங்களில் காணப்படும் ஈதல் ஏற்றல் செய்திகளில் அறவியல் நோக்கு ஊடாடியுள்ளதை உணர முடிகிறது.

சங்க காலத்தைப் புலப்படுத்தும் சங்க இலக்கியங்களின் வாயிலாகச் சங்க காலச் சமுதயாம் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று முதற்பொருளைக் கொண்டதோர் சமுதாயமாக இருந்ததை அறிய முடிகிறது. இம்மூன்று முதற்பொருள்களில் அறமே முதலில் கருதப்படுகிறது.

''சங்க இலக்கியம் தமிழரின் வாழ்க்கை நோக்கங்களை உணர்த்தும் மிகத் தெளிவான கண்ணாடி. தொல்காப்பியம், தமிழரின் வலதுகண் என்றால் சங்க இலக்கியம் தமிழரின் இடது கண்''[148] என்பார் ச.வே.சுப்பிரமணியம்.

சங்கப்பாடல்களில் ஈகையானது தமக்கென வாழாப் பிறர்க்கென வாழுதல், பகுத்து வழங்குதல், புகழ்பட வாழ்தல், உலக நிலையாமை உணர்வு என்னும் மக்கட்பண்புகளில் காணப்படுகின்றன.

சங்க இலக்கிய பொருட்களஞ்சியம்,

“அறம், அறக்கடவுள், அறவோர், அறனிலாதோர் என்னும் தலைப்புகளில்ச சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள அறம் குறித்த செய்திகளைத் தொகுத்துரைக்கிறது”[149].

சங்கச் சமுதாயத்தில் அறமென்பது,

“ஒழுக்கவிதிகள், இரக்கம், ஒப்புரவு, ஈகை முதலிய மனிதப் பண்புகள். குடும், சமூகம், அரசு ஆகிய நிறுவனங்கள் கட்டுப்பாடு குலையாதிருப்பதற்குரிய பழக்க வழக்கங்கள் ஆகிய மூன்றையும் அறமெனக் குறித்துள்ளனர்”[150] என்று கு.வெ.பாலசுப்பிரமணியம் விளக்குகிறார்.

“சங்கச் சமுதாயம் ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, மானம், பெருமை, ஈகை, விருந்தோம்பல் போன்ற எல்லாப் பண்புகளையும் கொண்டதாய்த் திகழ்கின்றது”[151] என்பர் கு.வெ.பாலசுப்பிரமணியம்.

“இரண்டு பேருக்காக வாழத் தொடங்கியவர்கள் உலகத்து எல்லோருக்கமாக வாழ வேண்டும் என்னும் கோட்பாட்டை இதன்மூலம் வாழ்க்கை இலக்கணமாக வகுத்துத் தருகிறது தொல்காப்பியம்”[152] என்பர் சாலினி இளந்திரையன்.

## 3.36. பிறருக்காக வாழுதல்

சங்க காலத்தில் மக்கள் தமக்கென வாழாப் பிறர்க்கென வாழும் பண்பினராய்த் திகழ்ந்தனர். “இந்திரர் அமிழ்தம் கிடைப்பதாயினும் அதனைத் தாம் மட்டும் உண்ணாமல் பிறருக்கும் அளிப்பர். அவர்கள் யாரையும் வெறுக்க மாட்டார்கள். அஞ்சத் தகுவனவற்றிற்கு அஞ்சுவார்கள். புகழுக்குரிய செயலாயின் அதற்காகத் தம் உயிரையும் கொடுப்பர். பழியாயின் உலகம் முழுவதையும் பெறுவதாயினும் அதை விரும்ப மாட்டார்கள். மனக் கவலையும் கொள்ள மாட்டார்கள். இத்தகைய பிறர் நலம் பேணும் இயல்புடையவர்களால் தான் இவ்வுலகம் உள்ளது”[153] எனப் புறநானூறு கூறுகிறது. பிறர் நலன் விழையும் பண்பானது ஈதலோடு தொடர்புடையதாய் அமைகிறது.

## 3.37. பகுத்து வழங்குதல்

“செல்வத்தைத் தேடி வருவதே தாமும் தம் உறவினரும் தமக்கு மிக வேண்டியவர்களும் கூடிச் சேர்ந்து அனுபவித்து மகிழத்தான் என்று இலக்கணம் வகுத்துக் கொண்டவர்கள் பழந்தமிழர்கள். அவர்களுடைய வாழ்வில் உழைத்துத் தேடிய செல்வம், பிறரை வென்று திரட்டிய திறைச் செல்வம், பிறரிடம் பரிசிலாகப் பெற்று வந்த செல்வம் என்கிற வேறுபாடு இல்லாமல், கிடைத்த செல்வத்தை ஒவ்வொருவரும் பிறரோடு பகிர்ந்து கொள்ளும் நெறி காணப்படுகிறது”[154] என்பர் சாலினி இளந்திரையன்.

எத்தகைய அரிய பொருளாக இருந்தாலும் அதனைத் தனக்கெனக் கொள்ளாமல் பிறர்க்கு வழங்குதல் என்பது அரிய செயலாகும். சங்க காலத்தில் அனைவரும் தங்களிடம் இருக்கும் பொருள்களைப் பகுத்துக் கொடுக்கும் பண்பினராய் விளங்கினர். இதனை,

“…… ……….. ………….
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
பகுத்தூண் தொகுத்த ஆண்மை
பிறர்க்கென வாழ்த்தி நீயாகன் மாறே”[155]

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றது.

வள்ளுவரும் “வறியவரின் கடும் பசியைத் தீர்ப்பதே பொருள் பெற்ற ஒருவரின் கடமையாகும். தான் பெற்ற உணவைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல் பலரோடு பகுத்துண்ணும் பழக்கமுடையவராய் இருத்தல் வேண்டும்”[156] என்றுரைக்கிறார். மேலும், பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் என்ற குறளின் வாயிலாகவும் பகிர்ந்து வாழும் அறத்தை வள்ளுவர் எடுத்துரைக்கிறார். தாம் பெற்றதைத் தாமே நுகராமல் பகிர்ந்தளிக்கும் செயல் ஈகையின்பாற் பட்டதாகும்.

## 3.38. புகழ்பட வாழ்தல்

சங்க காலத்து மக்கள் புகழை விரும்பும் பண்பினராய்த் திகழ்ந்தனர். ஒரு செயலினால் புகழ் கிடைக்குமாயின் தம் உயிரைக் கொடுத்தாவது அப்புகழை அடைவதில் விருப்பமுடையவராய்த் திகழ்ந்தனர். உயிரை வழங்க முன் வந்தவர்கட்குப் பொருளைக் கொடுத்தல் என்பது எளிய செயலாகு. ஆதலால் தன்னிடம் உள்ள செல்வங்களைப் பலருக்கும் கொடுத்தனர். அதுமட்டுமன்றி, முல்லைக்குத் தேர், மயிலுக்குப் போர்வை என்று அ஼ஃறிணைக்கும் வழங்கும் ஈகையாளர்களாய்த் திகழ்ந்தனர்.

புகழ்பட வாழ்தல் என்னும் பண்பிற்கு ஈதலே முதன்மைக் காரணமாய் அமைவதால் இப்பண்பு ஈகையோடு தொடர்புடையதாய் அமைகிறது.

உலக நிலையாமை உணர்வு

“பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே”[157]

எனத் தொல்காப்பியர் காஞ்சித் திணை நூற்பாவில் நிலையாமையை வற்புறுத்திக் கூறுகிறார்.

“உலக வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கின்ற எந்த மனிதக் கூட்டமும் மரணத்திற்குப் பின்னும் மனிதன் இங்கே வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் சிந்திக்கிறது. அதன் விளைவாகவே, உடல் அழியக் கூடியது; ஆன்மா அழிவில்லாதது; மனிதன் உயிர் ஒரு பிறவியோடு முடிவதில்லை. அது பல பிறவிகள் எடுத்துத் தொடர்கின்றது என்பன போன்ற விருப்பச் சிந்தனைகள் வளர்ந்துள்ளன”[158] என்பார் சாலினி இளந்திரையன்.

எனவே, மன்னர்களைப் பலநிலைகளில் இடித்துரைத்த புலவர்களும் புலமைத் தொழிலோரும் உளர். நாட்டுவளம், குடிகளைக் காத்தல், ஆட்சி முறைக்கு ஆலோசனை வழங்கல், புற ஒழுக்கத்தை இடித்துரைத்தல் முதலான பலநிலைகளில் புலமைத் தொழிலோர் அரசனிடம் உரையாடியுள்ளனர். முகக்குறிப்பு அறிந்து ஈயும் புரவலர்களைக் குறித்துப் பலவாறாகப் புகழ்ந்து போற்றியுள்ளனர். பரிசிலர் தம்மை வரிசை கருதியிருக்கின்றனர். அவ்வரிசை உணர்ந்து புரவலர் பரிசளிக்க வேண்டும் என்று எதிர்பார்த்துள்ளனர். அவ்வரிசை அறியாத ஈயலில் முரண்பட்டு மறுத்திருக்கின்றனர்.

## தொகுப்புரை

- அரசர்களிடம் புலமைத் தொழில் புரிவோர் கொண்டிருந்த உறவு தனித்துவமானது. அரசர்களின் வரிவிதிப்பை முறைப்படுத்துதல், நீர் வளம் பற்றி அறிவுறுத்துதல், ஒற்றுமையின் சிறப்பினை எடுத்துரைத்தல், அரசர்தம் மனைவியை அவர் பிரிந்திருப்பதைக் கடிந்துரைத்தல், கொலைக்குற்றம் புரியாமல் தடுத்தல் ஆகிய செயல்பாடுகளில் ஈடுபட்டனர்.

- அதிக வரி வசூலித்த பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரி கொள்ளும் முறைமை குறித்தும் அவ்வாறு முறைமையின்றி வரிகொள்ளும்போது ஏற்படும் இழப்புகள் குறித்தும் பிசிராந்தையார் அறிவுறுத்துகிறார். அரசனது ஆட்சிக்கு எதிராகக் குடிமக்கள் திரண்டுவிடக்கூடாது என்ற எண்ணத்திலேயே இவ்வறிவுரைகளை அவர்கள் வழங்கியிருத்தல் கூடும்.

- அரசன் தனது அரசு நிர்வாகத்தில் முதன்மையாகக் கொள்ளவேண்டியது நீர்வளத்தைப் பெருக்குதலாகும். இதனைச் சுட்டிக்காட்டிப் பாடல்களைப் புனைந்த பரிசிலர்கள் உள்ளர். அரசர்களின் குடிப்பெருமையை அவர்களுக்கு எடுத்துக்காட்டி, சிறுமைகளிலிருந்து அவர்களைத் தடுத்தாட்கொள்ளும் பெரும்பணியையும் புலமைத் தொழிலினர் செய்துள்ளனர். ஒற்றுமையின் சிறப்பை எடுத்துக்காட்டி, ஒரு குடிக்குள் கொள்ளும் பகை இழுக்கானது என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளனர். பேகன் தனது மனைவி கண்ணகியைப் பிரிந்திருந்தமை கண்டு அவனது பிரிவினைத் தவிர்க்குமாறு சுட்டிக்காட்டியுள்ளனர் புலவர்கள். மலையமானின் குழந்தைகளைக் கொல்ல நினைத்த கிள்ளி வளவனின் பாதகச் செயலை உணர்த்தி, அதிலிருந்து குழந்தைகளை மீட்டெடுத்த புலவர்கள் உளர்.

- மன்னர்களின் அரசும் அரசு எந்திரமும் ஆட்சியும் எதை நோக்கி அமைய வேண்டும் என்பதையும் புலமைத் தொழில் புரிவோர் சுட்டிக்காட்டியுள்ளனர். புகழ் ஈட்டுதலின் இன்றியமையாமை குறித்தும் எடுத்துரைத்துள்ளனர். மன்னர்களுக்கு அன்பின் ஆழத்தையும் அருளின்

ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தி, அறநெறியில் பற்றுக் கொள்ளச் செய்துள்ளனர்.

- அரசு என்பது சமூகத்தின் இன்றியமையாத அலகு என்பதையும் அரசு எந்திரம் தனக்குரிய செயல்பாடுகளைத் தெளிவாக வகுத்துக்கொண்டு செயல்பட வேண்டும் என்றும் புலமைத் தொழில் புரிவோர் வற்புறுத்தியுள்ளனர்.

- முழுமையான அதிகாரம் பெற்றவர்கள் சங்க காலத்து அரசர்கள். ஆனாலும் அவர்கள் புலவர்களையும் கலைஞர்களையும் மதித்து அவர்தம் கருத்துக்களுக்குச் செவிசாய்த்துள்ளனர். நல் குணங்களைக் கொண்டவர்களாகவும் அவர்கள் வெளிப்பட்டுள்ளனர். காட்சிக்கு எளியவர்களாகவும், சுற்றம் காத்தவர்களாகவும், மக்களைத் தாய் போன்று காப்பவர்களாகவும், மக்களின் நலத்தை நாடுபவர்களாகவும் இருந்துள்ளனர்.

- தன்னப் புகழும் இரவலர்களின் வறுமையைப் போக்குவதோடு மட்டுமின்றித் தனது அரசுக்கு வருவாயைக் கொடுக்கும் மக்களின் வறுமையைப் போக்கும் செயலிலும் அரசர்கள் ஈடுபட்டுள்ளனர். வேளாண்மையைப் பெருக்க உதவுதல், பாதுகாப்பளித்தல் ஆகியன அதன் வெளிப்பாடுகள் ஆகும்.

- அரசர்கள் ஈகைத்திறன் உடையவர்களா இருந்தமையைப் புலமைத் தொழிலோர் எடுத்துக்காட்டியுள்ளனர். கனவிலும் பெறமுடியாத பொருட்செல்வத்தினை வள்ளல்கள் வழங்கியுள்ளனர்.

- ஈதல், பெறுதல் குறித்த சிந்தனை சங்கச் சமூகத்தில் தெளிவானதாக இருந்துள்ளமையைப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. புலமைத் தொழில் புரிவோர், புரவலர் குறித்த இச்சிந்தனை, பொதுநிலைச் சமூகத்தில் பரவலான தாக்கம் பெற்றிருந்தமை புலப்படுகிறது.

- புலவருக்குப் புரவலர்கள் அளித்த பரிசில்கள் பல திறத்தனவாக உள்ளன. அதாவது, எண் அளவில் பொன் கொடுத்தல், ஊர்களை அளித்தல், அரச வருவாயில் பங்கு கொடுத்தல், ஆட்சி உரிமையில் இடமளித்தல், குன்றேறி நின்று கண்ணிற்கண்ட பரப்பை எல்லாம் கொடுத்தல், ஆட்சியை அளித்தல், புலவருக்காக வேள்வி செய்தல், தன் மகனையே புலவருக்குத் தொல் கடனாற்றப் பணித்தல் முதலாகப் பல பரிசில்கள் புலமைத் தொழில் புரிவோருக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.
- புலவருக்கும் அரசருக்குமான நட்பு செம்மாந்த நிலையில் அமைந்துள்ளது. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு, ஔவை - அதியமான் நட்பு, கபிலர் - பாரி நட்பு முதலானவை எடுத்துக்காட்டுகள் ஆகும்.
- புலவர்கள் பெரிதளவும் அரசர்களின் பரிசில்களை எதிர்நோக்கிப் பாடினர். ஆனாலும் தன் மதிப்பும் கொண்டிலங்கினர். நேரில் காணாது பரிசிலை அனுப்பிய அதிகமானிடம் புலவர் பெருஞ்சித்திரனார் முரண்பட்டார். 'வாணிகப் பரிசிலன் அல்லேன்' என்று தன்னைப் பிரகடனம் செய்த புலவர்களும் உளர்.
- மன்னர்களைப் பலநிலைகளில் இடித்துரைத்த புலவர்களும் புலமைத் தொழிலோரும் உளர். நாட்டுவளம், குடிகளைக் காத்தல், ஆட்சி முறைக்கு ஆலோசனை வழங்கல், புற ஒழுக்கத்தை இடித்துரைத்தல் முதலான பலநிலைகளில் புலமைத் தொழிலோர் அரசனிடம் உரையாடியுள்ளனர்.
- முகக்குறிப்பு அறிந்து ஈயும் புரவலர்களைக் குறித்துப் பலவாறாகப் புகழ்ந்து போற்றியுள்ளனர். பரிசிலர் தம்மை வரிசை கருதியிருக்கின்றனர். அவ்வரிசை உணர்ந்து புரவலர் பரிசளிக்க வேண்டும் என்று எதிர்பார்த்துள்ளனர். அவ்வரிசை அறியாத ஈயலில் முரண்பட்டு மறுத்திருக்கின்றனர்.

## சான்றெண் விளக்கம்

1. மு.வரதராசன், தமிழ் நெஞ்சம், ப.102
2. தே.ப.பெருமாள், தமிழ்ச்சுவை இன்பம், ப.28
3. புறம்.184:1-11
4. சாமி சிதம்பரனார், பழந்தமிழர் அரசியல், ப.77
5. குறள்.20
6. புறம்.18:1-12
7. மேலது.45:1-9
8. மேலது.367:14-18
9. மேலது.46:4-11
10. மேலது.46:1-8
11. மேலது.29: 25-26
12. பாரதிதாசன், தொகுதி -1. பத்திரிகை.ப.151
13. பாரதியார், தேசிய கீதங்கள், பாரத சமுதாயம், ப.135
14. மேலது. தோத்திரப் பாடல்கள், சத்ரபதி சிவாஜி, ப.155
15. மேலது, பல்வகைப்பாடல்கள், முரசு
16. அப்துல்ரகுமான், கம்பனின் அரசியல் கோட்பாடு, ப.12
17. முத்துச்சிதம்பரம், தமிழியல், ப.15
18. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு.ப.195
19. மு.வரதராசன், திருக்குறள்.385
20. புறம்.54:3-4
21. பெரும்.433-434
22. நாலடி.221
23. புறம்.157:1-2,13
24. பதிற்.6வது பதிகம், பா.4
25. புறம்.5:7
26. புறம்.186:1-4
27. மணி. உலக.அறவி.புக்.கா.7:8-12
28. மு.வரதராசன், திருக்குறள் 557
29. புறம்.20: 7-9
30. மணி.இந்திர காதை.1:34
31. சிறு.:65

32. குறள்.104

33. புறம்.159:23-25

34. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.) குறுந்.ப.430

35. பொருந.பா.136-140

36. தொல்.சொல்.நூற்பா.446

37. தொல்.சொல்.நூற்பா.447

38. தொல்.சொல்.நூற்பா.445

39. புறம்.204:1-4

40. குறள். 1052

41. புறம்.72:18

42. புறம்.180:1-2

43. புறம்.205

44. புறம்.207:4-5

45. புறம்.206:11-13

46. புறம்.387:12-13

47. கோ.கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப.78

48. உ.வே.சாமிநாதையர், சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப.17

49. மு.வரதராசன், தமிழ் நெஞ்சம், ப.41-42

50. ஜி.சுப்பிரமணியம் பிள்ளை, தமிழ் உள்ளம், ப.67

51. ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.30

52. மு.வ.உரை, குறள்.782

53. புறம்.50

54. மு.வ.உரை, குறள்.785

55. புறம்.215 :7-9

56. புறம்.216 :12

57. புறம்.217:7-9

58. மு.வ.உரை. குறள்.787

59. புறம்.91:8-11

60. மு.வ.உரை.குறள்.74

61. புறம்.200:12-15

62. மேலது.208

63. மேலது.207

64. மேலது.18:18:23

65. மேலது.35:27-34
66. மேலது.5:5-8
67. மேலது.186
68. மேலது.57: 5-11
69. மேலது.44:1-12
70. மேலது.145:4-10
71. மேலது.146:3-11
72. மேலது.147
73. மேலது.208
74. மேலது.207:6-11
75. மேலது.559
76. மேலது. 560
77. மேலது.117:6-7
78. கலி.118:2-3
79. புறம்.5:5-7
80. மலைபடு.596
81. புறம்.75:4
82. மேலது.260:9
83. பட்.125
84. பெரும்பாண்.81
85. புறம்.184:5-11
86. மேலது.35:32-34
87. மணி.23:104
88. கலி.4:12
89. குறள்.558
90. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.208
91. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.23
92. புறம்.57:5-7
93. மேலது.16:13-17
94. திரி. : 30
95. மேலது : 41:1
96. மேலது :68:1

97. பதிற்.22

98. மு.அருணாசலம், இலக்கியக் கொள்கை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ப.94

99. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.27

100. முனைவர் சூரிய நாராயணன், தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள், பக்.184,185

101. புறம்.72 :13-16

102. மேலது 53 :11-12

103. பொருந.166

104. புறம்.54 :2-4

105. பொருந.150-151

106. பொருந.79-96

107. முனைவர் சூரிய நாராயணன், தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள், ப.183 – 184

108. புறம்.202:6-13

109. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, ப.161 – 163

110. மௌனகுரு.சி, பண்டைத்தமிழர் வரலாறும் இலக்கியமும், ப.17

111. மு.வரதராசன், திருக்குறள், 968

112. புறம்.74:3-7

113. புறம்.65 : 9-11

114. மு.வரதராசன், திருக்கறள் 970

115. பதிற்.2-ஆம் பத்து பதிகம், 8-9

116. பதிற்.5-ஆம் பத்து பதிகம், 15-17

117. பதிற்.15:2

118. நந்தி.4

119. புறம்.15:9-10

120. புறம்.23:2

121. புறம்.3:24-26

122. குறள். 708

123. கொன்றை வேந்தன் : 23

124. பழ. :144

125. பழ. : 145

126. நான்மணி. : 47

127. சிறுபாண்.:236-245

128. பொருந. : 64-67

129. புறம்.199:3-7

130. புறம்.154:1-5

131. புறம்.47:6

132. மேலது.121

133. சிறுபாண்.217

134. நாண்மணி.:67

135. பொருந.:67-68

136. பெரும்பாண்:20-22

137. சிறுபாண்.38-40

138. புறம்.68:1-4

139. புறம்.69:5-6

140. புறம்.145:3-4

141. குறள். : 734

142. மணி.1:70-71

143. புறம்.212

144. புறநானூறு, உ.வே.சா. பதிப்பு, முன்னுரை, ப.31

145. புறம்.60

146. புறம்.186

147. ந.முருகேசபாண்டியன், மறுவாசிப்பில் மரபிலக்கியம், ப.16

148. ச.வே.சுப்பிரமணியம், சங்க இலக்கியம், வாழ்வியல் சிந்தனை, ப.161

149. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி 1, பக்.116-124

150. கு.வெ.பாலசுப்பிரமணியம், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.114

151. மேலது. ப.111

152. மேலது. ப.9

153. சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, தொகுதி 1, ப.397)

154. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனித நேய மணிநெறிகள், ப.69)

155. பதிற்.38:13-16

156. பரிமேலழகர் (உ.ஆ), குறள்.81

157. தொல்.பொருள்.76

158. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனித நேய மணிநெறிகள், ப.27

4.1. அமைப்பியல் - விளக்கம்

4.2. அமைப்பியல் - தோற்றம்

4.3. சங்க இலக்கியங்கள்

4.4. தொகுத்த விதம்

4.5. சங்க இலக்கியம் பற்றியக் கட்டமைப்பு

4.6. புலவர் மரபு

4.7. எட்டுத்தொகை

4.8. பத்துப்பாட்டு

4.9. சங்க காலப் புலவர்கள் கையாண்ட உத்திகள்

4.10. உள்ளுறை உவமம் - விளக்கம்

4.11. இறைச்சி – விளக்கம்

**4.12. படிமம்**

4.12.1. சங்க இலக்கியத்தில் படிமம்

4.12.2. படிமப் பண்புகள்

4.13. உவமை

4.14. உருவகம்

**4.15. தகவல் தொடர்பியல் உத்திகள்**

4.15.1. விமர்சன உத்தி

4.15.2. விளம்பர உத்தி

4.15.3. அறிவுரை கூறும் உத்தி

4.15.4. வர்ணனை உத்தி

**4.16. கோட்பாடு**

4.16.1. தொடர்பியல் கோட்பாடுகள்

4.16.2. பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு

4.16.3. வலுவூட்டல் கோட்பாடு

4.16.4. சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு

4.16.5. தகவல் கோட்பாடு

4.16.6. மக்கள் சமூகக் கோட்பாடு

4.17. சமுதாயத்தில் இலக்கியத்தின் வெளிப்பாடு

4.18. இலக்கியப் படைக்கத் தேவைப்பட்ட சூழல்

# இயல் 4

# புலமைத் தொழிற்பாடும் இலக்கியக் கட்டமைப்பும்

பண்டைய தமிழ் நாகரிகம், பண்பாடு முதலியனவற்றை அறிய விரும்பும் மக்களுக்குச் செய்தி ஊற்றாகவும் சான்றாதாரமாகவும், கற்பனையும், கனவும், பொய்யும், புனைவும் அற்ற தமிழ்ச் சமுதாயத்தை உள்ளது உள்ளபடியே காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குவது சங்க இலக்கியம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலப்பகுப்பும் சங்க இலக்கியத்தின் தனித்தன்மைகள்.

சங்க காலத் தமிழரின் பண்பாட்டின் சிறப்புகளுள் மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் இடையே அமைந்திருந்த நெருக்கமான உறவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். கவிஞர்களைச் சுட்டுவதற்குப் பயன்படும் புலவர் என்னும் சொல் ஞானம், அறிவு, கல்வி, புலமை என்று அனைத்தையும் உள்ளடக்கியதாக விளங்கியது. சங்க காலத்தைப் போன்று தொன்மையான காலங்களில் உலகெங்கிலும் தோன்றிய இலக்கிய மரபுகளைக் காணும் போது அவை தெய்வீகத் தன்மைகளோடும் இயற்கை இகந்த ஆற்றல்களோடும் கவிதை படைக்கும் படைப்பாற்றல் புலவர்களிடம் காணப்பட்டது என்பதை அறிய முடிகின்றது. புலவர் என்னும் சொல் இசைக்கலைஞனான பாணனையும் கட்டிடக் கலைஞனையும் சுட்டுவதற்காகப் பயன்படுத்தப்பட்டன. எனினும் இச்சொல் கவிஞர்களைக் குறிக்கவே பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டன.

சங்கப் புலவர்களின் பாடல்களை ஆராயும் போது அப்புலவர்களின் தன்னலமில்லா மனப்பாங்கு வெளிப்படுகிறது. அப்புலவர்கள் உண்மையாகவே மக்கள் நலத்தை நாடும் அறிவுள்ளவர்களாகச் செயல்பட்டனர். சங்க இலக்கியம் பல புலவர்களால் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாகும். சங்கப் புலவர்களின் பாடல்களின் மூலம் அரசியல், நாடு, மன்னர்கள், நகரம். சமுதாயம், பண்பாடு, மக்களின் வாழ்க்கை நிலை போன்றவற்றை அறிய முடிகின்றது.

தனிமனித வாழ்வில் இருந்து சமுதாய வாழ்விற்கு மாறிய சங்க கால மனிதன் தங்களுக்குள் எவ்வாறு தகவலைப் பரிமாறினான். அதற்கு அவனுக்குத்

துணை நின்ற மாந்தர்கள், சாதனங்கள் முதலானவற்றையும் அதற்கு அவன் பயன்படுத்திய உத்திகள் பற்றியும் இவ்வியல் ஆராய்கின்றது.

## 4.1. அமைப்பியல் - விளக்கம்

இன்றைய உலகம் அறிவியல் உலகமாக மாறி வருகின்ற இச்சூழலில் மேற்கண்ட கூற்றின் தேவை நன்கு புலனாகும். மனிதன் ஒரு குறுகிய வட்டத்திற்குள் நின்று விடாமல் தொலைநோக்குப் பார்வை கொண்டு சிந்திக்க வேண்டும். அதற்கு அவன் இலக்கிய அறிவோடு உலக அறிவையும் பெற்றவனாக இருக்க வேண்டும். இத்தகைய அறிவு வளர்ச்சியின் காரணமாகப் புதிய புதிய கோட்பாடுகள் தோன்றின. அவை இலக்கியங்களை ஆய்வுக்குட்படுத்தின. அதன் நிறை, குறைகளைச் சுட்டிக்காட்டின. இதனால் இலக்கியங்களின் நோக்கமும் தன்மையும் பாமர மக்கள் வரை சென்றடைந்தது. இத்தகைய கோட்பாட்டாய்வுகள் இலக்கியங்களை அடுத்தகட்ட நிலைக்குக் கொண்டு சென்றன என்றால் அது ஏற்புடைத்து. மேலும் இவ்வகையான ஆய்வுகள் இலக்கியங்களின் மீதான ஒற்றைப் பரிமாண நோக்குநிலையைப் புறந்தள்ளி அதன் பல்வேறு பரிமாணங்களை வெளிக்கொணர்வதாய் அமைந்தன. அவ்வகையில் அமைப்பியல் என்ற கோட்பாட்டினைக் கொண்டு சங்க இலக்கியப் பாடல்களை ஆராய்வதாய் இவ்வ்வியல் அமைகிறது.

## 4.2. அமைப்பியல் தோற்றம்

அமைப்பியல் என்பது மேலை நாடுகளில் தோன்றிய கோட்பாடாகும். இருபதாம் நூற்றாண்டில் அமைப்பியல் சிந்தனைக்கு இரண்டு துவக்கங்கள் உண்டு. ஒன்று, மொழியியல் ஆய்வுகளில் தோன்றி வளர்ந்த அமைப்பியல். இரண்டாவது, இலக்கிய ஆய்வுகளில் பிறந்தது. கி.பி.1910-30 ஆம் ஆண்டுகளில் இரஷ்ய இலக்கியத் திறனாய்வில் செல்வாக்குப் பெற்றிருந்த உருவவியல், அமைப்பியலுக்கு முக்கியமானதோர் ஊற்றுக்கால் ஆனது. உருவவியலைக் கட்டமைப்பியல் என்றும் கூறுவர். கி.பி.1930-களோடு உருவவியல் முடிந்துவிட்டது என்று முதலில் கருதப்பட்டது. ஆனால் ரோமன் யாக்கப்சனின் மூலம் அது பிராகு அமைப்பியலாகவும் பின்னர் பிரெஞ்சு அமைப்பியலாகவும் பரிணமித்தது"[1]

“அமைப்பு என்ற சொல் பழையதானாலும் குறிப்பிட்டதொரு கருத்தியலைக் கொண்ட கலைச்சொல்லாக, 1927-இல் தான் அது வழக்குப் பெறத் தொடங்கியது. அதுவும் முறையாகவும் தொடர்ந்து பெருவழக்கிற்கு வந்தது. 1934-இல் தான் ரெனோ வெல்ல சுட்டுகிறார். மேலும் இரஷ்ய உருவவியலிலிருந்து, அமைப்பியல் தனியாக வளர்ச்சிப் பெற்ற காலப் பகுதிதான் அது. அமைப்பு என்பது தூலமான ஒரு கட்டுமானத்தைக் குறிக்கிறது. இந்தக் கட்டுமானத்தின் பண்புகளுக்கும் பரிமாணங்களுக்கும் ஏற்ப, அதனுடைய உறுப்புக்குள் மாறக்கூடும். மேலும், ஓர் அமைப்பின் எல்லாப் பகுதிகளுக்கும் அதனதன் அளவில் ஒரு சக்தி அல்லது திறன் உண்டு. அமைப்புக்குக் காரணமாக அமைவது இதுதான். அதே சமயத்தில், முழுமையைச் சிதைக்காமல், அப்பகுதிகளைப் பிரித்துவிட முடியாது”[2]

என்று மேனாட்டறிஞர்களின் கருத்துக்களை தி.சு.நடராஜன் முன்வைக்கிறார். உருவவியல் கொள்கையின் வளர்ச்சியில் தோன்றிய இத்தகைய கருத்துக்கள், அமைப்பியலின் கருத்துக்களிலிருந்து பிரித்தறிய முடியாதவை என்பது மட்டுமல்ல. இவைதான் அமைப்பியலின் கருத்துருவாக்கத்திற்குத் தளம் அமைத்துத் தந்தன என்பதும் முக்கியம்.

பெர்டினன்ட் - டி- சசூர் அவர்கள், “மொழியின் அமைப்பு கருத்து, வடிவம், அவற்றின் தொடர்பு என்ற மூன்றையும் உள்ளடக்கியது என்றும் மொழி பல அலகுகளால் ஆகி, ஒவ்வொரு அலகும் ஒவ்வொரு முறையில் இன்னொன்றுடன் தொடர்பு கொண்டுள்ளது”[3] என்றும் குறிப்பிடுகிறார். இவ்விளக்கம் கவிதைக்குப் பொருத்திப் பார்க்க ஏற்றது. கவிஞனின் எண்ணங்களே கவிதை என்ற வடிவத்தில் வெளிப்படுகின்றன. எண்ணங்களுக்கும் (கருத்து) வடிவத்திற்கும் உள்ள தொடர்பு கவிதையின் கட்டமைப்பினைப் புலப்படுத்தும். கவிதையின் கூறுகளைக் கணக்கிடுதலும் அதன் அமைப்பினைக் கணிக்க உதவும்.

இதேபோல் ஜீன் பியாஜெட், “கவிதையின் கட்டமைப்பு ஒட்டு மொத்தம் என்னும் தன்மை, ஒன்றிலிருந்து இன்னொன்றை ஆக்குதல் என்னும் தன்மை, சுயக்கட்டுப்பாடு என்னும் தன்மை என்ற மூன்றையும் உள்ளடக்கியது”[4] என்று கட்டமைப்பை விளக்குகிறார். இவற்றிற்கு விளக்கமாகக் கவிதையின் பகுதிகளின் இணைப்பு வரிசைமுறை, கட்டப்பட்டுள்ள முறையில் முழுமை,

கவிதைக் கூறுகள் கட்டப்பட்டுள்ள விதிகள், கட்டமைப்பின் மாறும் தன்மை முதலியவற்றைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

தமிழகத்தில் அமைப்பியல் நெறியை அறிமுகப்படுத்திய பெருமை தமிழவனையே சாரும். அவரது ‘ஸ்ட்ரக்சுரலிசம்’ என்ற நூலே தமிழகத்தில் அமைப்பிலை எடுத்துரைத்த முதல் இலக்கிய கோட்பாட்டு நூலாகும். அமைப்பியல் தமிழகச் சூழலுக்குள் நுழைந்தது குறித்து தமிழவன் கூறும் கருத்தினைக் காணலாம்.

“அமைப்பியல் அல்லது ‘Structuralism’ என்ற இலக்கியத்திறனாய்வு நெறி இன்று உலகெங்கும் பரவியுள்ளது. தமிழில் எண்பதுகளின் ஆரம்பித்திலிருந்து கோட்பாட்டளவில் அறிமுகமாகி, இன்று செயல்முறைத் திறனாய்விலும் தன் தாக்கத்தை இந்நெறி செலுத்தியுள்ளதைக் காண்கிறோம். இந்தியாவில் இம்முறையில் உருவான திறனாய்வு தமிழில்தான் முதன்முதலாக மிக விரிவாக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது”[5] என்ற தமிழவனின் கருத்துக்கள் உற்றுநோக்கத் தக்கது. இதன்மூலம் அமைப்பியல் என்ற மேலைநாட்டு இலக்கிய நெறி முதன்முதலாக இந்திய அளவில் தமிழகத்தில்தான் அறிமுகப்படுத்தப்பட்டது என்பது உறுதியாகிறது.

## 4.3. சங்க இலக்கியங்கள்

நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு ஆகிய நூல்கள் எட்டுத்தொகை நூல்களாகும். திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்கள் பத்துப்பாட்டு நூல்களாகும்.

சங்க இலக்கியங்கள் வழியாக நம்முடைய சமூக வரலாற்றை, பண்பாட்டு வரலாற்றை வாசித்தெடுப்பதும் முழுமை செய்வதும் ஆகும். ஆனால் அதற்கு சமூகவியலிலும் மானுடவியலிலும் பிற பண்பாட்டு அறிவியல்களிலும் அடிப்படைப்பயிற்சியும் அவற்றின் விதிகளை அடிப்படையாகக் கொண்டு ஆராயும் முறைமையும் தேவை.

## 4.4. தொகுத்த விதம்

சங்க இலக்கியங்கள் யாவும் ஒரு குறிப்பிட்ட காலத்திலே தொகுக்கப்பட்ட நூல்களாகும். தொகுப்பெனில் ஏற்கனவே உள்ள பாடல்களைத் தொகுப்பதாகும். தொகுக்கும் போது தொகுத்தோர்கள் அடிவரையறை, பொருள் மரபு என்பனவற்றைக் கொண்டு சங்க இலக்கியங்களைத் தொகுத்தனர்.

தொகுக்கும் போது குறுகிய அடிகள் கொண்டவற்றை எட்டுத் தொகைக்குள்ளும் நீண்ட அடிகள் கொண்டவற்றைப் பத்துப் பாடல்களுக்குள்ளும் அடக்கினர். அகப்பாடல்களின் தொகை முறைமைக்கு அவற்றின் அடியளவு அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது.

நற்றிணை 9-12 அடிகள்

குறுந்தொகை 4-8 அடிகள்

ஐங்குறுநூறு 3-6 அடிகள்

அகநானூறு 13 – 31 அடிகள்

புறப்பாடல்களுக்கு அடிவரையறை கொண்ட ஒரு தொகை முறை வகுக்கப்படவில்லை. எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்பன புறத்திணை சார்ந்தவை. இவற்றுள் பதிற்றுப்பத்து பத்து சேரமன்னர்கள் பற்றியது. புறநானூறு எல்லா மன்னர்களையும் பற்றியது.

பத்துப்பாட்டினுள் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை என்பன அகத்திணை சார்ந்தவை ஆறு ஆற்றுப்படை நூல்களும் புறத்திணை சார்ந்தவை. மதுரைக்காஞ்சி நிலையாமை கூறுவது, மதுரைக்காஞ்சியை நிலையாமை கூறும் காஞ்சித் திணையுள்ளும் நெடுநல்வாடையை, சுட்டி ஒருவர் பெயர் கூறுவதால் புறத்திணையுள்ளும் அடக்கும் மரபு பிற்கால உரையாசிரியர்களால் ஏற்படுத்தப்பட்டது. இத்தொகுப்பு முயற்சி மிக முக்கியமானதாகும்.

## 4.5. சங்க இலக்கியம் பற்றியக் கட்டமைப்பு

- தமிழ்நாடு ஐந்து வகையான இயற்கைப் பிரிவுகளையுடையது. ஆவையாவன மலைப்பிரதேசம், காட்டுப்பிரதேசம், நீர்வளமும் நிலவளமும் உள்ள வயல்பிரதேசம், கடற்கரைப்பிரதேசம், வறண்ட நிலப்பிரதேசம்.
- இந்நிலங்களில் காணப்படும் தாவரங்களால் இந்நிலங்கள் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பபெயர் பெற்றன.
- இந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் வாழ்வு அகவாழ்வு, புறவாழ்வு எனப் பிரிக்கப்பட்டிருந்தது. அகவாழ்வு பிராயமடைந்த ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே நடக்கும் காதல் ஒழுக்கமாகும். புறவாழ்வு இது தவிர்ந்த ஏனையவை. முக்கியமாகப் போரையே புறம் என்பர்.
- ஐந்து நிலத்திற்கும் ஐந்து அகவாழ்வும் ஐந்து புறவாழ்வும் உண்டு. ஐந்து நிலத்திலும் நடைபெறும் ஒழுக்கமே தூய காதல் ஒழுக்கம்.
- அகத்தினுள் வரும் கைக்கிளை, பெருந்திணை என்பன தூய அகம் ஒழுக்கமன்று. அவை எல்லா நிலத்திற்கும் வரும்.
- ஐந்து நிலத்திற்கும் ஐந்து புற ஒழுக்கம் உண்டு.
- காஞ்சி, நிலையாமை என்பன தூய புற ஒழுக்கமன்று. அவை எல்லா நிலத்திற்கும் வரும்.

## 4.6. புலவர் மரபு

இயற்றமிழை வளர்த்து, வாழச்செய்த அக்காலச் செந்நாப் புலவர்களைச் ‘சொல்லேர் உழவர்’ என்று இலக்கியங்கள் சிறப்பித்துள்ளன. “இளவேனிற் காலத்தில் சான்றோர் நாவிற் பிறந்த கவிதைகளின் வாயிலாகவும் தமக்கு முற்பட்ட சான்றோர் கூறிய செய்யுட்களைத் தம் சொல்லை வளர்க்கும் நீராகவும் கொண்டு தமது அறிவுடைய நாவாகிய கலப்பையால் உழுது உண்டனர். இத்தகு புலவர் பெருமக்கள் கவிகளைப் பாண்டியன் கேட்டு மகிழ்வான்”[6] என்ற செய்தியைக் கலித்தொகையின் நெய்தற்கலி 35 – ஆவது பாடல் குறிப்பிட்டுள்ளது.

இப்புலவர்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நான்கு வகையான பாக்களைக் கொண்டு இயற்றமிழ் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர். சங்க காலப் புலவர்களாக 473 பேரைக்

குறிப்பிடுவர். 102 பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் அறியப்படவில்லை. 473 பேரில் 41 பேர் பெண் புலவர்கள். மொத்தச் சங்க இலக்கியப் பாடல்கள் 2381. இவற்றுள் 235 பாடல்கள் கபிலர் இயற்றியவை. சங்க இலக்கியத்தில் மூன்று அடிகளிலும் ஒரு பாட்டு உண்டு, 782 அடிகளிலும் ஒரு பாட்டு உண்டு. பாட்டும் தொகையும் தான் சங்க இலக்கியம் என்பர். பாட்டு என்பது பத்துப்பாட்டினைக் குறிக்கும். தொகை என்பது எட்டுத்தொகையினைக் குறிக்கும்.

## 4.7. எட்டுத்தொகை

தனிப்பாடல்களின் தொகுப்புத்தான் எட்டுத்தொகை. அதாவது எட்டுத்தொகுப்புகள். ஒவ்வொரு தொகுப்பும் பாடல்களின் அடிவரையறை மற்றும் பொருள் மரபு (பாடல் அடிகளின் எண்ணிக்கை, அகப்பொருள், புறப்பொருள்) ஆகியவற்றின் அடிப்படையில் தொகுக்கப்பெற்றுள்ளது. இத்தொகுப்பு நூல்களை எண்பெருந்தொகை என்பர். எட்டுத்தொகையில் உள்ள மொத்தப்பாடல்களில் மிகக் குறைந்த அடி அளவு மூன்றாகவும் மிகுதியான அடி அளவு 14 ஆகவும் உள்ளது.

## 4.8. பத்துப்பாட்டு

பத்து நெடிய தனிப்பாடல்களின் தொகுப்புதான் பத்துப்பாட்டு. ஒரு பாடல் ஒரு தனிநூல். இந்தப் பத்துப்பாடல்களும் ஆசிரியப்பாவினால் பாடப்பட்டுள்ளன. எல்லாம் பாடாண்திணையில் அமைந்தவை. எட்டுப் புலவர்கள் ஆறு தலைவர்களைப் பற்றிப் பாடப்பட்ட பத்துப் பாடல்களின் தொகுப்பினைத்தான் ‘பத்துப்பாட்டு’ என்கிறோம். இதில் ஐந்து நூல்கள் ஆற்றுப்படையைச் சார்ந்தவை. ஆற்றுப்படை என்றால் வழிப்படுத்துதல் என்று பொருள். ஆற்றுப்படை நூல்கள் ஒருவகையில் பயணக்குறிப்பு இலக்கியங்கள்.

பழம்புலவர்கள் படைத்தளித்துள்ள தனிப்பாடல்கள் ஒவ்வொன்றும் அக்காலத்தினை நம் கண்முன் காட்டவல்லது. அவர்கள் மிகைப்படுத்திப் பலவற்றை அவற்றில் கூறியிருந்தாலும், அவற்றின் மையப்பொருளில் மாற்றமோ, திரிபோ, முழுக்கற்பனையோ இருக்க வாய்ப்பில்லை.

## 4.9. சங்க காலப் புலவர்கள் கையாண்ட உத்திகள்

பழந்தமிழ்ப் புலவர்கள் அகப்பாடல்களைப் பாடிய போது, தாம் கருதியதைப் படிப்பவர் சிந்தித்து உணரும் வண்ணம் வெளிப்படுத்த சில முக்கியமான உத்திகளைப் பின்பற்றினார்கள். அவ்வுத்திகளில் இறைச்சி, உள்ளுறை, உவமம் ஆகியன குறிப்பிடத்தக்கவை. இறைச்சியும் உள்ளுறை உவமமும் அமைந்த பாடல்களை மேலோட்டமாக வாசித்தால் புலவர்கள் கருதியதை உணர்ந்து கொள்ள முடியும்.

பழந்தமிழ் அகப்பாடல்கள் திணைக்கோட்பாட்டு அடிப்படையில் பாடப்பட்டவை. எனவே, அப்பாடல்களைத் திணைக்கோட்பாட்டு அடிப்படையிலேயே படிக்க வேண்டும்.

- முதற்பொருள்
- கருப்பொருள்
- உரிப்பொருள்

என்பனவற்றை நினைவிற் கொண்டால்தான் பழந்தமிழ் அகப்பாடல்களைப் படித்து இன்புற முடியும்.

- நிலமும் பொழுதும் முதற்பொருள்
- கருப்பொருள், தெய்வம், உணவு, விலங்கு, மரம், புல் எனப்பல வகை
- புணர்தல், பிரிதல், இரங்கல், இருத்தல், ஊடல் என்பன உரிப்பொருள்

இந்நினைவோடு இறைச்சியையும் உள்ளுறை உவமத்தையும் சிந்திக்க வேண்டும்.

## 4.10. உள்ளுறை உவமம் - விளக்கம்

உள்ளுறை என்ற சொல்லினை உள் + உறை எனப் பிரிக்கலாம். இதற்கு உள்ளே தங்குதல் என்று பொருள்படும். பொதுவாக நூல்களின் பொருளடக்கப் பகுதியினை 'உள்ளுறை' என்ற சொல்லில் குறிப்பிடுவர். தொல்காப்பியத்தில் உள்ளுறை என்ற சொல் அகத்திணையியலில் முதன்

முதலாக வருகிறது. இதன் பொருள் குறிப்பாகப் பெறப்படும் என்பதாகும். இதனை உரையாசிரியர்களும் தற்கால அறிஞர்கள் பலரும் தத்தம் அறிவின் பாற்பட்டு விளக்கங்கள் கூறியுள்ளனர். "உள்ளொன்று வைத்து அதற்கிணையான புறமொன்று கூறுவர். கூறினும் அகத்தொடர்பான உட்கருத்து மெய்யுள் உயிர் போல விளங்கிக் கிடக்கும்"[7] என்று முனைவர் வ.சுப.மாணிக்கனாரின் கருத்து குறிப்பிடத்தக்கதாகும்.

உள்ளுறையாவது இதுவென தொல்காப்பியர் தனியாக இலக்கணம் கூறவில்லை ஆயினும் உள்ளுறை உவமம் இதுவென இலக்கணம் கூறியுள்ளார்.

"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென

உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"[8]

"அகப்பாடல் செய்வான் ஒரு புலவன், அப்பாடலில் கருப்பொருளை அமைத்து அதனால் கூறப்படும் கருத்துப் பொருளோடு, கூற நினைத்த – ஆனால் கூறப்படாத ஒரு கருத்துப் பொருள் முடிவனதாது என உள்ளே (மறைவாக) அமைத்து முடிப்பது உள்ளுறையாகும்"[9] என்று ஆ.சிவலிங்கனார் விளக்கம் தருகிறார்.

தொல்காப்பியர் அகத்திணை இயல் என்பதனுள் அகப்பொருட்குரிய திணைகள், ஒவ்வொரு திணைக்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் போன்றன. திணை, மயக்கம் பற்றி, நிலத்திற்குரிய மக்கள், தலைமக்களைப் பிரிக்கும் சூழல்கள் பற்றி, கூற்றுக்குரிய இடங்கள் என பல செய்திகளைக் கூறிய பின்னர் உவமம், உள்ளுறை உவமம் பற்றிக் கூறத் துவங்குகிறார்.

"உள்ளுறை உவமம் ஏனை உவமமெனத்

தள்ளா தாகும் திணையுணர் வகையே"[10]

அகத்திணையியலில் உள்ளுறை பற்றிய விளக்கம் தரும் முதல் நூற்பா இதுவாகும். இதன்படி உள்ளுறை உவமமும் ஏனை உவமமும் திணையினைக்

கருப்பொருள் வழியும் உரிப்பொருள் வழியும் உணர்விக்கும் தன்மையை அறியலாம்.

“உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்

கொள்ளும் என்ப குறியறிந் தோரே”[11]

முதல், கரு, உரி என்ற வகைப்பாடு அகத்திணைக்கு உரியதாகும். இந்நூற்பா தெய்வம் நீங்கலாகப் பிற கருப்பொருட்கள் உள்ளுறைக் கூற்றைச் சிறப்பிக்கும் என்ற வழி உள்ளறை அகத்திணைக்கே உரியது என்ற குறிப்பினையும் இந்நூற்பா வழிப்பெறலாம்.

“வெளிப்படையாக அறியவராததாலும் ஞானிகளால் அல்லது மற்றவரால் அவ்வப் போது நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டு அனுபவிக்கப் பெறுவதாலும் தெய்வக் கருப்பொருள் நிகழ்ச்சி வெளிப்படையாக நடைபெறாது. எனவே தான் தெய்வத்தை நீக்கி மற்றைய கருப்பொருள்களை உள்ளுறைப் பொருளுக்கு நிலைக்களன் என்றார் ஆசிரியர்”[12]. இக்கருத்தினை முனைவர் ஆ.சிவலிங்கனார் குறிப்பிடுகிறார். இதன் வழி உள்ளுறை அகத்திணைக்கு மட்டும் உரியது எனலாம். அகத்தணை இயலில் கூற்றுகள் பற்றிய நூற்பாக்களுக்கு அடுத்ததாக வருவதால், உள்ளுறை இலக்கிய மாந்தர்களின் கூற்றுகளில் வெளிப்படுவதாகும்.

உள்ளுறை உவமம் என்பது அற்புதமான கருத்து வெளிப்பாட்டு உத்தியாகும். “உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்” என்று தொல்காப்பியர் உள்ளுறை உவமையைக் கூறியுள்ளார். இவ்வுள்ளுறை உவமம், தெய்வம் ஒழிந்த ஏனைய கருப்பொருள்களை இடமாகக் கொண்டு வரும். புலவன், தன் மனத்துள் கருதிய பொருளானது, தான் கூறும் சொற்களுடன் ஒத்து முடிக என்று எண்ணி உரைப்பது உள்ளுறை உவமம் ஆகும். அதாவது, வெளிப்படையாகக் கூறப்பட்ட பொருளுக்கு இயைபாக, உள்ளுறையும் பொருளொன்று உவம வடிவில் வருவது உள்ளுறை உவமம் ஆகும். இதன் பயன்பாட்டை “அகப்பொருள் ஒழுக்கலாற்றில் சொல்லாமல் வெளியிட்டக் கூறுவதற்குரிய வல்லாத எண்ணங்களை நாகரிகமாக மறைத்துக் கூறுதற் பொருட்டு அமைத்துக்

கொண்ட உரையாடல் முறையே உள்ளுறையுவமமாகும்” என்று க.வெள்ளைவாரணன் விளக்கியுள்ளது மனதில் கொள்ளத்தக்கது.

ஓரம் போகியார் பாடிய ஐங்குறுநூற்று அகப்பாடல் 12 ஒன்றைச் சான்றாகக் காட்டலாம்.

“கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும்
துறைகேழ் ஊரன் கொடுமை நன்றும்
ஆற்றுக தில்ல யாமே
தோற்க தில்லஎன் தடமென் தோளே”[13]

தலைமகள் கூறியது. வாயில் நேரக்கருதிய தலைமகள், பரத்தையருக்கு மேலும் சிறப்புச் செய்தான் தலைமகன் என்பது கேட்டுப் பொறாளாய்க் கருத்தழிந்து தன்னுள்ளே சொல்லியது. “கரைக்கண் நின்ற வேழம் (பேய்க்கரும்பு) வயலகத்துக் கரும்பு போலப் பூக்கும் துறை பொருந்திய ஊரன் கொடுமையை யாம் பொறுத்துக் கொண்டு ஆற்றியிருப்போமாக! எம்முடைய பெருமையும் மென்மையும் உடைய தோள்கள் ஆற்றாமல் தோற்று மெலிக!” என்பது பாடலின் பொருள். இதில் “கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும் துறைகேழ் ஊரன்” என்பது உள்ளுறை உவமம்.

தலைவன் கொடுமை செய்கின்றான். அக்கொடுமையைப் பொறுத்துக் கொண்டு ஆற்றியிருக்க விரும்பினும் தோள்கள் ஆற்றாமல் மெலிகின்றன என்று கூறும் தலைவி, தலைவன் செய்த கொடுமையை வெளிப்படையாகக் கூறவில்லை. நாகரிகமாக உள்ளுறை உவமம் மூலம் கூறுகிறாள். குலமகளாகிய தனக்குச் செய்யும் சிறப்புகளை இழிந்த பரத்தையர்க்கும் தலைவன் செய்கிறான் என்பது அக்கொடுமை. மனைவிக்குச் செய்ய வேண்டிய சிறப்புகளை குலமகள் அல்லாத பரத்தை; வயலகத்துக் கரும்பு தலைவி. இதனை “வேழம் என்ற பேய்க்கரும்பு, கரும்பு போன்ற தோற்றமுடையதேயன்றி உள்ளீடற்றது; இனிப்பில்லாதது, பொய்மையானது, அது கரும்புபோல் பூக்கும் என்னும் போது வேழம் பரத்தையையும் கரும்பு – தலைவியையும் சுட்டுவனவாகின்றன” என்று தமிழண்ணல் விளக்குவார்.

இவ்வாறு பழந்தமிழ்ப் புலவர்கள், தம்முடைய படைப்புகளான அகப்பாடல்களை இறைச்சி, உள்ளுறை உவமம் முதலிய உத்திகளைப் பயன்படுத்திச் சிறப்புடன் உருவாக்கினார்கள். இப்பாடல்கள் பழந்தமிழ்ப் புலவர்கள் புலமைக்குச் சான்றுகளாகவும் இன்பம் தருவனவாகவும் உள்ளன.

## 4.11. இறைச்சி –விளக்கம்

"'இறு' என்பது 'இருக்கச் செய்' என்று பொருள். 'இரு' என்னும் தன் வினைக்கு 'இறு' என்பது பிறவினை. 'ஐ' எனும் தொழிற்பெயர் விகுதி சேர்ந்து இறை என்றாயிற்று"[14]. ஒரு சொல்லின் பொருள் வளர்ச்சியில் அச்சொல் அப்படியே இருப்பதும் எழுத்து மாற்றத்தாலோ எழுத்துச் சேர்க்கையாலோ ஒரு பொருளுக்கேயுரியதாதலும் உண்டு. அவ்வாறு 'சி' என்ற ஒரு தொழிற்பெயர் விகுதி எழுத்துச் சேர்த்து 'இறைச்சி' என்றாகி அகப்பாடலில் வரும் கருப்பொருளுக்குரிய பெயராயிற்று"[15]

இறைச்சி என்பது கருப்பொருளே என ஆ.சிவலிங்கனார் தொல்காப்பிய நூற்பாக்கள் சிலவற்றைச் சான்று காட்டி விளக்குவார். இறைச்சிப் பொருள் வயின் செய்யுளிற்கிளக்கும் (தொல்.681), இடைச் சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி (தொல்.1094) ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும் (தொல்.1116) அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும் (தொல்.1177) என இச்சூத்திரங்களுள் முதற் சூத்திரம் தவிர மற்றையன அகத்திணைப் பொருட்செய்திகள் கூறுமிடங்களில் கூறப்பட்டன. கடுவன், மூலன், குமரி என்ற பெயர் குறிஞ்சித் திணையைச் சார்ந்த குரங்குகளைக் குறிக்கும் பெயராகும். இவை அஃறிணையை மட்டும் குறித்து வரும் இவ்வாறு விரிவான விளக்கம் தந்து இறைச்சி என்ற சொல் கருப்பொருள் என்ற பொருளுடைத்து என நிறுவுகிறார் ஆ.சிவலிங்கனார்"[16].

இறைச்சியைப் பற்றித் தொல்காப்பியர், "இறைச்சி தானே உரிப்புறத் ததுவே"[17] எனவும் "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமாருளவே திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே"[18] எனவும் கூறியுள்ளார்.

- உரிப்பொருள் புறத்தாகித் தோன்றும் கருப்பொருள் நிகழ்ச்சி இறைச்சி என்பதும்

- அகப்பொருள் இலக்கணம் உணர்ந்தோருக்கு இவ்விறைச்சியில் பிறிதொரு குறிப்புப்பொருள் தோன்றும் என்பதும் பொருள்.
- அதாவது கருப்பொருள்களின் செயல்களைக் கூறுவது இறைச்சி; அவ்விறைச்சியில் மானிடர் காதல் வாழ்வை மிகுவிக்கும் குறிப்புப்பொருள் தோன்றும் என்பது தெளிவான விளக்கம்.

ஓர் அகப்பாடலில் மாந்தர்தம் காதலைப் புனைவது உரிப்பொருள்; பிற உயிரினங்களின் காதலைச் சித்தரிப்பது இறைச்சிப் பொருள் எனவும், “இறைச்சி என்பது மாந்தர்தம் உணர்வுக்கு இயைபுப் பின்னணியாக அமைந்து அவ்வுணர்வைத் தூண்டும்” எனவும் தமிழண்ணல் விளக்குவார். இவ்விளக்கம் எளிதில் புரியக் கூடியது.

ஓர் அகப்பாடலைச் சான்றாகக் காட்டலாம். குறுந்தொகையில் 46ஆவது பாடல். பிரிவிடை ஆற்றாள் எனக் கவலைப்பட்ட தோழிக்கு ஆற்றியிருப்பேன் என்று தலைவி கூறியதாக உள்ளது அது.

“ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன
கூம்பிய சிறகர் மனைஉறை குரீஇ
முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து
எருவின் நுண்தாது குடைவன ஆடி
இல்இறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழிஅவர் சென்ற நாட்டே”[19]

“தோழி! ஆம்பல் பூவின் வாடலையொத்த கூம்பிய சிறகுகளை உடையதும் வீட்டினிடத்தே தங்குவதுமாகிய குருவிகள், வீட்டு முற்றத்தில் காயப்போட்டிருக்கும் தானியங்களைத் தின்றனவாய், பொதுவிடத்தில் உள்ள எருவின் பொடியைக் குடைந்தாடிக் களித்து, மாலைப்பொழுதில் இல்லத்தில் தம்மிடத்தில் உள்ள சேக்கையில் தம் குஞ்சுகளோடு தங்கியிருக்கும். பிரிந்தவருக்குத் துன்பம் தரும் மாலைப்பொழுதும் தனிமைத்துயரும் தலைவர் பிரிந்து சென்றுள்ள நாட்டில் இல்லை போலும்!” என்பது பாடலின் பொருள். இதில் குருவிகள் பற்றிய செய்தி இறைச்சி. மாலைப்பொழுதில் தாம் இருக்கும்

இடத்தில் தம் குஞ்சுகளோடு தங்கும் குருவிகளைப் பார்க்கும் தலைவர் தலைவியை நாடி விரைவார் என்பது இறைச்சியால் கிடைக்கும் குறிப்பு. அதாவது குருவிகள் அன்பு வாழ்க்கை, தலைவர் மனதில் காதல் உணர்வை மிகுவித்து, தலைவியை நாடி வரச் செய்யும் என்பது கருத்து. அதனால் தான் ஆற்றியிருப்பேன் என்று தலைவி கூறினாள்.

## 4.12. படிமம் (Image) - விளக்கம்

இமேஜ் (Image) என்னும் ஆங்கில மொழிச் சொல்லிற்கு இணையாகத் தமிழில் இன்று வழங்கப்பெற்று வரும் ஒரு கலைச்சொல்லே 'படிமம்' என்பதாகும். பொதுவாகச் சொற்களால் அமையும் படமே படிமம் எனலாம். ஓர் அடைமொழியோ, உருவகமோ, உவமையோ படிமத்தை உருவாக்கலாம். தன் கற்பனையைத் தூண்டி வெளிப்படையான கருத்தைப் புலப்படுத்தும் வருணனைப் பகுதியும் படிமம் ஆகலாம்.

எல்லா இலக்கியங்களிலும் படிமங்கள் காணப்படுகின்றன. ‘‘படிமம் என்பது உணர்வும் அறிவும் இணைந்து உருவாக்கும் மனக்காட்சியாகும்’’[20]. என்று லேனா தமிழ்வாணன் குறிப்பிடுகிறார். முற்றுருவத்தின் படிநிலை வளர்ச்சியே படிமமாகும். ‘‘படிமம் என்பது அழகூட்டும் வெறும் அணியாக விளங்குகின்றன’’[21] என்று சுப. வீரபாண்டியன் குறிப்பிடுகிறார்.

‘‘படிமம் என்பது செறிவான சில சொற்களின் துணை கொண்டு, மனதில் விரிக்கும் ஓர் அகக்காட்சியான இலக்கிய அழகு எனவும் பொருள் கொள்ளலாம். காட்சியாக அமையும் கலைக்கூறே படிமம்’’[22] என்கிறார் பொன்மணி வைரமுத்து.

சங்க இலக்கியத்தில் கருப்பொருள் உரிப்பொருள் பின்னணியில் படிமங்கள் படைக்கப்பட்டுள்ளன. ஒரு குறியீடு தோன்றுவதற்குப் படிமமே அடிப்படையாக அமைகின்றது. படிமம் என்பது உணர்வும் அறிவும் இணைந்து உருவாக்கும் மனக்காட்சி ஆகும். ‘‘இருபொருள் ஒப்பீட்டின் விளைவாகத் தெளிவானதோர் அகக்காட்சியை அளிப்பதே படிமமாகும்’’[23].

படிமம் ஓர் அனுபவத்தை வெளியிடும் கருவியாகும். குளத்தில் எறிந்த கல் பெரிய வட்டமான நீரலைகளை ஏற்படுத்துவதைப்போல் புதிய சிந்தனைகளை மனத்தில் தோற்றுவிப்பதாக அமைவது படிமமாகும்.

“படைப்பின் உள்நிற்கும் கருத்தையோ காட்சியையோ உணர்வையோ மனக்கண்ணிற்குப் புலப்படுத்துவது படிமமாகும். தெளிவு, பருப்பொருளின் துல்லிய பார்வை சொற்சிக்கனம். சுருக்கமான வெளியீடு இவற்றைக் கொண்டிருப்பது படிமமாகும்”[24] என்கிறார் இராம குருநாதன்.

படிமம் என்பது கவிதையில் உள்ள எல்லா உவமை உருவங்களையுமே குறிக்கின்றன. “படிமம் என்பது தன்னை இழந்த ஒன்றின் தனிப்பட்டநிலை இத்தகு படிமங்களே சங்க இலக்கியப் படிமங்களாகும்”[25].

## 4.12.1. சங்க இலக்கியத்தில் படிமம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் குறியீடும் படிமமும் சங்க காலத்திலேயே மேலோங்கி விளங்கின. சங்க காலச் சமூகம் அது உருவாக்கியுள்ள பாடுபொருளின் வரையறை, இவை தொடர்பான மொழி நடை, கற்பனை, அணிநயம், செறிவு இவை நிறைந்த சங்க இலக்கியத்தின் கவித்துவச் சிறப்புப் பற்றிய ஐயம் யாருக்கும் எழ முடியாது. இத்தகைய இலக்கிய மேம்பாடு நிறைந்த சங்க இலக்கியத்தில் உள்ளுறை, இறைச்சி என்னும் குறிப்புப்பொருள் அடங்கிய இலக்கிய நயங்கள் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் வேங்கை மரப்பூக்களின் மலர்ச்சி, யானை, புலி இவற்றின் பகை, பொழுது கூறும் தலைவன் நாட்டின் அருவி என்ற பல்வேறு படிமங்களின் வழியே தலைவன் தலைவி காதல் வாழ்வு விளக்கம் பெறுகிறது. சங்க காலத்தில் கருப்பொருள், உரிப்பொருள் பின்னணியில் படிமங்கள் படைக்கப்பட்டன.

படிமம், பண்டை இலக்கியத்தில் உவமை, உருவகம், உவமப்போலி என்ற பெயர்களில் அழைக்கப்பட்டது. உள்ளுறை, இறைச்சியில் காடுகளையும் மனத்தின் நுட்ப உணர்வுகளையும் பாடுகையில் உயிரோட்டமானது அப்பாக்களிடையே படிம அழகு படிந்திருக்கிறது. சொற்கள், சொற்றொடர்கள், அடிகள், முழுச் செய்யுள் எனப் படிமப்புனைவு அப்பண்டைச் செய்யுட்களில் பொலிகின்றது. இயற்கைக் காட்சிகளை வாழ்க்கைக் காட்சிகளோடு இழைத்துக் காட்டும் படிமங்களே சங்கப் படிமங்கள். செய்யுளின் செய்தியைப் படிமமே

முழுமையாகக் கூறிவிடுகிறது. மருதநிலத்துத் தலைவியின் பிரிவுத்துன்பும் ஓரடியாக இருக்குமாயின் மருத நிலம் பின்னணியைக் குழைத்துக் கொண்டுவரும் படிமம் காட்சியே பாடலை முழுமையாய் ஆளும் சங்கப் பாடல்களில் திணையை அடையாளங்காட்டிவிடும் காட்சிப் பதிவுகளாக இவை அமைந்திருக்கின்றன.

### 4.12.2. படிமப் பண்புகள்

1. உவமை
2. உருவகம்
3. முதிர் உவமை
4. முதிர் உருவகம்
5. அடைமொழி

இந்தப் பகுப்பிற்குள் சங்கப் படிமம் அமைகிறது.

### 4.12.3. உவமை

உவமை ஒப்பீட்டின் அடிப்படையில் தோன்றுவது ஒரு பொருளுக்கு இணையாக மற்றொரு பொருளைக் காட்டுவது. 'தாமரை முகம்' எனக் கூறுவது உவமையாகும். தமிழ் அணிநூல்களில் பல அணிகள் கூறப்பட்டாலும் பழைமை மிக்க உவமை அணியே தலைமை அணியாகக் கொள்ளப்படுகிறது. 'ஆங்கிலத்தில் உவமை என்று சொல்லப்படுவதற்கு இணையாகத் தமிழ் உவமையைக் கருதக்கூடாது. உவமை எல்லா அணிகளையும் உள்ளடக்கியதாகும்.

"உலைக்கல் அன்ன பாறை ஏறி"[26]

என்ற அடியில் 'அன்ன' என்ற உவம வாய்பாட்டை பாறை உலைக்கல் பாறையாகவே உணரப்படுகிறது. இது படிமப்பண்பு கொண்ட உவமை, உவமையாக வந்த படிமம்.

பச்சை பாம்பின் சூல் முதிர்ச்சியாய் பருத்த கரும்பின் கூம்பு, குறுந்தொகையில் காட்சிப்படுத்தப்படுகிறது.

“சின்னப்பசும் பாம்பின் ஆன் முதிர்ப் பன்ன

கனைத்த கரும்பின் கூம்புபொதி யவழி”[27]

என்ற அடிகளில் கரும்பின் பருத்த கூம்பே பாம்பின் தோன்றும் ஒருமிப்பைக் காட்சிப்படிமம் தந்து விடுகிறது.

“கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்

இரும்புலிக் குருளையின் தோன்றும்”[28]

என்ற அடிகளில் காட்சிப் படிமமே உருக்கொள்கின்றன. கரிய அடிமரத்தைக் கொண்ட வேங்கையின் பூக்கள் விழுந்த பாறைகள், வலிய புலிக்குட்டி போல் தோன்றும் காட்புடையே, இரவில் என்னைக் கூட வருபவருக்கு, வெண்நிலவே நீ நல்லது அல்ல என்று தலைவி சொல்லுகின்ற செய்தி படிமமாகக் காட்சிப்படுத்தப்படுகின்றன. குறுந்தொகை, நற்றினை, அகநானூறு போன்ற இலக்கியங்களில் படிமங்கள் பேரளவில் காணப்படுகின்றன. அவற்றினும் குறுந்தொகையே எண்ணற்ற அழகிய படிமங்களைக் கொண்டுள்ளது.

மிக நுட்பமான தெளிவான படக்ாகட்சிகளைப் போலவே படிமம், ஐங்குநுறூறு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், திருமுருகாற்றுப்படை, அகநானூறு போன்ற இலக்கியங்களில் காணப்படுகிறது. அவரை வயிறுமுட்ட அருந்திய மந்தின் வயிறு வணிகரின் சரக்குப்பை போல இருப்பதும் ஐங்குறுநூற்றில் கபிலர் செய்யுள் சித்திரமாகத் தீட்டுகிறார்.

“அவரை யருந்த மந்தி பகர்வர்

பக்கிற் றோன்று”[29]

என்பதும் உடைந்த வளையல் துண்டையொத்த காந்தட்பூவை, மலைபடுகடாத்தில்,

“வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்”[30]

எனக் காட்சிப்படுத்தலும் சிறுபாணாற்றுப்படையில்,

"பிடிக்கை அன்ன பின்னு வீழ்சிறு புறத்து"[31]

எனப் படிமப்படுத்தலாம்.

## 4.14. உருவகம்

உவமையின் மற்றொரு வளர்ச்சி உருவகமாகும். உவமையையும் பொருளையும் தனித்தனியாகக் கூறாமல் இணைத்துக் கூறுவதே உருவகமாகும். இதனைத் தொல்காப்பியர்,

"உவமப் பொருளை உணருங் காலை

மருவிய மரபின் வழக்கொடு வருமே"[32]

உவமப் பொருளை உவமிக்கப்படும் பொருளாக உணருங்காலை மருவிய மரபிலான வழக்கொடு வரும்.

உருவகத் தொடரில் உவமேயம் முன்னும் உவமை பின்னுமாக வரும். உருவக உருபு இடையில் வெளிப்படையாகவேனும் தொக்கியேனும் வரும்.

## 4.15. தகவல் தொடர்பியல் உத்திகள்

சொல்லும் கருத்து ஒன்றாக இருந்தாலும் அது சொல்லப்படும் விதம் பல முறைகளில் அமைகின்றன. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் அத்தகவலைக் கையாளுகின்றனர். சங்க இலக்கியப் பாடல்களில்,

- விமர்சன உத்தி
- விளம்பர உத்தி
- அறிவுரை கூறும் உத்தி
- வர்ணனை உத்தி

என நான்கு வகையான உத்திகள் கையாளப்படுவதைக் காணமுடிகின்றது.

### 4.15.1. விமர்சன உத்தி

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழும் செழுமையாக இருக்க வெண்டும் என்றும் தமிழிலக்கியம் நான்காம் தரத்திற்குத் தள்ளப்பட்டுவிடக் கூடாது எனத் தடுத்தாட்கொள்ள இன்றைய காலகட்டத்தில் விமர்சனத் தமிழ் தேவைப்படுகின்றது. விமர்சனம் என்பது ஒரு தனிக்கலை. இது ஒரு புதிய படைப்பாகவும், மக்களிடையே கருத்துக்களைப் பரப்பும் சாதனமாகவும் அமைகின்றது. விமர்சனத்திற்கான நியதிகளை, நியாயங்களை ஒளிவு மறைவின்றி உரைக்க வேண்டும். கொடுமைகள், அநீதிகள், அடக்குமுறைகள், அத்துமீறல்கள் போன்றனவற்றை விமர்சனத்தின் மூலம் கட்டுப்படுத்த முடியும்.

சங்க காலம் தொடங்கி இன்றளவும் விமர்சனம் இருந்து கொண்டே தான் வருகின்றது. ஆனால் சங்க காலத்தில் இருந்த விமர்சனம் நன்முறையில் அமைந்தள்ளது. சான்றாக அலர் அம்பல் தலைவியைப் பற்றி விமர்சனிக்கும் வகையில் அமைந்தாலும் அது திருமணம் என்ற நன்முடிவை ஏற்படுத்த வழி வகுக்கின்றது. புலவர்கள் அரசனை விமர்சனப்டுத்தும் பொழுது, அதைக்கேட்ட அரசர்கள் நல்வழிப்படுகின்றனர். இவ்வாறாகப் புலவர்கள் தங்கள் பாடல்களில் விமர்சன உத்தியைக் கையாண்டுள்ளனர்.

சான்றாக, ஆற்றல் மிக்க மறவனின் வீரத்தை விமர்சிப்பதாக,

“நீலக் கச்சை, பூஆர் அடை,
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல் வருங் களிற்றொரு வேல் துரந்து, இனியே
தன்னும் துரக்குவன் போலும் - ஒன்னலர்
எ்.கு வலத்தர் மாவொடு பரத்தர,
கையில் வாங்கி தழூஇ,
மொய்ம்பின் ஊக்கி, மெய்க கொண்டனனே!”[33]

என்ற பாடல் அமைந்துள்ளது.

### 4.15.2. விளம்பர உத்தி

விளம்பரம் என்பது இன்று நேற்றுத் தொடங்கியது அன்று. சங்க காலத்தில் இருந்தே தொடங்கிவிட்டது. வணிக அங்காடிகளில் பொருட்களை அடையாளப்படுத்தி மற்றவர்களுக்கு விளம்பரப்படுத்தப் பலவகையானக் கொடிகளை பறக்கவிட்டுள்ள செய்தியைச் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது. சங்க கால நாடோடிகளான பாணர், கூத்தர், விறலியர் போன்றோர்கள் அரசனிடம் தாங்கள் பெற்று வந்த பரிசில்களை மற்றவர்களுக்கு விளம்பரப்படுத்தியுள்ளனர். அரசர்கள் தங்களுக்குரிய அடையாளக் கொடிகள், இலச்சினைகள், ஆடைகள், பூக்கள் போன்றவற்றைக் கொண்டு தங்களை யார் என்று விளம்பரப்படுத்திக் கொண்டுள்ளனர். முதல், கரு, உரிப்பொருட்கள் மூலம் அப்பாடல் எந்தெந்தத் திணைத்துறையைச் சார்ந்தது என்பதை விளம்பரப்படுத்தின. இவ்வாறாக விளம்பர உத்தியைச் சங்கப் புலவர்கள் தங்கள் பாடல்களில் கையாண்டுள்ளனர்.

### 4.15.3. அறிவுரை கூறும் உத்தி

அறிவுரை கூறும் உத்தி அதாவது, செவியறிவுறுத்தல் "இவ்வுலகம் நிலையற்றது என்ற நிலையாமை உணர்வை அவர் நெஞ்சுரைப் பண்ணுதல் வேண்டும் என்ற உண்மை நிலையை உணர்ந்த காரணத்தால் நிலையாமை கூறிப்போர் ஒழிக்கும் பணியினை விரும்பி மேற்கொண்டார்கள்" [34]. இச்செயலைச் சங்கப் பாடல்களில் வெகுவாகக் காணமுடிகின்றது. தனிமனித வாழ்வில் தலைவன், தலைவியிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது தொடங்கி, குடும்பம் நடத்தத் தேவையான அறம். அரசன் தன் ஆட்சியை எவ்வாறு நடத்த வேண்டும். மக்களிடம் வரி வசூலிக்கமம் முறை, பகை அரசரிடம் எவ்வாறு போர் அறத்தைப் பின்பற்ற வேண்டும் என்பது வரையிலான செய்திகளைக் காண முடிகின்றது. தனிமனித ஒழுக்கம் சிதறும்போது, அரசாட்சி சிதறும்போது கூறும் அறிவுரைகள் இன்றளவு மட்டுமின்றி இனிவரும் எதிர்காலத்துக்கும் ஏற்கும் விதமாக அமைந்துள்ளது. அன்றையப் புலவர்களின் தனிச்சிறப்பு. இவ்வாறு அறிவுரை கூறுவதற்கு என்றே செவியறிவுறுத்தல் என்னும் தனித்துறையை அமைத்துப் பாடி உள்ளனர் சங்க காலப் புலவர்கள். இத்தகைய அறிவுரை கூறும் உத்தியைச் சங்கப் பாடல்களில் பல இடங்களில் காண முடிகின்றது.

### 4.15.4. வர்ணனை உத்தி

தான் சொல்லும் கருத்தை மற்றவர்களுக்கு எளிதில் சென்றடையும் விதமாகக் கையாளப்படும் உத்தி புத்திக்கூர்மை உத்தி எனப்படும். சங்க இலக்கியப் பாடல்களில் ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறிக் கொள்ளும் போது, தனக்குத் தெரிந்தவற்றைப் பிறருக்குத் தெரிவிக்க அனைவரும் பார்த்த, கண்ட பொருட்களை உவமைப்படத்திக் கூறும் வர்ணனை உத்தியைக் காணமுடிகின்றது. அதாவது புலவர்கள் தான் கூற விரும்பும் செய்திகளை நேரடியாக மக்களுக்கு கூறாது அதனோடு ஒப்புமைப்படுத்தச் சாதாரண குடிமக்களுக்கும் தெரிந்த, அறிந்த செய்திகளுடன் ஒப்புமைப்படுத்தி, கண்முன்னே கொண்டு வரும் வர்ணனையுடன் கூறுவது ஆகும். இன்று உள்ள தொலைக்காட்சிப் பெட்டி செய்தி நிகழ்வுகளை நம் கண்முன் நிறுத்துகின்றது. ஆனால் சங்க காலத்தில் புலவர்கள் தாம் கூறும் செய்திகளைப் படிப்பவர்களுக்குத் தனது உவமையின் மூலம் மனக்கண் முன் நிறுத்தி உள்ளனர். நாம் இன்று காணும் கடவுளின் தோற்றம் பற்றிய நிழற்படங்கள் யாவும் அன்றைய புலவர்களின் வர்ணனையே என்று கூறினால் மிகையாகாது. “இயல்பு அல்லாதனவற்றில் சங்க காலப் புலவர்கள் மூழ்கி விடாமல் நடந்த நடப்புகளை நாட்குறிப்புகள் போலக் கவிதைகளில் வடித்து வைத்தனர்”[35] என அறிய முடிகின்றது. இன்றைய மக்கள் அறிவு மிகுந்தவர்கள். ஆனால் அன்றைய மக்களோ மிகுந்த அறிவுள்ளவர்கள். எவ்வாறெனில், நேரடியாகக் கூறும் செய்திகளைப் புரிந்து கொள்வதைக் காட்டிலும் உவமையின் (உள்ளுறை, இறைச்சி) மூலம் கூறும் செய்திகளைப் புரிந்து கொள்ள புத்திக் கூர்மை தேவைப்படுகின்றது. எங்கேயோ, எப்பொழுதோ நிகழ்ந்த நிகழ்வை இன்று படித்தாலும், இப்பொழுது நடந்ததைப் போன்ற ஓர் அனுபவ உணர்வை அன்றைய புலவர்கள் தம் பாடல்களில் ஏற்படுத்தும் அளவிற்கு வர்ணனை உத்தியைக் கையாண்டுள்ளனர் என்று கூறினால் மிகையாகாது.

## 4.16. கோட்பாடு

புதிதாகச் செய்யும் செயலை வெற்றிகரமாக முடித்த பின்னர் அச்செயலைச் செய்வதற்கான வழிமுறைகளைப் பிறருக்குத் தெரிவிக்கின்றனர். இவ்வித வழிமுறைகளைக் கோட்பாடு எனக் குறிக்கலாம். எந்தவொரு செயலும் ஒரு கோட்பாட்டின்கீழ் தொடங்கும் போது அதனை வழிநடத்திச் செல்வது

எளிதாக அமைகின்றது. எந்த ஒரு துறையாக இருந்தாலும் ஒரு கோட்பாட்டின் கீழ் ஆய்வினை மேற்கொள்வது அவ்வாய்வு சிறக்க வழிகோலுகின்றது. சங்கப்பாடல்களில் கோட்பாடுகள் பயின்று வந்துள்ளன.

## 4.16.1. தொடர்பியல் கோட்பாடுகள்

தகவலைப் பரிமாறிக் கொள்ளும் வழிமுறைகளைத் தகவல் தொடர்பியல் கோட்பாடுகள் விளக்குகின்றன. “சமூக அமைப்புப் பற்றிய விதிகள். செயல்முறைகள், அளவியல் முறையிலான ஊகங்கள், பொதுக்கருத்துத் தொடர்பான நினைவுகள் போன்றவையும் சமூக வாழ்வு பற்றிய தனிமனித உற்றுநோக்கலும் உள்நோக்கும் கோட்பாடு எனப்படும்”[36]

சங்க கால முன்னோர்கள் ஒரு நல்ல வளமாக சமூக அமைப்பினை உருவாக்கி இருந்தனர். அவர்களின் கருத்துக்களும் பரிமாறப்பட்டு இருந்தன. அவர்களின் கருத்து வெளிப்பாட்டுத் திறன் மேம்பாட்டுடன் விளங்கியதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு, வலுவூட்டல் கோட்பாடு, சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு, தகவல் கோட்பாடு, மக்கள் சமூகக் கோட்பாடு போன்ற தொடர்பியல் கோட்பாடுகள் சங்கப் பாடல்களில் பயின்று வந்துள்ள திறத்தினைச் சங்கப் பாடல்கள் விளக்குகின்றன.

## 4.16.2. பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு

சமுதாயத்தின் பல்வேறு செயல்பாடுகளையும் அறிய தகவல் தொடர்பு உதவுகின்றது. “ஒலிபரப்புச் சமுதாயத்தின் எந்தப் பகுதியின் மீது திருப்பப்படுகிறதோ, அதைப் பொறுத்து ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிபலிப்புகளைத் தருகிறது. இதுவே பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு ஆகும்”[37]. சமுதாயத்தைப் பிரதிபலிக்கின்ற கண்ணாடியாகத் தொடர்பு விளங்குகிறது. உலகின் பல பகுதிகளைத் தூரத்தில் இருந்து உற்றுநோக்கி அறிய உதவுகின்றது. ஒவ்வொருவரும் தாம் பார்ப்பது, கேட்பது போன்றவற்றை உள்வாங்கிக் கொண்டு, தங்களின் எண்ணங்களுக்கேற்பப் பிரதிபலிப்புக் கருத்துக்களை வெளியிடுகின்றனர்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு சூழலில் ஒவ்வொர் உணர்வு, கருத்து, நோக்கு போன்றவற்றைக் கொண்டிருக்கபர். ஓவ்வொருவரின் நோக்கிலும் ஏதேனும் ஒரு சிறப்புக் கூறு இருந்தே தீரும். கற்பனையின் காரணமாக எழுகின்ற நோக்கில் சில பொருளுள்ள வெளிப்பாடுகள் தோன்றலாம். அவை தனிதமனித அல்லது சமுதாயத்தைப் பிரதிபலிக்கலாம். அவ்வகையில் சங்க காலப் புலவர்களின் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான சமூக வாழ்வியலையும் தனிமனித (மன்னன்) வாழ்வியலையும் எனச் சமுதாயத்தின் ஏதேனும் ஒரு செயலை வெளிப்படுத்திக் காட்டுகின்றன.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தான். அவரது நண்பரான பிசிராந்தையாரும் உடனிருந்து வடக்கிருந்தார். இதனைக் கண்ட மற்ற இரு புலவர்களின் எண்ண வெளிப்பாடுகளின் வேற்றுமையினைக் கீழ்கண்ட இரு பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

"திணைக்கும் காலை மருட்கை உடைத்தே
எனைப் பெருஞ் சிறப்பினோடு ஈங்கு இது துணிதல்
..............................................
வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுது இன்றி வந்தவன் அறியும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பு இறந்தன்றே"[38]

பொத்தியார், பிசிராந்தையாரின் வடக்கிருந்த செயல் வியப்பை அளிப்பதாகவும் கோப்பெருஞ்சோழன் என்னுடன் சேர்ந்து அவரும் வடக்கிருக்க வருவார் என்று கூறியது, மேலும் வியப்பை அளிப்பதாகவும் குறிப்பிடுகின்றார். இங்கு வியப்பின் வெளிப்பாடாக இப்பாடலில் தம் கருத்தைப் பதிவு செய்துள்ளார்.

"....................................
ஒருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்
சான்றோர் பல் ஆப;
சாலார் சாலார் பாலர் ஆகுபவே"[39]

கண்ணகனார், பிசிராந்தையாரின் வடக்கிருந்த செயல், உலக நடப்பை அஃதாவது கீழானவர் கீழானவர்களுடனும் மேலோர் மேலோர்களுடனுமாகத் தான் நட்பு வைத்திருப்பார்கள் என்னும் செயலைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஆகவே, பொத்தியார் வியப்பின் வெளிப்பாடாக, இச்செயலைக் கண்டார். கண்ணகனாரோ, உலகியல் நடப்பாக இச்செயலைக் காண்கின்றார். வடக்கிருத்தல் செய்தி என்பது ஒன்று. ஆனால், அதை இவ்விரு புலவர்களும் உள்வாங்கிக் கொண்டு ஒருவர் வியப்பின் வெளிப்பாடாகவும் மற்றொருவர் உலகியல் நடப்பாகவும் சமுதாயத்திற்கு வெளியிடுகின்றனர்.

“கலைஞர்களின் வறுமையைப் போக்கத் தோன்றிய ஆற்றுப்படையைப் புலவர்கள் தாம் விரும்பும் அரசனைப் புகழ்வதற்குரிய உத்தியாகப் பயன்படுத்திக் கொண்டு அதனை ஓர் இலக்கிய அமைப்பாக உருவாக்கினர்”[40] என்பது இங்குக் கருதத்தக்கதாக அமைகின்றது. ஆற்றுப்படுத்தல் என்ற ஒரே செய்தியைக் கூற சங்க இலக்கியத்தில் ஐந்து ஆற்றுப்படை நூல்களை ஐந்து புலவர்களும் தங்களின் எண்ணங்களுக்கு ஏற்ப வெளிப்படுத்தியுள்ளதைக் காண முடிகின்றது. அவரவர் கற்பனைகள், கண்ட காட்சிகள், அவரவர்க்கென்ற சிறப்புக்களை வெளிப்படுத்திப் பதிவு செய்துள்ளதே ஒவ்வொரு ஆற்றுப்படைக்கும் உள்ள வேறுபாடாக வெளிப்படுகின்றது.

ஒரே செய்தியைக் கண்டவர்கள் அதனைப் பிறருக்கு வெளிப்படுத்தும் போது பல்வேறு முறையில் அமைவதைப் பிரதிபலிப்பு வெளிப்பாட்டக் கோட்பாட்டின் வழி அறிய முடிகின்றது.

### 4.16.3. வலுவூட்டல் கோட்பாடு

மக்களை ஒன்று திரட்ட ‘தொடர்பியல் மிகவும் இன்றியமையாதது. “சாதாரண மனிதன் மனவலிமை உடையனவாக இருக்க வேண்டும். அவன் தன்னிடம் ஏற்படும் தாக்கத்தை எண்ண அளவில் பரிமாறுகிறானா அல்லது சொல்லளவில் நிறகிறானா என்று ஆய்வது வலுவூட்டல் கோட்பாடு ஆகும்”[41] என்பர். சமுதாயத்தில் மக்களின் சக்தியை ஒன்று திரட்டி அதை நல்வழியில் கொண்டு செல்ல இக்கோட்பாடு உதவுகின்றது. துவண்டு இருக்கும் மனிதனைத் துள்ளல்படுத்த இந்த வலுவூட்டல் கோட்பாடு வழிகோலுகின்றது.

நம்மை ஒருவர் புகழ்ந்து பேசுவதன் மூலம் நம் மனம் மகிழ்ச்சி அடைகின்றது. ‘தட்டிக் கொடுத்து வேலை வாங்குவது’ என்பதும் இக்கோட்பாட்டின் வழி அமைகின்றது. “செருமுனையில் நிற்கும் வீரர்களைப் புகழ்ந்து பேசுவதன் மூலம், மன்னன் போர் வீரர்களின் நரம்புகளில் புது ரத்தம் பாய்ச்சுகிறான்”[42] என்பதும் இக்கோட்பாட்டின்கீழ் அமைகின்றது.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்றையும் தொடர்பியல் வழி நடத்திட முடியும். தன்னம்பிக்கை சார்ந்த செய்திகளை மக்களுக்குத் தருவதன் மூலம் ஒரு வலிமையான சமுதாயத்தைப் பெற முடியும் என்பதைச் சங்க மக்கள் அறிந்திருந்தனர். எனவே தான், இக்கோட்பாட்டின் வழி, பிரிவுத்துயரில் இருந்த தலைவியை ஆற்றுவித்தனர். மேலும், வறுமையால் வாடிய கலைஞர்களைத் தேற்றினார்கள். நன்நிமித்தங்கள், நம்பிக்கையூட்டுவது போன்றவை மக்களின் மனதை வலுவூட்டப் பயன்படுத்தப்படும் தொடர்பியல் சாதனங்களாகப் பயன்படுத்தியுள்ளனர்.

“…………………………என் தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே”[43]

என் தோழியின் தோளை நெகிழச் செய்த துன்பத்தை நீக்குவதற்கு விருந்தினர் வருவதைக் கரைந்து கூறிய காக்கையைக் கொண்டு காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் தலைவிக்கு வலுவூட்டியுள்ளார்.

வலுவூட்டல் கோட்பாட்டின்படி தனிமனிதன் அது ஆணோ, பெண்ணோ என இருபாலரும் அரசன், வீரன் என்போரும் வலுவூட்டப்பட்டனர் என்பதை இதன்வழி அறிய முடிகின்றது.

### 4.16.4. சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு

ஒரு சமுதாயத்தை வழிநடத்திச் செல்லும் அமைப்பே அச்சமுதாயத்திற்குத் தலைமைப் பொறுப்பாக அமைகின்றது. அது அரசாங்கமாக இருக்கின்றது. ஒவ்வொரு துறைகளும் தங்களுக்குள்ள பொறுப்புகளைச் சரிவரசந் செய்தால் அது சீராக நடைபெறும். “ஒரு பத்திரிகையானது சமுதாயத்தில் தனக்குள்ள பொறுப்பினை உணர்ந்து

அதற்கேற்றாற்போல் நடந்து கொள்வது சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு எனப்படும்”[44] என்பர். சங்க காலத்தில் புலவர்களே பத்திரிகை ஆசிரியர் போலும், அவரின் நூல்களே இதழ்கள் போலும் செயல்பட்டன. சமுதாயப் பொறுப்புகளை உண்மை, துல்லியம், நடுவுநிலைமை ஆகிய பண்புகள் வழி நிறைவேற்ற வேண்டும்.

மக்களுக்குத் தகவல் அளித்தும் தகவல்களை விவாவதித்து விளக்கம் அளித்தல், மக்களை வழிப்புடன் இருக்க செய்தல், பண்பாடு, நாகரிகம் போன்றவற்றைப் பரப்பிப் பாதுகாத்தல் போன்ற பணியினைச் சமுதாயப் பொறுப்புக் கோட்பாட்டின் வழி செய்ய வேண்டும். அதையே தான் நம் சங்கப் புலவர்களும் தங்கள் பாடல்களின் வழி செய்துள்ளனர்.

அரசன் சமுதாயப் பொறுப்பில் இருந்து தடம்புரளும் போது, அங்கே புலவர்கள் அவனைத் திருத்திச் சரிசெய்கின்றனர்.

“பல்சான்றீரே, பல்சான்றீரே
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்
பயல் இல் மூப்பின் பல்சான்றீரே
கணிச்சிக் கூர்ம படைக் கருந்திறல் ஒருவன்
பிணிக்கும் காலை, இரங்குவிர் மாதோ;
நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்; அதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்ஆற்றுப் படுஉம் நெறியுமோர் அதுவே”[45]

நல்வினைகள் செய்ய மாட்டிராயினும் தீவினைகளையாவது செய்யாது விலக்குங்கள். அச்செயல்தான் எல்லாராலும் புகழப்படுவது, அதுமட்டுமல்லாமல் நம்மை நன்னெறியில் செலுத்தும் வழியாகும் என்று நரிவெரூஉத்தலையார் நல்ல பத்திரிகை ஆசிரியனாக இருந்து மக்களுக்கு வாழ்க்கையினைப் பற்றிப் புரிய வைக்கின்றார்.

“நாடா கொன்றோ; காடா கொன்றோ;

அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;

எவ்வழி நல்லவர் ஆடவர்

அவ்வழி நல்லை; வாழிய நிலனே"[46]

ஆடவரது ஒழுக்கமே உலக மேம்பாட்டிற்கு அடிப்படை. நற்பண்பும் நற்செயலும் உடைய ஆடவரே நாட்டின் நலத்துக்கும் புகழுக்கும் வளத்துக்கும் காரணமாவார் எனச் சமுதாயத்திற்குத் தேவையான தனிமனித ஒழுக்கம் பற்றி ஔவையார் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகின்றது.

"..............................

உண்பது நாழி; உடுப்பவை இரண்டே;

பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே

செல்வத்துப் பயனே ஈதல்"[47]

உண்பது, உடுப்பது ஆகிய செயல் இரண்டிலும் அரசனும் ஆண்டியும் ஒன்றேயாதலால், பெற்ற செல்வத்தால் செய்ய வேண்டுவது ஈதலறமே என்பதைச் சமுதாயத்திற்கு உணர்த்த மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியுள்ளதை, இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

## 4.16.5.தகவல் கோட்பாடு

தகவல் தொடர்பியல் செய்திகள் குறியீடுகளாக மாற்றப்படுகின்றன. மாற்றப்பட்ட குறியீடுகள் மக்களுக்குப் பரப்பப்படுகின்றன. இம்முறை தகவல் கோட்பாடு எனப்படுகின்றனது. "எழுத்து, இசை, பேச்சு, படங்கள், பிற தொடர்புக் குறிகள் போன்றனவற்றிற்கு இக்கோட்பாட்டைப் பயன்படுத்தலாம்"[48]. தகவல் செயல்முறையைப் பற்றிய புதிய பயனுள்ள கண்ணோட்டத்தைத் தருவது, குறியீடுகளின் வழியாகச் செய்திகளைப் பரப்புவது ஆகியன இரண்டும் இக்கோட்பாட்டின் கொள்கைகளாகும்.

எழுத்து, பேச்சு, இசை, உடலசைவுகள், மெய்ப்பாடுகள் போன்ற குறியீடுகளின் வழியாகத் தகவல்கள் பரப்பப்படுகின்றன.

"தோளும் தொல்கவின் தொலைத்தன நாளும்

அன்னையும் அருந்துயர் உற்றளை; அலரே,

பொன்அணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்,

எழுஉறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்

நேரா எழுவர் அடிப்படக் கடந்த

ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிது என"[49]

இப்பாடலில் தலைவி, தன்னுடைய தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்து சென்றான். அதனால் தனக்குப் பசலை ஏற்பட்டது. இதைக் கண்ட அயலவர் அலர் தூற்றினர். இங்கு தகவல் கோட்பாடானது பசலை நோய் என்ற குறியீட்டின் வழி கண்டோருக்கு, தலைவியின் தனிமைத் துயரைத் தெரிவித்துள்ளனர்.

"ஏனம் ஆகிய நுனைமுரி மருப்பின்

குடாஅம் வார்த்து கடுஞ்சினம் பொத்தி

மரம்கொல் மழகளிறு வழங்கும் பாசறை"[50]

இப்பாடலில் இளயானைகள் மதநீரைப் பொழிகின்றன. வாய்ச்சினம் மூளப்பெற்றுப் பகைவருடைய கணைய மரம், காவல்குளம் முதலியவற்றை அழித்தன எனக் கூறப்படுகின்றது. பண்டைக் காலத்தில் ஒவ்வொரு நாட்டு மன்னனுக்கும் காவல் மரம் உண்டு. அதனை வெட்டினால் நாங்கள் உங்கள் நாட்டுடன் போரிடப் போகிறோம் என்று பொருள். இங்கு காவல் மரத்தை வெட்டுவது என்ற குறியீட்டின் மூலம் போரிடப் போகும் தகவல் கூறப்படுகின்றது.

"பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை

வளிபொறு தெண் கண் கேட்பின்

அது போர் என்னும் எண்ணையும் உளனே"[51]

இப்பாடலில் முரசில் காற்று மோதம் ஓசையைக் கேட்ட அதியமான் அது போர்ப் பறையின் முழக்கம் எனக் கருதுவான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு தகவல் கோட்பாடானது ஓசை என்ற குறியீட்டின் வழி போர் தொடங்கும் செய்தியைப் பரப்பப் பயன்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

### 4.16.6. மக்கள் சமூகக் கோட்பாடு

உலகின் தன்மைகளை மக்களிடம் அறிவித்து, உலகக் கண்ணோட்டத்தையும் விமர்சனக் கண்ணோட்டத்தையும் உருவாக்குவது மக்கள் சமூகக் கோட்பாடு. சமுதாயப் பண்பாட்டினைப் பற்றிய கருத்துக்கள் இக்கோட்பாட்டின் வழி கூறப்படுகின்றது. மக்களை மாயச் சூழலில் இருந்து உண்மையான உலகின் சூழலுக்கு இழுத்து வருகின்றது இக்கோட்பாடு. இது மக்களின் வாழ்விற்கு உறுதுணையாக உள்ளது. “மக்களது பணிகள், ஓய்வு, அதிகார வர்க்கத்திற்குக் கீழ்ப்படிதல், தனிமை, போட்டி, ஒற்றுமைக் குறைவு, கீழ்மட்ட மக்களுடன் ஒற்றுமையாக இருத்தல், சமுதாயப் பங்கேற்பு, மக்கள் சமூகத்தைத் தாங்குவது போன்ற பணிகளைச் சாதாரண மனிதன் நாள்தோறும் செய்கின்றான் எனக் கூறுகிறது. இவற்றிற்குக் காரணமாகத் தகவல் தொடர்பு இருக்கிறது என்பது இக்கோட்பாட்டின் கருத்து ஆகும்”[52]. சமூகத்தில் மக்கள் ஒன்றுகூடி வாழ வேண்டும். சமுதாய அக்கறையுள்ளவர்களாக மக்களை மாற்ற இக்கோட்பாடு உதவுகின்றது. ஒவ்வொரு காலகட்டத்திலும் சமுதாயத்தில் காணும் அவலங்களைப் படம் பிடித்துக் காட்ட இக்கோட்பாட்டைப் பயன்படுத்துகின்றனர். தனிமனிதனைச் சமுதாய இயல்பினனாக மாற்றுகின்றது.

சங்க காலச் சமூக அமைப்பானது, மன்னன், குடிமக்கள் என்ற நிலையில் இருந்துள்ளது. மக்களும் மன்னன் துணையில்லாமல் மன்னன் ஆதரவில்லாமல் வாழ முடியாது என்று நம்பி வந்தனர். இதனால் மன்னன் மக்களுடைய உயிராக மதிக்கப்பட்டான்.

மக்கள் சமூகக் கோட்பாட்டினைப் பயன்படுத்தி, மன்னர்களின் தனியதிகாரத்தைக் கண்டித்தனர். மன்னர்கள் அறிவுடையவர்களின் சொற்களைக் கேட்டத்தான் நடக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். குடிமக்களைக் கொடுமைப்படுத்தாமல் நீதியுடன் மன்னன்தான் வாழ முடியும் என்று தெளிவாகக் கூறினர்.

“செய்குவம் கொல்லோ, நல்வினை, எனவே
ஐயம் அறாஅர் கசடு ஈண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவு இல்லோரே;
யானை வேட்டுவன் யானையும் பெறுமே;

குறும்பூழ் வேட்டுவன் வறுங் கையும் வருமே;

அதனால் உயர்ந்த தேட்டத்து உயர்ந்தினோர்க்கு

செய்வினை மருங்கின் எய்தல் உண்டு எனின்

தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்"[53]

உயர்ந்த குறிக்கோளுடன் செயல்படுபவன் முயற்சியின் மூலம் அதனை உறுதியாகப் பெறுவான். வெறுமனே மானிடனாய்ப் பிறந்து குறிக்கோள் இன்றி வாழ்பவன் எதையும் தன் வாழ்நாளில் பெற முடியாதவனாகின்றான் என்று கூறி மக்களுக்குக் குறிக்கோளுடன் வாழக் கற்றுக் கொடுப்பதை இப்பாடல்வழி அறிய முடிகின்றது.

"வேந்து உறு தொழிலோடு வேறுபுலத்து அல்கி

வந்துவினை முடித்தனம் ஆயின்…."[54]

மன்னன் கொடுத்த வேலையைக் குடிமக்கள் செய்து முடித்த செய்தியினை இப்பாடல் குறிப்பிடுகின்றது. ஒரு நல்ல சமுதாய அமைப்பானது தன் நாடு நன்றாக இருக்க வேண்டி ஒவ்வொரு குடிமகனும் தன் கடமையை நிறைவேற்ற வேண்டும் என்பதை இங்கு இக்கோட்பாடு உணர்த்தி நிற்கின்றது.

"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்

அசையுநர் இருந்தோர்க்கு அரும் புணர்வு ஈன்ம், என

வினைவயின் பிரிந்த வேறுபடு கொள்ளை"[55]

தம்முடைய இல்லத்தில் செயலற்றுச் சோம்பியிருப்பவர்க்கு இம்மைக்குரிய புகழும் இம்மை, மறுமைக்குரிய இன்பமும் மறுமையிலும் இன்புறச் செய்யும் கொடைமையும் ஆகிய மூன்றும் கைகூடாது. எனவே தான் தலைவர் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றுள்ளார் என இப்பாடல் குறிப்பிடுகின்றது. தான் மட்டும் செல்வந்தனாக வாழாது பிறர்க்கும் சிறிது தானம், தர்மம் செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டினை இதன் வழி அறிய முடிகின்றது

"நீர்இன்று அமையா யாக்கைக் கெல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"[56]

உலகம் வாழ, உலக மக்கள் நாகரிகத்துடன் வாழ, அவர்கள் வாழ்க்கையிலே சலிப்பில்லாமல் ஊக்கத்துடன் முன்னேற உதவி செய்வது உணவு ஒன்று தான். ஆதலால், முதல் முதலில் நாடாள்வோர் உடனடியாகக் கவனிக்க வேண்டியது உணவைப் பற்றித்தான். நாட்டிலே உணவுப் பண்டம் பெருக நாடாள்வோர் உதவி செய்ய வேண்டும் என்னும் கருத்தை இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

"அரசர்களை நோக்கி, கவிஞர்கள் அரச பதவி பொறுப்புடையது. வாய்த்தற்கரியது என்பதை உணர வேண்டுமென்றும் வற்புறுத்தி, வறுமை கொடியது. எனவே, இரவலர்க்கு உதவுக. போர்க் கொடுமைகளைத் தவிர்க்க; வாழ்வு நிலையற்றது; அதன் இன்பங்களைத் துய்ப்பாயாக; நெல்வளம் பெருகச் செய்க; உழவர் குடியினரைப் பாதுகாப்பாயாக; கலைகள் வளர உதவுவாயாக என்றெல்லாம் அறிவுரை கூறுவர்"[57] என்பது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாக அமைகின்றது.

மக்கள் சமூகக் கோட்பாட்டின் படி சங்கப் புலவர்கள் ஒரு தனிமனிதன் குடும்பத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகள், நாட்டிற்குச் செய்ய வேண்டிய கடமைகள் என்ன என்பதையும் ஒரு அரசன் தன் நாட்டிற்குச் செய்ய வேண்டிய நன்மைகள் என்ன என்பதையும் குறிப்பிட்டதை மேற்கண்ட சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

## 4.17. சமுதாயத்தில் இலக்கியத்தின் வெளிப்பாடு

மன்னனையும் வீரர்களையும் மையமாகக் கொண்டு பெரும் பண்பாட்டை இலக்கியமாக மனிதச் சமூகத்திற்குக் கொடையாக அளித்த சங்கப் புலவர்கள், மனிதப்பண்பை வளர்ப்பதற்கான பாதையைப் பதிவு செய்ததுடன் பண்பாட்டோடு சில பொதுவான செய்திகளையும் பதிவு செய்துள்ளனர்.

"இனக்குழுக்களாக வாழ்ந்த மக்கள் வேட்டையாடியும் உணவு சேகரித்தும் வாழ்க்கை நடத்தி வந்தனர். பகுத்துண்டு வாழ்ந்த இவ்வேட்டைச் சமுதாயத்தில் தாய்வழிச் சமுதாயமே தோன்றியது. பெண் உறவும் தாயன்பும்

பெண்ணிற்கு முதலிடம் தந்தன. காடுகிழாள், கொற்றவை போன்றவை சமுதாயத் தெய்வங்களாக விளங்கி வந்தன. வேலைப் பிரிவினைக்கு அச்சமுதாயத்தில் இடம் இருந்ததில்லை. கால்நடை வளர்க்கும் குலங்கள் பிரிந்துபோன நிலைதான் சமுதாய வழியில் ஏற்பட்ட முதல் மாபெரும் வேலைப்பிரிவினை என்பர் ஏங்கல்சு"[58]

"வேட்டைச் சமுதாயம் பிற்காலத்தில் தந்தைவழிச் சமுதாயம் தோன்றுகிறது. வேளாண் தொழிலில் மாடுகள் இழுக்கும் கலப்பை பயன்படுத்தப்பட்ட பிறகு தாய்வழிச் சமுதாயம் நீக்கப்பட்டது. இனக்குழுவின் சமூகச் சிக்கல்களை முடிவு செய்ய மன்றம், நாளிருக்கை, நாளவை ஆகிய இனக்குழப் பொதுக்கூட்டங்கள் இருந்தன. உணவு சேகரிப்போர், வேட்டையாடுவோர், பண்டைய வேளாண்குழுவினர், கால்நடை வளர்ப்போர் ஆகியோர் வாழ்ந்த இனக்குழுச் சமுதாயத்தில் குழு ஒற்றுமையும் குலச் சமத்துவமும் அவர்களுடைய வளமையாக இருந்தன"[59].

"இயற்கையோடு போராடுவதற்குத் தேவையான கருவித்தொகுதிகள் இவர்களிடம் இல்லை. இயற்கையை எதிர்த்துப் போராடி அவர்கள் தங்கள் உணவைப் பெற்றனர். இனக்குழுச் சமுதாயத்தில் 'கள்' முக்கிய இடம் பெற்றிருந்தது. பிறப்பு, இறப்பு, விழாக்கள் போன்ற பல நிகழ்ச்சிகளின் போது ஆடவரும் மகளிரும் கள்ளருந்தி ஆடிப்பாடினர். இனக்குழு மக்கள் எழுத்தறியாதவர்கள். ஆதலால் அவர்களுடைய மந்திரப்பாடல்கள் வாய்மொழியாகவே வழங்கி வந்தன. அவர்களுடைய பாடல்கள் உடலசைவுகளுடன் இசைச்சந்தத்துடன் வெளிப்பட்டன"[60].

"சங்க காலம் சமூக மாறுதல் நடைபெறும் ஒரு காலக்கட்டம். பழைய இனக்குழுச் சமூகம் அழிந்து அரசு தன்னை நிலைநிறுத்திக் கொள்ள முயலும் காலம். பொருள் உற்பத்தி, வணிகம் முதலியவை பெருகும் நோக்கில் உடைமைக்கு ஆதிக்கம் ஏற்படும் காலம்"[61] என்பது கோவை ஞானியின் கருத்து ஆகும்.

முன்னைய களவு மணமுறை மாறிச் சமூகத்தில் பெற்றோர் தம் தகுதிக்கு ஒத்த மணமகனைத் தேடும் காலம் வந்துவிட்டது. முன்னைய சமத்துவச்சமூக நிலைகளை விரும்பும் சான்றோர் களவு மணத்திற்கு ஆதரவு

தேடி கவிதைகள் எழுதுகிறார்கள். பாரி முதலிய இனக்குழுத் தலைவர்கள் ஒழிக்கப்பட்டு நால்வரிசைப் படைகளோடு வரும் மருதநில வேந்தர்கள் ஆட்சி ஏற்படுகிறது. உடைமைக்கும் அரசுக்கும் வெற்றி கிட்டியபோது, சங்க இலக்கியம் ஆக்கம் தகர்ந்து முடிவு பெறுகின்றது”[62] என்று ஞானி சங்க இலக்கிய முடிவு பற்றிக் கூறுகின்றார்.

“இனக்குழுச் சமுதாயம் அழிந்து அரசு என்னும் நிறுவனம் கட்டமைத்த காலம் சங்க காலம்”[63] என்று நா.வானமாமலை குறிப்பிட்டுள்ளார்.

வேட்டைச் சமுதாயம், கால்நடைச் சமுதாயம் அடங்கிய இனக்குழுச் சமுதாயத்திலும் நிலத்தை மையமாகக் கொண்ட நிலவுடைமைச் சமுதாயத்தில் வெளிவந்த இலக்கியங்கள் நிகழ்காலச் சமுதாயத்தைச் சித்தரிக்க முயற்சி செய்தன.

தமிழரின் ஆதிகால வரலாற்றை அடையாளப்படுத்த இலக்கியங்கள் துணை போகும் போது இலக்கியக் காலகட்டமே புலவனின் பண்பாட்டு வரலாற்றின் முதற் புள்ளியாக அமைந்து விடுகின்றது. தமிழரின் இலக்கியக் காலத்திற்கு முன்பு மனித வாழ்வு, குறிப்பாகத் தமிழரின் வாழ்வு பண்பட்ட வாழ்வாகவே தென்படுகின்றது. இலக்கிய வளர்ச்சி, இலக்கியப்பதிவு என்பதும் கூட கடந்த மக்களின் வரலாற்றின் எச்சம் என்றே கருத முடியும். இக்கருத்து சங்க இலக்கியத்திற்கு சாலப் பொருத்தமாக அமையும்.

திணைப்பகுப்பையும், ஒழுக்கப்பண்பையும் ஏற்று வாழ்ந்த தமிழ்ச் சமுதாயத்தின் பிரதிபலிப்பாகவே இலக்கியமாக வெளிப்பட்டிருக்கிறது. மனிதன் தான் பக்குவமடைய எடுத்துக் கொண்ட காலத்தைக்காட்டிலும், தமிழ் இலக்கியத் தொடர்ச்சியிலிருந்து இன்றுவரை உள்ள கால எல்லை மிகக்குறுகியதாகவே இருக்கும். மனிதன் பண்புடன் பக்குவமடைந்த பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரே தன்னுடைய பண்பாட்டையும் உயர்நெறிகளையும் பதிவுசெய்ய வேண்டுமென்ற எண்ணம் அவனுக்குத் தோன்றி இருக்க வேண்டும். அல்லது ஒழுக்கப் பண்பாட்டு நெறிகளைப் பதிவு செய்ய அவனை சமூகம் நிர்பந்தம் செய்திருக்க வேண்டும். இயற்கையான பதிவோ (அ) நிர்பந்தமோ, எதுவாயினும் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் (அ) பதிவு செய்யப்பட்டிருக்கும் மரபு நெறிகள் உயர்ந்ததாகவே தென்படுகின்றன என்பது தான் தமிழர் வாழ்ந்த வாழ்வின் உச்சமாகக் கருத முடிகின்றது.

கரடுமுரடான தனிமனித வாழ்வு, பண்பற்ற வாழ்வு, தனிமனிதனுக்குள் அனுபவத்தால் புகுந்த மரபு நெறிகள், இந்நெறிகள் குழுவினரிடம் விரிவடைதல், குழு மனப்பான்மையை உருவாக்குதல் போன்ற வளர் நிலையில் தன்னை மட்டுமே பார்த்திருந்த ஒருவனின் வளர்ச்சி இன்னொருவனையும் புரிந்து நடக்கக் கற்றுக் கொண்டு, இப்பண்பு மற்றவர்க்குப் பயன்படும் வகையில் பொதுப்பண்பாக மாற்றி நிலைநிறுத்திய காலக்கட்டத்திலேயே இலக்கியம் தோன்றியிருக்கின்றது. மாறுபட்ட, மாறக்கூடிய, சமுதாய மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற நேரத்தில், மேலெழும்பிய சங்க இலக்கியத்தில் மாறிய சமுதாய நிகழ்வும் மாறுவதற்கு முந்தைய நிகழ்வும் இடம் பெற்றிருக்கின்றன. கால மாற்றங்கள் இயல்பாக நடைபெற்ற போதும் இலக்கிய வெளிப்பாட்டின் தொனி உள்ளடக்கம், கட்டமைப்பு இவையாவும் ஏறத்தாழ ஒரே தன்மையைப் பெற்றுள்ளன.

சமுதாய மாற்றங்களோடு பின்னிப் பிணைந்த மக்கள் கூட்டம் நிகழ்காலத்தின் ஒழுங்கற்ற நிலையை மையமாகக் கொண்டு வரைமுறைகளையும் சமுதாய ஒழுகலாறுகளையும் வெளிப்படுத்த முற்பட்டிருக்கின்றது. உருவாக்கப்பட்ட பண்பு நெறிகள் இலக்கியமாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன என்பதே தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியாகக் கருத முடிகின்றது.

“பெரும்பாலும் தாழ்ந்த சாதியைச் சார்ந்த பாணர்களால் இவர்கள் இயற்றிய பாடல்கள் பாடப்பட்டன. இப்பாடல்கள் சொல்லாட்சியாலும் கவிதை உத்திகளாலும் செப்பம் செய்யப்பட்ட செந்நெறி இலக்கியங்களாகத் திகழ்ந்தன”[64] என்பது ஜான் சாமுவேலின் இலக்கிய வரையறையாகும்.

“சங்கப்பாடல்கள் ஒரு குழுவினரின் பாடல்கள் என்பதற்குரிய சிறந்த உயர்தனிச் சான்றுகளாகக் காட்சி தருகின்றன. இப்பாடல்கள் சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு கூட்டத்தினரின் உள்ளத்தினையும் ஆளுமையினையும் வெளிப்படுத்தி நிற்கின்றன”[65] என்று இலக்கியத்தின் உள்ளடக்கம் வெளிப்படுகின்றது.

“கவிதையைத் தொழிலாகக் கொண்டு கவிதையின் மூலமாக வாழ்க்கையை நடத்த வேண்டிய கட்டாய நிலை கவிஞனுக்கு ஏற்படும் போது அவன் தன் காலத்தின் ரசனைப் போக்குகளை முற்றிலும் புறக்கணித்து விடாது, அவன் வாழும் சமுதாயச் சூழலின் ரசனைப்போக்கு உயர்ந்திருக்கும்போது

அவனது படைப்புகளின் தன்மையும் சிறந்து காணப்படும்”[66] என்பதானலேயே கவிஞனின், புலவனின் பார்வை அவனால் சமுதாயத்தின் உயர்வாகக் கருதப்படும் மன்னனையே சூழ்ந்து கிடந்தது.

“அவர்கள் வாழ்ந்த சமுதாயம் செயல்திறம் மிக்க சமுதாயமாக இருந்ததால் அவர்கள் படைத்த இலக்கியங்களும் ஆற்றல் இலக்கியங்களாகத் திகழ்ந்தன”[67] என்பதினால் சங்க இலக்கியத்தின் செவ்வியல் தன்மையினால் அச்சமுதாயம் சமுதாய, பண்பாட்டு மரபு நெறிகளால் செயல்திறம் மிக்க சமுதாயமாக விளங்கியிருக்கின்றது என்பது உறுதிப்படுத்திய ஒன்றாகும்.

“இலக்கியங்களைப் பாடிய கவிஞர்கள் உயர்குடி வர்க்கத்தினரோடு நெருங்கிய உறவுகொள்வதோட அவ்வர்க்கத்தின் அனுபவங்களையும் இலட்சிய வேட்கைகளையும் கலைப்பொருளாக மாற்றுபவர்களாகக் காணப்படுகின்றனர். இத்தகைய கட்டாய நிலை உயர்குடி வர்க்கத்தினரின் அனுபவங்களை அவர்களின் மொழியில் இக்கவிஞர்களைப் பேச வைக்கின்றது”[68].

காதலைச் சிறப்பிக்கும் சங்க அகப்பாடல்களும் வீரத்தைப் புகழும் புறப்பாடல்களும் போர் வீரர்கள் நிறைந்த உயர்குடி மக்களின் வாழ்க்கையைப் பெரும்பாலும் மையமாகக் கொண்டன. புறப்பாடல்கள் உயர்குடி மக்களின் ஆற்றல் மிகுந்த வீரவாழ்வினைச் சித்திரிக்க, அகப்பாடல்கள் இதே வர்க்கத்தினைச் சார்ந்தவர்களின் காதல் நிகழ்ச்சிகளை இலட்சியப்படுத்திக் காட்டின”[69]. “இனக்குழு வாழ்க்கை சிதைந்து நிலமானிய சமுதாயமும் அரசும் வளர்ச்சி பெறுவதை அவ்விலக்கியங்கள் காட்டுகின்றன”[70].

“ஒவ்வொரு மொழிக்கும் ஒரு வீரநிலைக் காலம் இருந்திருக்கின்றது. இவ்வகையில் தமிழர்களின் வீரநிலைக்காலம் சங்ககாலத்திற்கு முன்பே முடிந்து விட்டது”[71] என்ற கருத்தின் வழியாகச் சங்க இலக்கியத்தில் இடம் பெறுகின்ற பாடல்களின் பொருண்மைகள் கிரேக்க, எபிரேய வீரயுகப் பாடல்களுடன் ஒப்பிட்டு அவற்றின் தன்மையை இவ்விலக்கியங்களும் பெற்றிருக்கின்றன.

## 4.18. இலக்கியம் படைக்கத் தேவைப்பட்ட சூழல்

பண்டைய வாழ்நிலையில் உழைக்கும் தரப்பினர் தொழில் முறைகளை உருவாக்கி தங்களின் வாழ்க்கையைச் செவ்வனே நடத்திச் சென்றுள்ளனர். உடல் உழைப்பு, முறை உழைப்பு என்ற இரண்டு வித உழைப்பினால் மக்கள் சமுதாயம் வாழ்ந்து வந்தது. உடல் உழைப்பு கொண்டு பல்வேறு தொழில்களை அடையாளப்படுத்தி வாழ்வதற்கு மாறாகத் தங்களது புலமைத்துவத்தால், அறிவையே மூலதனமாகக் கொண்டு கவிதையையே தொழிலாகக் கொண்ட மக்கள் பண்டைக் காலத்தில் வாழத்தான் செய்தனர். ஒருபுறம் புலமையினால் கவிதைபாடுவது, மறுபுறம் வறுமையினால் வேறு தொழில் செய்ய முடியாமல் கலையைப் படைத்து வாழும் மக்கள் கூட்டம் என்ற நிலையில் இலக்கியம் படைக்கத் தமிழ்ச்சமுதாயம் முற்பட்டது. இவ்விலக்கியங்களின் வாயிலாக மக்களின் பண்பாட்டு வாழ்நெறிகளை வெளிப்படுத்திக் காட்டியுள்ளனர்.

"சங்கச்சமுதாயம் போர் வீரத்துக்கு மட்டுமே முதன்மை கொடுப்பதாய் அதனை மட்டுமே போற்றுவதாக இருந்திருந்தால் அது ஓர் போர் வெறிச் சமுதாயமாகக் காட்சியளித்திருக்கும். ஆனால் பண்டைய தமிழ்ச்சமுதாயம் அவ்வாறு திகழவில்லை. மனித சமுதாயம் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய பல நல்லறங்களை அது வலியுறுத்தியதுடன் மறம் இழுக்கா மான வீரத்திற்கும் முக்கிய இடத்தைக் கொடுத்துள்ளது. அதனால் தான், அச்சமுதாயம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் பலராலும் போற்றப்படுகின்ற ஒரு நல்ல சமுதாயமாக விளங்குகிறது"[72].

"மனித இனத்தைப் பொறுத்த வரை, சிறுசிறு குழுக்களாக வாழத் தொடங்கிய இனக்குழு வாழ்க்கை நிலையிலேயே, அவர்களுக்குள் போர் என்பது தவிர்க்க இயலாத ஒன்றாக அமைந்துவிட்டது. வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் போன்ற அன்றாட வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்து கொள்வதில் கூட ஒரு குழு மற்றொரு குழுவுடன் மோதிக்கொண்டது. இனக்குழு சமூகமாகப் பரிணமித்த பொழுது, அதன் தேவைகள் மிகுதிக்கேற்ப போர்ச்செயல்களும் மிகுந்தன"[73].

"சங்ககாலத் தமிழ்மக்கள் வீரத்துக்கு முக்கிய இடம் கொடுத்த செய்திகளைச் சங்கப்பாடல்களில் காணலாம். அதைப்போலவே உலகெங்கிலும்

ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் வீரத்துக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்த மக்கள் வாழ்ந்திருக்கின்றனர். அக்கால கட்டங்களில் தோன்றிய இலக்கியம், சிற்பம், ஓவியம், இசை, நடனம் போன்ற நுண்கலைப் படைப்புகளிலும் நாகரிகம், சமயம், பண்பாடு போன்ற சமூகம் சார்ந்த நடைமுறைகளிலும் இவ்வீரப்பண்பும் முக்கிய இடத்தைப் பெற்று இருந்தன. ஒரு சமூகத்தில் வீரப்பண்புகள் மேலோங்கி இருந்த காலத்தை அச்சமூகத்தின் வீரநிலைக்காலம் என்றும் அக்கால கட்டத்தில் அச்சமூகத்தின் எண்ணத்தை வெளிப்படுத்தும் வகையில் தோன்றிய இலக்கியங்களை வீரநிலைப் பாடல்கள் (Heroic Poetry)"[74] என்றும் பவுரா கருதுகின்றார்.

"பண்பாடு என்பது வாய்மொழி மரபாய்ப் பரப்பப்படும் அன்றி எழுத்து மூலமாகவும் பிரபாவங்களாலும் உணர்த்தப்படும். இதனால் வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும் வாழ்வு பொருளுடையதாகவும் பயனுடையதாகவும் மாறுதற்கு வழி ஏற்படும்"[75].

மேலும்,

"700 ஆண்டு கால இடைவெளியில் சங்க இலக்கியங்கள் எழுதப்பட்டமையால் அவை காட்டுகின்ற குடும்பம், அரசு முதலான நிறுவனங்களை ஒரு காலத்தன என்று கொள்ளுதல் வரலாற்று வழுவை விளைவிக்கும். அன்றியும் ஒரு காலத்திற்குள்ளேயே வெவ்வேறு போக்குகள் அமைந்த முரண்பாடுடைய சமுதாயம் என்ற தவறான முடிவையும் அந்தப் போக்கு தரக்கூடும். எனவே, சங்க இலக்கியங்கள் திராவிட மானுடவியலின் பல்வேறு கால கட்டங்களைக் காட்டுவதாகக் கொள்ளுதலே சரியாகும்"[76] என்று க.ப.அறவாணன் குறிப்பிடுகின்றார்.

சமுதாயத்தின் உந்துதலினால் தனிமனிதனின் வெளிப்பாடாகவே கலைப்படைப்புகள் வெளிவருகின்றன. இதன் வழியாக கலையும் கவிஞனும் சமுதாயச் சொத்தாகக் கொள்ளப்படுகின்றனர். எனவே சமுதாயத்தைப் பிரதிபலித்துக் காட்டுவதில் கலைப்படைப்பை விட சிறந்த உதாரணம் இருக்க முடியாது. சங்க இலக்கியத்தின் வழியாகப் புலவர்கள், சான்றோர்கள் சங்கப் பண்பாட்டை விளக்கி நிற்பதினால் மனித வாழ்விற்கு நட்பாய் சங்க இலக்கியம் இருந்து வருகின்றது என்பது உறுதிப்படுத்தப்படுகின்றது. வாழும் சமூகத்திற்கும்

இலக்கியத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை இலக்கியங்கள் வெளிப்படுத்தும் சமூகத்தையும் சமூகத்திலிருந்து உருவாக்கப்படுகின்ற இலக்கியமும் உறுதிப்படுத்துகின்றன.

“பொதுவாகவே இலக்கிய ஆய்வில் சமூகவியல் அணுகுமுறை தழைக்க நான்கு வழி முறைகளைக் குறிப்பிடுவர். 1. சமுதாயத்தில் இலக்கியத்தின் பங்களிப்பை ஆய்வது. 2. சமுதாயத்தில் இலக்கியம் ஏற்படுத்தியுள்ள விளைபயனை ஆய்வது (அ) தாக்கத்ததை ஆய்வது. 3. இலக்கியத்தில் சமுதாயத்தின் பங்கினை ஆய்வது 4. இலக்கியத்தில் சமுதாயம் உண்டாக்கிய விளைபயனை அல்லது தாக்கத்தை ஆய்வது”[77] என்ற நான்கு வழிமுறைகளின் அடிப்படையில் இலக்கியத்திலிருந்து சமூகம், சமூகத்திலிருந்து இலக்கியம் என்ற தொடர்நிலையைச் சரியாக உள்வாங்கிக் கொள்ள முடியும்.

“மனிதன் அறிவால் அறிந்து வாழும் பகுதியைவிட விரும்பியும் வெறுத்தும் நம்பியும் சோர்ந்தும் போற்றியும் துற்றியும் வாழும் பகுதியே மிகுதியாகும். ஒரு சமுதாயத்தின் விறுப்பு, வெறுப்பு, நம்பிக்கை முதலியவற்றை வளர்த்துப் பயன்படுத்துவது அந்தச் சமுதாயத்தின் இலக்கியமே”[78] என்பது வெளிப்படையானதாகும். சமுதாயத்தின் பிரதிபலிப்பே இலக்கியமாகத் திகழ்வதால் நிகழ்காலத்தின் வாழ்நிலைகள் இலக்கியமாகப் பதிவு செய்யப்பட்டு வெற்றியும் பெறுகின்றன. “வர்க்க வேறுபாடுகள் தோற்றம் பெற்று வளர்ச்சி அடைந்து ஒரு சமுதாயத்தின் படைப்புகளாகச் சங்க இலக்கியங்கள் காட்சி தருகின்றன. தனி உடைமைகளின் தோற்றத்தால் தொழில்பாகுபாடுகளும் தொழில் பாகுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகுப்புகளும் இக்காலத்தில் தோன்றத் தொடங்கின. இத்தகைய தொழில் பாகுபாடுகளும் தொழில் பாகுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகுப்புகளும் இக்காலத்தில் தோன்றத் தொடங்கின. இத்தகைய தொழில் பாகுபாடு, பாணர்கள், கூத்தர்கள், புலவர்கள் போன்ற பல்வேறு வகுப்பினர்கள் தோன்றக் காரணமாக அமைந்தது”[79].

‘‘கலைகளைத் தொழிலாகக் கொண்ட இப்பிரிவினர் ஏனைய உழைக்கும் வர்க்கத்தினரிடமிருந்து வேறுபட்டுக் காட்சி தந்தனர். மேற்கூறிய கலைஞர்களின் பொருளாதார நிலைகளும் தொழில்களின் இயல்பும் அவர்களை ஆளும் வர்க்கத்தினரைச் சார்ந்திருக்குமாறு கட்டாயப்படுத்தின’’[80].

“ஆளும் வர்க்கத்தினரின் புகழ்பாடி அவர்களின் ரசனை உணர்வுகளுக்கு விருந்தளித்து அவர்களை மனமகிழச் செய்து அவர்கள் தரும் பரிசுப்பொருட்களைப் பெற்று வாழ்க்கைப் பயணத்தைத் தொடரவேண்டிய கட்டாயச்சூழலில் பண்டைய பாணர்களும் புலவர்களும் வாழ்ந்து வந்தனர். எனவே தத்தம் கலைகளையும் இலக்கியங்களையும் ஆளும் வர்க்கத்தின் ரசனைப்போக்குகளுக்கேற்ப, அக்கால அரசியல் சூழலுக்கு ஏற்பவும் உயர்குடி மக்களின் உள்ளப்போக்கிற்குப் பொருந்தவும் அமைக்க வேண்டிய கட்டாயநிலை, சங்ககாலக் கவிஞர்களுக்கும் இருந்தது”[81] என்ற நிலையில் புலவர்களை அரசர் பாதுகாப்பில் வைத்துக் கொண்டிருந்தார்கள். புலவர்கள் மன்னனைத் தேடி அடைக்கலம் புகுந்ததற்கான சில அடிப்படைக் காரணங்கள் உள்ளன.

சங்கப் புலவர்கள் சிறந்த உளவியலறிஞர்களாக விளங்கியுள்ளனர். மன்னர்களின் உளப்பாங்கினை விருப்பு வெறுப்புகளைப் புரிந்து கொண்டு அவர்களை மகிழ்விக்க முயன்றுள்ளனர். புலவர்கட்குப் பெரும் பொருளைப் பரிசிலாக அளித்தமைக்கு அறிவை மதித்தமை மட்டும் காரணமன்று. புலவர்களின் வாழ்த்தும் பாராட்டும்கூடக் காரணாக அமைந்தன எனத் தோன்றுகிறது.

## தொகுப்புரை

- அமைப்பியல் என்பது இலக்கிய, சமூகக் கட்டமைப்பினை அதன் கட்டமைப்புக் கூறுகளைக் கொண்டு மதிப்பிடும் முறைமை ஆகும். அமைப்பியல் கோட்பாட்டின் அடிப்படையில் சங்க இலக்கியப் பனுவல்களை ஆராயும்போது புதிய ஆய்வு முடிவுகளை அடையமுடியும்.

- சங்க இலக்கியம் தொகுக்கப்பெற்ற முறையும் பகுக்கப்பட்ட செறிவும் சிறப்புத் தன்மை வாய்ந்ததாக உள்ளது. அடிவரையறை, அகம் - புறம் என்ற திணைப் பாகுபாடு, ஐந்திணை அடிப்படையிலான பாகுபாடு என்று பல நிலைகளில் சங்கப் பாடல்கள் வகைதொகைப் படுத்தப்பட்டுத் தொகுக்கப்பெற்றுள்ளன.

- முதற்பொருளையும் கருப்பொருளையும் உரிப்பொருளையும் உள்ளடக்கிய தெளிவாக வகுக்கப்பட்ட இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையிலேயே புலவர்கள் பாடல்களைப் புனைந்தனர். உள்ளுறை, இறைச்சி போன்றவை கவிதையை இன்னும் செறிவானதாக்க உதவியிருக்கின்றன. படிமம், உருவகம் போன்ற உத்திகளின் வாயிலாக செம்மையான கவிதை உருவாக்கத்தைப் புலவர்கள் நிகழ்த்தியுள்ளனர் என்பது புலனாகிறது
.

- தகவல் தொடர்பியல் உத்திகள் பலவற்றைத் தமது படைப்பாக்கச் செயல்பாடுகளில் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். விமர்சன உத்தி, விளம்பர உத்தி, அறிவுறுத்தும் உத்தி, வர்ணனை உத்தி முதலான உத்திகள் அவை.

- சங்கப் புலவர்களின் புலமைத் தொழிற் செயற்பாட்டில் பல்வேறு தொடர்பியல் கோட்பாடுகளை இனம்காண முடிகின்றது. அவை, சங்கச் சான்றோரின் இலக்கியத் தொழிற்பாட்டு நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

- சமூகத்தில் நிகழுவதை எடுத்துக்காட்டும் பொறுப்பு மிக்கவர்களாகச் சங்கச் சான்றோரை அடையாளம் காணமுடிகிறது. அதாவது, காலத்தின் பதிவுகளைச் செய்யும் வரலாற்றுக் கடமைகளை உணர்ந்தே சங்கப்

புலமைத் தொழிலோர் செயல்பட்டுள்ளனர். எனவே, தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, ‘பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு’ தொடர்புடைய பல அம்சங்களைச் சங்கச் செய்யும் மரபில் காணமுடிகிறது.

- புரவலர்களின் வலிமையையும் சிறப்பையும் பண்பாட்டு நிலையையும் வலுப்படுத்தும் நோக்கத்தோடு பல்வேறு இலக்கியப்படைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. புரவலர்களின் புகழை எட்டுத் திக்கும் கொண்டு சேர்க்கும் பெரும்பணியையும் புலமைத் தொழிலோர் செய்துள்ளனர். எனவே புரவலர்களுக்குக் கருத்தியல் வலுச் சேர்க்கும் பணிக்குக் கவிதையைக் கொண்டு செலுத்தியுள்ளனர் என்பதை அறிய இயலுகிறது. இது தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, ‘வலுவூட்டல் கோட்பாட்டுக்கு’ எடுத்துக்காட்டாக அமைகின்றது.

- சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு என்னும் கருத்துருவத்தின் வெளிப்பாடாகப் பல சங்கச் செய்யுள்களை எடுத்துக்காட்டலாம். இலக்கியம் படைத்தல், புரவலர்களிடமிருந்து பரிசில்கள் பெறுதல் என்பதையும் விடுத்துச் சமுதாயக் கட்டமைப்பை எடுத்துக்காட்டுவதும் அவரவர் பொறுப்பு நிலைகளை வற்புறுத்துவதும் புலமைத் தொழில் புரிவோரின் கடப்பாடாக இருந்துள்ளது. இக்கடப்பாட்டை அவர்கள் விரும்பி ஏற்றதோடு மட்டுமல்லாமல், அவற்றை மிகவும் சீரிய முறையிலே செய்துள்ளனர் என்பது அவர்தம் கவிதைகளில் வெளிப்படுகிறது.

- சங்கக் கவிதைகளை வரலாற்று இன வரைவியல் கவிதையாக வாசிக்கும் நவீன வாசிப்பு முறை தற்காலத்தில் முதன்மை பெற்று வருகிறது. அதாவது, குறிப்பிட்ட இலக்கியப்படைப்பு அது தோற்றம் பெற்ற இனக்குழுவின் பல்வேறு பண்பாட்டு அம்சங்களை, அசைவுகளைத் தெள்ளத் தெளிவாக வெளிப்படுத்தும் தன்மை கொண்டதாக இருக்கிறது என்பது. அவ்வாறாக, பொருளியல் சார் தேவைகளுக்காகப் பாடப்பட்ட பாடல்களாகப் பல செய்யுள்கள் இருப்பினும், அவை பொருளியல் கோரிக்கைகளையும் தாண்டி இலக்கியமாகவும் குறிப்பாக அக்காலகட்டத்துச் சமுதாயத்தின் பல்வேறு இன வரைவியல்

செய்திகளை உள்ளடக்கிய அரிய கருவூலமாகவும் திகழ்வதைக் காணமுடிகிறது.

- சங்க காலம் என்பது அரசு உருவாக்கம் நிறைவுபெற்ற காலகட்டமும் அதன் துணை அமைப்புகளாகிய சட்டங்கள், இராணுவம் முதலானவை கட்டமைக்கப்பட்ட காலமும் ஆகும். எனவே நிலத் தலைவர்கள் அல்லது அரசர்கள் தனித்த அதிகாரம் மிக்க மையங்களாக விளங்கினர். சட்டம் அவர்களின் காலடியின் கீழேயே இருந்தது. நீதி வழங்குவதையும் அவர்களே தங்களது சொந்தப் பொறுப்பில் வைத்துக் கொண்டிருந்தனர். இந்நிலையில் அதிகாரம் ஓரிடத்தில் குவியும்போது இயல்பாக எதிர்ப்படும் எதேச்சதிகாரப் போக்கு அவர்களிடத்திலும் தலையெடுத்தது. அவ்வேளைகளில் மக்களின் குரலை மென்மையாகவும் நயமாகவும் சில வேளைகளில் கடுமையாகவும் வெளிப்படுத்த வேண்டிய தேவை சங்ககாலப் புலமைத் தொழிலோருக்கு இருந்தது. அச்செயல்பாட்டினை மிகவும் செம்மையாகச் செய்தனர் என்பதையே சங்கப் பனுவல்கள் மெய்ப்பிக்கின்றன.

- இலக்கியத்தைச் சமூகத்தை அப்படியே பிரதிபலிக்கும் கண்ணாடியாகக் கொள்ளமுடியாவிட்டாலும் சமூகத்தின் அசைவியக்கத்தை வெளிப்படுத்தும் மிக இன்றியமையாத வெளிப்பாட்டுக் கருவியாகக் கொள்ள இயலும். அந்த அடிப்படையில் சங்கப் புலவர்கள், கலைஞர்கள் உள்ளிட்ட புலமைத் தொழில் புரிவோர் சமூக வெளிப்பாட்டுக்குரிய களமாகத் தங்கள் படைப்புகளை அமைத்தார்கள்.

- புலமைத் தொழில் புரிவோர் தங்கள் கவிதைகளைப் படைப்பதற்கான கருவிகளும் சூழல்களும் தனித்துவமானவை. அதாவது செய்யுள் கட்டமைப்பில் அவர்கள் தங்களின் படைப்புகளை உருவாக்கினர். மிகவும் எளிய கட்டமைப்பை உடைய அகவற்பா அமைப்பு அவர்தம் படைப்பாக்கச் செயல்பாடுகளுக்குக் கைகொடுத்தது எனலாம். பொதுநிலைச் சமூகமும் அரசு சமூகமும் இலக்கியப் படைப்புகளுக்குக் கொடுத்த சிறப்பிடத்தைப் புலமைத் தொழில் புரிவோர் மிகுதியும் உணர்வுப்பூர்வமாகப் பயன்படுத்திக் கொண்டனர் எனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. இ.எஸ்.தேவசிகாமணி (தொ.ஆ.) - இலக்கிய இஸங்கள், ப.55
2. தி.சு.நடராஜன், திறனாய்வுக் கலை, ப.126
3. அ.ஆலிஸ், கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும், ப.3
4. அ.ஆலிஸ், கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும், ப.3
5. தமிழவன், அமைப்பியல் வாதமும் தமிழ் இலக்கியமும், ப.59
6. கலி.நெய்தற்கலி.35
7. மாணிக்கம், டாக்டர், வ.சு.ப. தமிழ்க்காதல், ப.204
8. தொல்.994
9. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும், ப.6
10. தொல்.992
11. தொல்.993
12. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும், ப.8
13. ஐங்.12
14. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும், ப.32
15. மேலது. ப.33.
16. மேலது. ப.32
17. தொல்.1175
18. தொல்.1176
19. குறுந்.46
20. லேனா தமிழ்வாணன், மணிமேகலை தமிழ், தமிழ் அகராதி,ப.104
21. சுப.வீரபாண்டியன், கவிதை உத்திகள், ப.21
22. பொன்மணி வைரமுத்து, சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள், ப.299
23. சி.இ.மறைமலை, புதுக்கவிதை முப்பெரும் உத்திகள், ப.183
24. இராம.குருநாதன், இலக்கிய படைப்பியலும் திறனாய்வியலும்,ப.210
25. பொன்மணி வைரமுத்து, சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள், ப.309

26. குறுந்.12:2
27. குறுந்.35:2-3
28. குறுந்.47:1-2
29. ஐங்.271:1-2
30. மலைபடு.519
31. சிறுபாண்.38
32. தொல்.பொருள்.உவம.நூ.9
33. புறம்.274
34. கா.கோவிந்தன், பண்டைத்தமிழர் போர் நெறி, ப.301
35. புவியரசு, சங்க இலக்கியக் கதைகள், ப.3
36. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.323
37. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.347
38. புறம்.217:1,2,7-9
39. புறம்.218:5-7
40. மா.சம்பத்குமார், சங்க இலக்கியத்தில் கலைஞர்களின் வாழ்வியலும். பாணர்களின் தற்கால நிலையும், ப.62
41. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.34
42. ப.நடராசன், சங்க இலக்கியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளின் தாக்கம், ப.16
43. குறு.210.4-6
44. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.337
45. புறம்.195
46. புறம்.187
47. புறம்.189:5-7
48. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.353
49. அகம். 209"1-6
50. பதி.16:6,7
51. புறம்.89:7-9
52. வெ.கிருட்டிணசாமி, தகவல் தொடர்பியல், ப.355.

53. புறம்.214 : 1-9

54. அகம்.254:9-10

55. நற்.214:1-3

56. புறம்.18:18-19

57. ப.மருதநாயகம், புதுப்பார்வையில் புறநானூறு, ப.89

58. திலகவதி,க. சங்க கால மகளிர் வாழ்வியல், ப.18

59. திலகவதி,க. சங்க கால மகளிர் வாழ்வியல், பக்.18-19

60. திலகவதி,க. சங்க கால மகளிர் வாழ்வியல், பக்.19

61. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப.303

62. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப.303

63. வானமாமலை நா, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.202

64. ஜான் சாமுவேல்.ஜி. கலையும் கலைக்கோட்பாடும் ப.10

65. மேலது.ப.14

66. மேலது.ப.51

67. மேலது.ப.51

68. மேலது.ப.59

69. மேலது.ப.29

70. தில்லை நாதன்.கு, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.17

71. பாலசுப்பிரமணியன்.கு.வெ., சங்க இலக்கியத்தில் புறப்பொருள்,ப.359

72. நடராசன்.ப.சங்க இலக்கியத்தில் நாட்டுப்புற இலக்கியங்களின் தாக்கம்,ப.5:3

73. மேலது.ப.5:5

74. Bowra,C.M.Ancient Greek Literature of cit.P.47

75. மோகன், இரா.ப.இலக்கிய விருந்து,ப.26

76. க.ப.அறவாணன் (தமிழ் இலக்கியச் சமூகவியல், ப.63

77. மறைமலை.சி.இ. இலக்கியமும் சமூகவியலும், பக்.25-26

78. வரதராசன்.மு. இலக்கியத்திறன்,ப.57

79. ஜான் சாமுவேல்.ஜி.கலையும் கலைக்கோட்பாடும்,ப.2

80. மேலது.ப.2

81. மேலது.ப.2

# மதிப்பீடு

- சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் கலைஞர்கள் தங்களுக்குப் பரிசில் அளித்துப் புரக்கும் நிலத்தலைவனை அல்லது அரசனை, வெறுமனே பரிசில் அளிக்கும் கொடையாளியாக மட்டும் காணவில்லை. அவர்களுக்கிடையிலான உறவு நிலையானது தனித்துவம் மிக்கதாக உள்ளது. தங்களின் கலைத்திறனை வெளிப்படுத்திப் பரிசில் பெற்றுப்போகும் உறவு மட்டுமின்றி, மன்னனின் இறப்புவரையும்கூட நெருக்கமான உறவினைப் பேணியுள்ளனர் கலைஞர்கள். பரிசிலுக்காகப் பாடப்பட்ட பாடல்கள் மட்டுமின்றித் தலைவனை இழந்த தங்களின் கையறுநிலையை வெளிப்படுத்தும் பாடல்களையும் அவர்கள் புனைந்துள்ளனர்.

- புலவர்களுக்கும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களுக்கும் பண்பு அடிப்படையில் மெலிதான இடைவெளி தோன்றிப் பிற்காலத்தில் நிலைத்தது. எனினும் அவர்கள் இரு பிரிவினரும் பரிசிலர், இரவலர் ஆகிய பொதுச் சொற்களாலேயே குறிப்பிடப்படுகின்றனர்.

- புலவர்கள் தங்களைப் பரிசில்கள் அளித்துப் புரக்கும் அரசர்களைப் புகழ்ந்து பாடும் படைப்புகளைப் படைத்துள்ளனர். அவர்களைக் குறிப்பிடும் பாடல்களின் தங்களைப் போன்ற கலைஞர்களின் வாழ்க்கை அமைப்பையும் செல்நெறியையும் இணைத்துப் பாடியுள்ளனர். எனவே புலவர்களின் பாடல்களில் நிலத் தலைவர்கள் பற்றிய குறிப்புகளோடு இரவலர்களின் நிலை பற்றிய பல்வேறு குறிப்புகளையும் காணமுடிகிறது.

- புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் தங்களின் படைப்புத் துறையிலும் அவற்றை அரங்கின்மிசை அளிக்கும் தன்மையிலும் நுண்ணிதான வேறுபாடுகளைக் கொண்டிலங்குகின்றனர். புலமைத் தொழிலில் நுட்பமான வேறுபாடுகள் தலைகாட்டத் தொடங்கியமைக்கான அடிப்படைகளை அவர்தம் படைப்புச் செயல்பாடுகள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனாலும் பரிசில் பெறுபவர்கள் என்னும் அடிப்படையில் புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் ஒரே நிலையில் காணப்படுகின்றனர்.

- சங்க இலக்கியப்பாடல்கள் பலவற்றில் கூத்தர், பொருநர், பாணர், பாடினி, விறலி ஆகிய கலைஞர் பெருமக்களின் வறுமைநிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மிகவும் பின்தங்கிய அடித்தட்டு மக்களைவிட மிகவும் வாழ்நிலையில் கீழான நிலையில் கலைஞர்கள் வாழ்ந்தமையைப் பல பாடல்கள் சித்தரிக்கின்றன. ஆனால், புலவர்கள் ஒப்பீட்டளவில் கலைஞர்களைப் போன்று வறுமையில் வாடியமை குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் பதிவு பெறவில்லை.

- புலவர்கள் தங்களின் பாடல்களில் கலைஞர்கள் பெற்ற பரிசில்களைப் பதிவு செய்துள்ளனர். அதன் நோக்கம், தலைவனது வள்ளல்தன்மையைச் சிறப்பிப்பது மட்டுமல்ல; தனக்கும் தன் புலமைக்கும் தக, தலைவன் மிகுதியான பரிசில் அளித்து வரிசை செய்ய வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்கும் ஆகும்.

- புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து பாடும்போது, கலைஞர்கள் பற்றிய பல்வேறு குறிப்புகளையும் இணைத்துப் பாடியுள்ளனர்.

- புறநானூற்றில் மட்டும் 19 புலவர்கள், தங்களின் 23 பாடல்களில் கலைஞர்களின் கூற்றாகப் பாடியுள்ளனர். புலவர்கள், கலைஞர்களின் கூற்றாகப் பாடல் பாடும் மரபு வளமிக்கதாக இருந்தது என்பதைச் சங்கப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. கலைஞர்களின் கூற்றுக்களாகப் பாடல்களை அமைக்கும் மரபு தமிழ்க்கவிதைப் பரப்பில் இருந்ததெனினும் கூத்தர்களின் கூற்றாகப் புலவர்கள் பாடல்கள் ஏதும் புனையவில்லை என்பதும் கருத்திற்குரியது.

- அகத்திணையில் தலைவனுக்கும் தலைவிக்குமான ஊடலைத் தீர்க்கும் வாயிலாகப் பாணர், விறலியர் ஆகியோர் செயல்பட்டனர். அதைப்போலப் புறத்திணையில் புலவர்கள் தங்களைப் பாணராக வரித்துக் கொண்டு மன்னர்களுக்கிடையே தூது சென்றுள்ளனர்.

- பாணர்குடிப் புலவர்கள் என்று அறியப்படும் புலவர்கள், ஔவை, காக்கைப்பாடினி நச்செள்ளையார், நெடும் பல்லியத்தனார் ஆகியோர் ஆவர். கூத்தர் என்ற அடைமொழியை இயற்பெயராக உடைய புலவர்கள்

8 பேர் உள்ளனர். இவர்கள் கூத்துக் கலைஞர்களாகத் தெரியவில்லை. கூத்து மரபிலிருந்து வந்தவர்களாகவோ அல்லது கூத்தர்களைத் தங்களின் மரபு முன்னோடிகளாகக் கொண்டவர்களாகவோ இருக்க வேண்டும்.

- புலமைத் தொழிலில் ஈடுபட்டு வந்த பாணர்கள், கூத்தர்கள், பொருநர்கள், விறலியர், புலவர்கள் ஆகியோர் நிலத்தலைவர்களிடமும் சீறூர்த் தலைவர்களிடமும் மன்னர்களிடமும் தங்களது திறன்களை வெளிப்படுத்திப் பரிசில் பெறுவதைத் தங்களின் முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். எனவே புலமைத் தொழில் என்பது தனித்த தொழிலாக வளர்ச்சி பெற்ற காலகட்டமாகச் சங்க காலத்தைக் குறிப்பிடலாம்.

- இரந்து பெறும் பொருளைத் தான் மட்டும் வைத்து வாழாது, தங்களது சுற்றத்திற்கும் பகிர்ந்து கொடுத்து வாழும் நிறைவான வாழ்க்கையைப் புலவர்கள் வாழ்ந்துள்ளனர். இவ்வாறு சுற்றத்தாரையும் பேணி வாழும் வாழ்க்கை, புலமைத் தொழிலில் ஈடுபடுவோர்க்கு மட்டுமின்றிச் சங்க காலக் குடிமக்களின் பொது வாழ்க்கைப் பண்பாக இருக்கிறது.

- தலைவர்களிடம் தங்களது திறனை வெளிப்படுத்திப் பரிசில்களைப் பெறும் புலவோரும் கலைஞர்களும் தங்களது ஆளுமைகளை மிகச் சிறப்பாக வெளிப்படுத்தத் தவறுவதில்லை. அவர்கள் வெளிப்படுத்தும் ஆளுமைத் திறன்களின் வாயிலாக நிலத்தலைவர்களும் அவர்களிடம் பெரும் மதிப்புக் கொண்டுள்ளனர் எனலாம்.

- அரசர்கள் தங்களது அரசாட்சியிலும் குடிகளைப் பேணுதலிலும் குறைபாடுடையவர்களாகவும் தவறு செய்பவர்களாகவும் இருந்தால், தயக்கமின்றி அவர்களது குறைகளைச் சுட்டிக்காட்டும் பொறுப்புணர்வு மிகுந்தவர்களாகவே பெரும்பாலான கலைஞர்களும் புலவர்களும் இருந்துள்ளனர். நிலத்தலைவர்களின் குறைகளை மிகவும் நயமாக வெளிப்படுத்தும் நயத்தக்க நாகரிகம் கொண்டிருந்தனர்.

- புலமைத் தொழிலில் ஈடுபட்ட பிரிவினர் தாங்கள் பொருள் இரப்பவர்களாக இருப்பினும் தங்களது வறுமை நிலையினை நேரடியாக மிகுதியும் வெளிப்படுத்தவில்லை. மாறாக, வறுமை நிலையில்

இருப்பதாகப் பாடுவது ஒருவகையான பொருண்மை சார் உத்தியாக உள்ளது எனலாம்.

- பரிசில் பெற்று வாழும் இரவலர்களாகப் புலமைத் தொழிலினர் இருந்தபோதிலும் அவர்களுக்கான சமூக மரியாதை மிகவும் சிறப்பானதாக இருந்திருக்கிறது. தன் மதிப்பும் தற்சார்பும் உடையவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளவே இரவலர்கள் விரும்பியுள்ளனர். புலமைச் செருக்கு அவர்களிடம் மிகுந்திருந்தது. பொதுநிலைச் சமூகமும் அரசு சார் சமூகமும் அவர்களுக்கு மிகுந்த மரியாதை கொடுத்திருக்கின்றன. அரசர்களும் புலமைத் தொழிற்பிரிவினருக்கு உரிய மரியாதையை உறுதிப்படுத்தியுள்ளனர்.

- புலமைத் தொழிற்பிரிவினர் மிகுந்த நன்றியுணர்ச்சி உடையவர்களாகவும் அந்நன்றி உணர்ச்சியைத் தங்களது படைப்புகளில் தயக்கமின்றி வெளியிடுபவர்களாகவும் உள்ளனர். தங்களின் வாழ்க்கையும் இருப்பும் கொடைகளை வாரிக்கொடுக்கும் வள்ளல்களாலேயே சாத்தியமாகிறது என்பதை அவர்கள் உணர்ந்தவர்களாக உள்ளனர். அதனால் தங்கள் வாழ்க்கையைச் சாத்தியமாக்கும் வள்ளல்களுக்கு வாழ்வின் இறுதிவரை நன்றிக்கடன் பட்டவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொண்டுள்ளனர்.

- வள்ளல்களிடம் பெற்ற பொருள்களைத் தங்களது உறவுச் சுற்றம் மட்டுமின்றி விருந்தினர் உள்ளிட்ட பிறருக்கும் பங்கிட்டு அளிக்கும் பண்புடையவர்களாகப் புலமைத் தொழில் புரிவோர் இருந்தனர். தாங்கள் பெற்ற வளத்தைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்துள்ளனர்.

- நிலத்தலைவர்களாகிய வள்ளல்லகளிடம் இரந்து உண்ணும் வாழ்க்கை விதிக்கப்பட்டவர்களாயினும், ஆளுவோரிடம் முரண்பாடுகள் காணுமிடத்து அவற்றைச் சுட்டிக்காட்டத் தயங்காத துணிச்சல் மிக்கவர்களாகவும் புலமைத் தொழில் புரிவோர் இருந்துள்ளனர். நயமாக உரைத்தல், பணிவாக உரைத்தல் என்பதையும் தாண்டிச் சில வேளைகளில் கடுமையான முறையில் மறுத்துரைக்கவும் சுட்டிக்காட்டவும் செய்துள்ளனர் எனலாம்.

- அரசர்களிடம் புலமைத் தொழில் புரிவோர் கொண்டிருந்த உறவு தனித்துவமானது. அரசர்களின் வரிவிதிப்பை முறைப்படுத்துதல், நீர் வளம் பற்றி அறிவுறுத்துதல், ஒற்றுமையின் சிறப்பினை எடுத்துரைத்தல், அரசர்தம் மனைவியை அவர் பிரிந்திருப்பதைக் கடிந்துரைத்தல், கொலைக்குற்றம் புரியாமல் தடுத்தல் ஆகிய செயல்பாடுகளில் ஈடுபட்டனர்.

- அதிக வரி வசூலித்த பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரி கொள்ளும் முறைமை குறித்தும் அவ்வாறு முறைமையின்றி வரிகொள்ளும்போது ஏற்படும் இழப்புகள் குறித்தும் பிசிராந்தையார் அறிவுறுத்துகிறார். அரசனது ஆட்சிக்கு எதிராகக் குடிமக்கள் திரண்டுவிடக்கூடாது என்ற எண்ணத்திலேயே இவ்வறிவுரைகளை அவர்கள் வழங்கியிருத்தல் கூடும்.

- அரசன் தனது அரசு நிர்வாகத்தில் முதன்மையாகக் கொள்ளவேண்டியது நீர்வளத்தைப் பெருக்குதலாகும். இதனைச் சுட்டிக்காட்டிப் பாடல்களைப் புனைந்த பரிசிலர்கள் உளர். அரசர்களின் குடிப்பெருமையை அவர்களுக்கு எடுத்துக்காட்டி, சிறுமைகளிலிருந்து அவர்களைத் தடுத்தாட்கொள்ளும் பெரும்பணியையும் புலமைத் தொழிலினர் செய்துள்ளனர். ஒற்றுமையின் சிறப்பை எடுத்துக்காட்டி, ஒரு குடிக்குள் கொள்ளும் பகை இழுக்கானது என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளனர். பேகன் தனது மனைவி கண்ணகியைப் பிரிந்திருந்தமை கண்டு அவனது பிரிவினைத் தவிர்க்குமாறு சுட்டிக்காட்டியுள்ளனர் புலவர்கள். மலையமானின் குழந்தைகளைக் கொல்ல நினைத்த கிள்ளி வளவனின் பாதகச் செயலை உணர்த்தி, அதிலிருந்து குழந்தைகளை மீட்டெடுத்த புலவர்கள் உளர்.

- மன்னர்களின் அரசும் அரசு எந்திரமும் ஆட்சியும் எதை நோக்கி அமைய வேண்டும் என்பதையும் புலமைத் தொழில் புரிவோர் சுட்டிக்காட்டியுள்ளனர். புகழ் ஈட்டுதலின் இன்றியமையாமை குறித்தும் எடுத்துரைத்துள்ளனர். மன்னர்களுக்கு அன்பின் ஆழத்தையும் அருளின் ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தி, அறநெறியில் பற்றுக் கொள்ளச் செய்துள்ளனர்.

- அரசு என்பது சமூகத்தின் இன்றியமையாத அலகு என்பதையும் அரசு எந்திரம் தனக்குரிய செயல்பாடுகளைத் தெளிவாக வகுத்துக்கொண்டு செயல்பட வேண்டும் என்றும் புலமைத் தொழில் புரிவோர் வற்புறுத்தியுள்ளனர்.

- முழுமையான அதிகாரம் பெற்றவர்கள் சங்க காலத்து அரசர்கள். ஆனாலும் அவர்கள் புலவர்களையும் கலைஞர்களையும் மதித்து அவர்தம் கருத்துக்களுக்குச் செவிசாய்த்துள்ளனர். நல் குணங்களைக் கொண்டவர்களாகவும் அவர்கள் வெளிப்பட்டுள்ளனர். காட்சிக்கு எளியவர்களாகவும், சுற்றம் காத்தவர்களாகவும், மக்களைத் தாய் போன்று காப்பவர்களாகவும், மக்களின் நலத்தை நாடுபவர்களாகவும் இருந்துள்ளனர்.

- தன்னப் புகழும் இரவலர்களின் வறுமையைப் போக்குவதோடு மட்டுமின்றித் தனது அரசுக்கு வருவாயைக் கொடுக்கும் மக்களின் வறுமையைப் போக்கும் செயலிலும் அரசர்கள் ஈடுபட்டுள்ளனர். வேளாண்மையைப் பெருக்க உதவுதல், பாதுகாப்பளித்தல் ஆகியன அதன் வெளிப்பாடுகள் ஆகும்.

- அரசர்கள் ஈகைத்திறன் உடையவர்களா இருந்தமையைப் புலமைத் தொழிலோர் எடுத்துக்காட்டியுள்ளனர். கனவிலும் பெறமுடியாத பொருட்செல்வத்தினை வள்ளல்கள் வழங்கியுள்ளனர்.

- ஈதல், பெறுதல் குறித்த சிந்தனை சங்கச் சமூகத்தில் தெளிவானதாக இருந்துள்ளமையைப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. புலமைத் தொழில் புரிவோர், புரவலர் குறித்த இச்சிந்தனை, பொதுநிலைச் சமூகத்தில் பரவலான தாக்கம் பெற்றிருந்தமை புலப்படுகிறது.

- புலவருக்குப் புரவலர்கள் அளித்த பரிசில்கள் பல திறத்தனவாக உள்ளன. அதாவது, எண் அளவில் பொன் கொடுத்தல், ஊர்களை அளித்தல், அரச வருவாயில் பங்கு கொடுத்தல், ஆட்சி உரிமையில் இடமளித்தல், குன்றேறி நின்று கண்ணிற்கண்ட பரப்பை எல்லாம் கொடுத்தல், ஆட்சியை அளித்தல், புலவருக்காக வேள்வி செய்தல், தன்

மகனையே புலவருக்குத் தொல் கடனாற்றப் பணித்தல் முதலாகப் பல பரிசில்கள் புலமைத் தொழில் புரிவோருக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

- புலவருக்கும் அரசருக்குமான நட்பு செம்மாந்த நிலையில் அமைந்துள்ளது. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு, ஔவை - அதியமான் நட்பு, கபிலர் - பாரி நட்பு முதலானவை எடுத்துக்காட்டுகள் ஆகும்.

- புலவர்கள் பெரிதளவும் அரசர்களின் பரிசில்களை எதிர்நோக்கிப் பாடினர். ஆனாலும் தன் மதிப்பும் கொண்டிலங்கினர். நேரில் காணாது பரிசிலை அனுப்பிய அதிகமானிடம் புலவர் பெருஞ்சித்திரனார் முரண்பட்டார். ‘வாணிகப் பரிசிலன் அல்லேன்’ என்று தன்னைப் பிரகடனம் செய்த புலவர்களும் உளர்.
- மன்னர்களைப் பலநிலைகளில் இடித்துரைத்த புலவர்களும் புலமைத் தொழிலோரும் உளர். நாட்டுவளம், குடிகளைக் காத்தல், ஆட்சி முறைக்கு ஆலோசனை வழங்கல், புற ஒழுக்கத்தை இடித்துரைத்தல் முதலான பலநிலைகளில் புலமைத் தொழிலோர் அரசனிடம் உரையாடியுள்ளனர்.

- முகக்குறிப்பு அறிந்து ஈயும் புரவலர்களைக் குறித்துப் பலவாறாகப் புகழ்ந்து போற்றியுள்ளனர். பரிசிலர் தம்மை வரிசை கருதியிருக்கின்றனர். அவ்வரிசை உணர்ந்து புரவலர் பரிசளிக்க வேண்டும் என்று எதிர்பார்த்துள்ளனர். அவ்வரிசை அறியாத ஈயலில் முரண்பட்டு மறுத்திருக்கின்றனர்.

- அமைப்பியல் என்பது இலக்கிய, சமூகக் கட்டமைப்பினை அதன் கட்டமைப்புக் கூறுகளைக் கொண்டு மதிப்பிடும் முறைமை ஆகும். அமைப்பியல் கோட்பாட்டின் அடிப்படையில் சங்க இலக்கியப் பனுவல்களை ஆராயும்போது புதிய ஆய்வு முடிவுகளை அடையமுடியும்.

- சங்க இலக்கியம் தொகுக்கப்பெற்ற முறையும் பகுக்கப்பட்ட செறிவும் சிறப்புத் தன்மை வாய்ந்ததாக உள்ளது. அடிவரையறை, அகம் - புறம் என்ற திணைப் பாகுபாடு, ஐந்திணை அடிப்படையிலான பாகுபாடு என்று

பல நிலைகளில் சங்கப் பாடல்கள் வகைதொகைப் படுத்தப்பட்டுத் தொகுக்கப்பெற்றுள்ளன.

- முதற்பொருளையும் கருப்பொருளையும் உரிப்பொருளையும் உள்ளடக்கிய தெளிவாக வகுக்கப்பட்ட இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையிலேயே புலவர்கள் பாடல்களைப் புனைந்தனர். உள்ளுறை, இறைச்சி போன்றவை கவிதையை இன்னும் செறிவானதாக்க உதவியிருக்கின்றன. படிமம், உருவகம் போன்ற உத்திகளின் வாயிலாக செம்மையான கவிதை உருவாக்கத்தைப் புலவர்கள் நிகழ்த்தியுள்ளனர் என்பது புலனாகிறது.

- தகவல் தொடர்பியல் உத்திகள் பலவற்றைத் தமது படைப்பாக்கச் செயல்பாடுகளில் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். விமர்சன உத்தி, விளம்பர உத்தி, அறிவுறுத்தும் உத்தி, வர்ணனை உத்தி முதலான உத்திகள் அவை.
- சங்கப் புலவர்களின் புலமைத் தொழிற் செயற்பாட்டில் பல்வேறு தொடர்பியல் கோட்பாடுகளை இனம்காண முடிகின்றது. அவை, சங்கச் சான்றோரின் இலக்கியத் தொழிற்பாட்டு நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

- சமூகத்தில் நிகழுவதை எடுத்துக்காட்டும் பொறுப்பு மிக்கவர்களாகச் சங்கச் சான்றோரை அடையாளம் காணமுடிகிறது. அதாவது, காலத்தின் பதிவுகளைச் செய்யும் வரலாற்றுக் கடமைகளை உணர்ந்தே சங்கப் புலமைத் தொழிலோர் செயல்பட்டுள்ளனர். எனவே, தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, 'பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு' தொடர்புடைய பல அம்சங்களைச் சங்கச் செய்யும் மரபில் காணமுடிகிறது.

- புரவலர்களின் வலிமையையும் சிறப்பையும் பண்பாட்டு நிலையையும் வலுப்படுத்தும் நோக்கத்தோடு பல்வேறு இலக்கியப்படைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. புரவலர்களின் புகழை எட்டுத் திக்கும் கொண்டு சேர்க்கும் பெரும்பணியையும் புலமைத் தொழிலோர் செய்துள்ளனர். எனவே புரவலர்களுக்குக் கருத்தியல் வலுச் சேர்க்கும் பணிக்குக் கவிதையைக் கொண்டு செலுத்தியுள்ளனர் என்பதை அறிய இயலுகிறது.

இது தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, 'வலுவூட்டல் கோட்பாட்டுக்கு' எடுத்துக்காட்டாக அமைகின்றது.

- சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு என்னும் கருத்துருவத்தின் வெளிப்பாடாகப் பல சங்கச் செய்யுள்களை எடுத்துக்காட்டலாம். இலக்கியம் படைத்தல், புரவலர்களிடமிருந்து பரிசில்கள் பெறுதல் என்பதையும் விடுத்துச் சமுதாயக் கட்டமைப்பை எடுத்துக்காட்டுவதும் அவரவர் பொறுப்பு நிலைகளை வற்புறுத்துவதும் புலமைத் தொழில் புரிவோரின் கடப்பாடாக இருந்துள்ளது. இக்கடப்பாட்டை அவர்கள் விரும்பி ஏற்றதோடு மட்டுமல்லாமல், அவற்றை மிகவும் சீரிய முறையிலே செய்துள்ளனர் என்பது அவர்தம் கவிதைகளில் வெளிப்படுகிறது.

- சங்கக் கவிதைகளை வரலாற்று இன வரைவியல் கவிதையாக வாசிக்கும் நவீன வாசிப்பு முறை தற்காலத்தில் முதன்மை பெற்று வருகிறது. அதாவது, குறிப்பிட்ட இலக்கியப்படைப்பு அது தோற்றம் பெற்ற இனக்குழுவின் பல்வேறு பண்பாட்டு அம்சங்களை, அசைவுகளைத் தெள்ளத் தெளிவாக வெளிப்படுத்தும் தன்மை கொண்டதாக இருக்கிறது என்பது. அவ்வாறாக, பொருளியல் சார் தேவைகளுக்காகப் பாடப்பட்ட பாடல்களாகப் பல செய்யுள்கள் இருப்பினும், அவை பொருளியல் கோரிக்கைகளையும் தாண்டி இலக்கியமாகவும் குறிப்பாக அக்காலகட்டத்துச் சமுதாயத்தின் பல்வேறு இன வரைவியல் செய்திகளை உள்ளடக்கிய அரிய கருவூலமாகவும் திகழ்வதைக் காணமுடிகிறது.

- சங்க காலம் என்பது அரசு உருவாக்கம் நிறைவுபெற்ற காலகட்டமும் அதன் துணை அமைப்புகளாகிய சட்டங்கள், இராணுவம் முதலானவை கட்டமைக்கப்பட்ட காலமும் ஆகும். எனவே நிலத் தலைவர்கள் அல்லது அரசர்கள் தனித்த அதிகாரம் மிக்க மையங்களாக விளங்கினர். சட்டம் அவர்களின் காலடியின் கீழேயே இருந்தது. நீதி வழங்குவதையும் அவர்களே தங்களது சொந்தப் பொறுப்பில் வைத்துக் கொண்டிருந்தனர். இந்நிலையில் அதிகாரம் ஓரிடத்தில் குவியும்போது இயல்பாக எதிர்ப்படும் எதேச்சதிகாரப் போக்கு அவர்களிடத்திலும் தலையெடுத்தது. அவ்வேளைகளில் மக்களின் குரலை மென்மையாகவும் நயமாகவும் சில

வேளைகளில் கடுமையாகவும் வெளிப்படுத்த வேண்டிய தேவை சங்ககாலப் புலமைத் தொழிலோருக்கு இருந்தது. அச்செயல்பாட்டினை மிகவும் செம்மையாகச் செய்தனர் என்பதையே சங்கப் பனுவல்கள் மெய்ப்பிக்கின்றன.

- இலக்கியத்தைச் சமூகத்தை அப்படியே பிரதிபலிக்கும் கண்ணாடியாகக் கொள்ளமுடியாவிட்டாலும் சமூகத்தின் அசைவியக்கத்தை வெளிப்படுத்தும் மிக இன்றியமையாத வெளிப்பாட்டுக் கருவியாகக் கொள்ள இயலும். அந்த அடிப்படையில் சங்கப் புலவர்கள், கலைஞர்கள் உள்ளிட்ட புலமைத் தொழில் புரிவோர் சமூக வெளிப்பாட்டுக்குரிய களமாகத் தங்கள் படைப்புகளை அமைத்தார்கள்.
- புலமைத் தொழில் புரிவோர் தங்கள் கவிதைகளைப் படைப்பதற்கான கருவிகளும் சூழல்களும் தனித்துவமானவை. அதாவது செய்யுள் கட்டமைப்பில் அவர்கள் தங்களின் படைப்புகளை உருவாக்கினர். மிகவும் எளிய கட்டமைப்பை உடைய அகவற்பா அமைப்பு அவர்தம் படைப்பாக்கச் செயல்பாடுகளுக்குக் கைகொடுத்தது எனலாம். பொதுநிலைச் சமூகமும் அரசு சமூகமும் இலக்கியப் படைப்புகளுக்குக் கொடுத்த சிறப்பிடத்தைப் புலமைத் தொழில் புரிவோர் மிகுதியும் உணர்வுப்பூர்வமாகப் பயன்படுத்திக் கொண்டனர் எனலாம்.

# மேலாய்வுக் களங்கள்

- சங்க இலக்கியத்தில் புலமைத் தொழில் எனும் தலைப்பிலான இவ்வாய்வின் மேலாய்வுக் களங்களாகப் பின்வருவன பரிந்துரை செய்யப்படுகின்றது.

- சங்க கால புலமைத் தொழிலும் சமூக உறவுகளும்

- சங்க கால புலமைத் தொழிலும் கருத்தியலும்

- சங்கப் புலமையாளர்களின் அகம், புறம் சார் வாழ்வியல் வெளிப்பாடு என்னும் தலைப்புகளில் ஆராயலாம்.

# துணைநூற் பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. பரிமணம்.அ.மா. (ப.ஆ.) - நற்றிணை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

2. ,, - குறுந்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

3. ,, - ஐங்குறுநூறு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

4. ,, - கலித்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

5. பரிமணம்.அ.மா. - அகநானூறு மூலமும் உரையும்
(ப.ஆ.)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

6. ,, - பதிற்றுப்பத்து மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

7. ,, - புறநானூறு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

8. ,, - பரிபாடல் மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

9. பரிமணம்.அ.மா. (ப.ஆ.) - திருமுருகாற்றுப்படை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

10. ,, - பொருநராற்றுப்படை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

11. ,, - பெரும்பாணற்றுப்படை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

12. ,, - சிறும்பாணாற்றுப்படை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

13. ,, - மலைபடுகடாம் மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

14. பரிமணம்.அ.மா. - முல்லைப்பாட்டு மூலமும் உரையும்
(ப.ஆ.)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

15. ,, - குறிஞ்சிப்பாட்டு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

16. ,, - மதுரைக்காஞ்சி மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

17. ,, - பட்டினப்பாலை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

18. ,, - நெடுநல்வாடை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை – 600 098.
ஏப்ரல் - 2004

# துணைமை ஆதாரங்கள்


1. அம்மன் கிளி முருகதாஸ் - சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும்
குமரன் புத்தக இல்லம்
சென்னை
2006

2. அருணாச்சலம்.மு. - இலக்கியக் கொள்கை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
1975

3. அறவேந்தன்.இரா. - பண்டைத் தமிழர் வாழ்வில் பசிப்பிணி
தாயறம் வெளியீடு
காரைக்குடி
2009

4. அறவாணன்.க.ப. - தமிழ் இலக்கியச் சமூகவியல்
தமிழ்க்கோட்டம்
புதுச்சேரி
1992

5. அன்புச்செல்வன்.தி. - பண்டைத் தமிழரின் அரசமைப்புச் சிந்தனைகள்
பாரதி புத்தகாலயம்
சென்னை
2010

6. ஆலிஸ்.அ. - கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும்
அன்னம் (பி) லிட்
சிவகங்கை
1991

7. ஆறுமுகம்.அ. - சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு
ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை – 5
1987

8. இராசமாணிக்கனார்.மா. - பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
1970

9. இலக்குவனார்.சி. - இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்
இலக்குவனார் இலக்கிய இணையம்
சென்னை
2011

10. இராமலிங்கம்.என்.இ. - புறநானூற்று வாழ்வியல்
திருவள்ளுவர் பதிப்பகம்
சென்னை
2005

11. இராமசாமி.துளசி. - பழந்தமிழ் இலக்கியங்கள் நாட்டுப்புறப் பாடல்களே
விழிகள் பதிப்பகம்
சென்னை
2012

12. கண்ணதாஸ்.பெ. - தமிழ் இலக்கியத்தில் வாழ்வியல் நெறி
பாவை பதிப்பகம்
சென்னை
2008

13. கழகம் (பதிப்பு) - நாலடியார்
அப்பர் அச்சகம்
சென்னை
2007

14. கிருட்டிணசாமி.வெ. - தகவல் தொடர்பியல்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2007

15. குமார்.இரா. - புறநானூற்றில் பெண்பாற் புலவர்களின் வீரமும் விவேகமும்
நல்நிலம் பதிப்பகம்
சென்னை
2008

16. குருசாமி.ம.ரா.போ. - வாழ்வும் வளமும்
பாரி நிலையம்
சென்னை
1957

17. குருசாமி.ம.ரா.போ. - பொருளும் கலையும்
பாரி நிலையம்
சென்னை
1957

18. குருநாதன்.இராம. - புறநானூறு ஒரு புதிய பார்வை
வானதி பதிப்பகம்
சென்னை
1999

19. ,, - இலக்கியப் படைப்பியலும் திறனாய்வியலும்
வானதி பதிப்பகம்
சென்னை
2000

20. கேசவன்.கோ. - மண்ணும் மனித உறவுகளும்
சென்னை புக் ஹவுஸ்
சென்னை
1979

21. கைலாசபதி.க. - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
1991

22. கைலாசபதி.க. - தமிழ் வீரநிலைக் கவிதை
குமரன் புத்தக இல்லம்
சென்னை
2006

23. கோவிந்தன்.கா. - பண்டைத்தமிழர் போர் நெறி
ராமையா பதிப்பகம்
சென்னை
2011

24. சம்பத்குமார்.மா. - சங்க இலக்கியத்தில் கலைஞர்களின் வாழ்வியலும் பாணர்களின் தற்கால நிலையும்
முனைவர் பட்ட ஆய்வேடு
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்
2009

25. சாலினி இளந்திரையன் - சங்கத் தமிழரின் மனித நேய மணிநெறிகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
1995

26. சாமிநாதஜயர்.உ.வே. - சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்
உ.வே.சா நிலையம்
சென்னை
1996

27. சிதம்பரனார்.சாமி. - பழந்தமிழ் அரசியல்
வ.உ.சி.நூலகம்
சென்னை
2007

28. சிதம்பரனார்.சாமி. - சங்கப் புலவர் சன்மார்க்கம்
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை
1965

29. சிவகாமி.ச. - இலக்கியப் பொருட்பகுப்பாய்வு
அமுத நிலையம்
சென்னை
2012

30. சிவத்தம்பி.கா. - தொல்காப்பியமும் கவிதையும்
குமரன் புத்தக இல்லம்
சென்னை
2006

31. சிவலிங்கனார்.ஆ. - தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும்
உலகத்தமிழ் கல்வி இயக்ககம்
சென்னை

32. சுப்பிரமணியன்.கா. - சங்க காலச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
1993

33. சுப்பிரமணியன்.ஏ.வி. - தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி
மெய்யப்பன் பதிப்பகம்
சென்னை
2013

34. சுப்பிரமணியம் பிள்ளை.ஜி. - தமிழ் உள்ளம்
மணிவாசகர் நூலகம்
சிதம்பரம்
1974

35. சுப்பிரமணியம்.ச.வே. - சங்க இலக்கியம் வாழ்வியல் சிந்தனை
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2011

36. செயராமன்.நா. - சங்க இலக்கியத்தில் பாடாண் திணை
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
1975

37. செயராமன்.நா. - தமிழ் இலக்கிய நெறிகள்
குமரன் பதிப்பகம்
மதுரை
1979

38. சூரிய நாராயணன் - தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
1998

39. ஞானி - மார்க்சியமும் தமிழ் இலக்கியமும் பரிமாணம்
விஜயா பதிப்பகம்
கோயம்புத்தூர்
1988

40. தட்சிணாமூர்த்தி.அ - சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்
மங்கையர்க்கரசி பதிப்பகம்
தஞ்சாவூர்
2001

41. தமிழண்ணல் - சங்க மரபு
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
2012

42. ,, - சங்க இலக்கிய ஒப்பீடு
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
2003

43. தமிழவன் - அமைப்பியல் வாதமும் தமிழ் இலக்கியமும்
காவ்யா பதிப்பகம்
பெங்களூர்
1991

44. தமிழ்நாடன் - மநுதர்மம்
குயில் பண்ணை பதிப்பகம்
சேலம்
1987

45. தாயம்மாள் அறவாணன் - அவ்வையார் அன்று முதல் இன்று வரை
பச்சைப் பசேல் வெளியீடு
புதுச்சேரி
2000

46. திலகவதி.க. - சங்க கால மகளிர் வாழ்வியல்
இறையருள் பதிப்பகம்
திருச்சி
2001

47. தில்லைநாதன்.சி. - பண்பாட்டுச் சிந்தனைகள்
குமரன் பதிப்பகம்
சென்னை
2000

48. தெய்வசிகாமணி (தொ.ஆ) - இலக்கிய இஸங்கள்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2004

49. தேனப்பன் - தமிழ் இலக்கியத்தில் மனித நேயம்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை
2013

50. நச்சினார்க்கினியர் உரை - தொல்காப்பியம்
கழக வெளியீடு
சென்னை
1958

51. நடராஜன்.தி.சு. - திறனாய்வுக் கலை
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை
2006

52. நடராசன்.ப. - சங்க இலக்கியத்தில் நாட்டுப்புற
இலக்கியக் கூறுகளின் தாக்கம்
முனைவர் பட்ட ஆய்வேடு
பாரதியார் பல்கலைக் கழகம்
கோயம்புத்தூர்
செப்டம்பர் - 2001

53. நித்யா அறவேந்தன் - வறுமையும் வலிமையும்
தாயறம் வெளியீடு
காரைக்குடி
2008

54. நிர்மலா மோகன் - சங்கச் சான்றோர் ஆளுமைத் திறன்
செல்லப்பா பதிப்பகம்
மதுரை
2009

55. பக்தவத்சல பாரதி - பாணர் இனவரைவியல்
அடையாளம் வெளியீடு
திருச்சி
2015

56. பழனிவேலு.நா - சங்கப்புற இலக்கியங்களில் சமூகச்
சித்தரிப்புகள்
மனோன்மணி பதிப்பகம்
கிருட்டிணகிரி
2004

57. பழனிவேலு.கே - சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து
மரபும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
2010

58. பாரதியார் - பாரதியார் கவிதைகள்
பாரி நிலையம்
சென்னை
1947

59. பாலசுப்பிரமணியன்.கு.வெ - சங்க இலக்கியக் கொள்கை
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
2008

60. பாலசுப்பிரமணியன்.கு.வெ. - சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்
தமிழ்ப் பலக்லைக்கழகம்
தஞ்சாவூர்
1994

61. பாலசுப்பிரமணியன்.கு.வெ. - சங்க இலக்கியத்தில் புறப்பொருள்
மீரா பதிப்பகம்
புதுக்கோட்டை
1986

62. பாலசுப்பிரமணியன்.சி - சங்க இலக்கியம் - சில பார்வைகள்
பாரி நிலையம்
சென்னை
1989

63. பாலுசாமி.நா. (ப.ஆ) - வாழ்வியற் களஞ்சியம்
தொகுதி – 8
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
2004

64. பிள்ளை.கே.கே. - தென்னிந்திய வரலாறு, தமிழக வரலாறு
மக்களும் பண்பாடும்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை
1972

65. புவியரசு - சங்க இலக்கியக் கதைகள்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை
2012

66. பொன்மணி வைரமுத்து - சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள்
திருமகள் நிலையம்
சென்னை
2012

67. மணவாளன்.அ.அ. - இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
2011

68. மருதநாயகம்.ப. - புதுப்பார்வையில் புறநானூறு
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை
2000

69. மறைமலை.சி.இ. - புதுக்கவிதை முப்பெரும் உத்திகள்
திருமகள் நிலையம்
சென்னை
1986

70. மறைமலை.சி.இ - இலக்கியமும் சமூகவியலும்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
1991

71. மாதையன்.பெ - சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்
பாவை பப்ளிகேஷன்ஸ்
சென்னை
2004

72. மாதையன்.பெ. - தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
2009

73. மாணிக்கம்.வ.சுப. - வள்ளுவம்
பாரி நிலையம்
சென்னை
1956

74. ,, - தமிழ்க்காதல்
பாரி நிலையம்
சென்னை
1962

75. முருகேசபாண்டியன்.ந. - மறுவாசிப்பில் மரபிலக்கியம்
நற்றிணை பதிப்பகம்
சென்னை
2011

76. முத்தையா.கே. - சங்க காலச் சமுதாயம்
பாரதி புத்தகாலயம்
சென்னை
2008

77. மோகன்.இரா.ப. - இலக்கிய விருந்து
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
1998

78. மௌனகுரு.சி. - பண்டைத்தமிழர் வரலாறும் இலக்கியமும்
அலைகள் வெளியீட்டகம்
சென்னை
2006

79. ராஜ்கௌதமன் - ஆகோள் பூசலும் பெருங் கற்கால நாகரிகமும்
தமிழினி பதிப்பகம்
சென்னை
2009

80. ருக்மணி.இரா. - சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
2011

81. வரதராசனார்.மு. - புலவர் கண்ணீர்
பாரி நிலையம்
சென்னை
1963

82. வரதராசனார்.மு - தமிழ் நெஞ்சம்
பாரி நிலையம்
சென்னை
1947

83. வரதராசனார்.மு - திருக்குறள்
கழக வெளியீடு
சென்னை
1985

84. வரதராசனார்மு - இலக்கியத் திறன்
தாயக வெளியீடு
சென்னை
1987

85. வானமாமலை.நா. - தமிழர் பண்பாடும் தத்துவமும்
அலைகள் வெளியீட்டகம்
சென்னை
2008

86. வித்தியானந்தன்.சு - தமிழர் சால்பு
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
1971

87. வீரபாண்டியன்.சுப. - கவிதை உத்திகள்
கனிமுத்துப் பதிப்பகம்
சென்னை
1985

88. வெள்ளைவாரணன்.க. - சங்க காலத் தமிழ் மக்கள்
நேஷனல் பப்ளிகேஷிங் கம்பெனி
சென்னை
1956

89. வேங்கடசாமி நாட்டார்.ந.மு. - நீதி நூல்கள்
முல்லை நிலையம்
சென்னை
2011

90. வேங்கடராமன்.க.கோ. - தமிழிலக்கிய வரலாறு
கலையக வெளியீடு
நாமக்கல்
2001

91. வேலுப்பிள்ளை - தமிழ் இலக்கியமும் காலமும் கருத்தும்
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
1978

92. ஜான் சாமுவேல்.ஜி - கலையும் கலைக் கோட்பாடும்
விஜய் பிரிண்ட் சர்வீஸ்
மதுரை
1985

93. ஜெகதீசன்.ஆ - சங்க இலக்கிய மதிப்பீடுகள்
ராமையா பதிப்பகம்
சென்னை
2008

94. Bowra.C.M. - Ancient Greek Literature
Oxford University Press
Oxford, London
1945

**இதழ்கள்**

95. சண்முக சுந்தரம் - காவ்யா தமிழ்
அக்டோபர் - டிசம்பர்
2012

96. சண்முக சுந்தரம் - காவ்யா தமிழ்
ஏப்ரல் - ஜீன்
2016

# சங்க இலக்கியங்களில் புலமைத் தொழில் மரபு

திருவள்ளுவர் பல்கலைக்கழக முழு நேர முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப் பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ப.ஆனந்தகுமார்**

(பதிவு எண்:No.TVU/R/Ph.D./Reg./FT/Tam./SHCT/2013/6251)

நெறியாளர்

முனைவர் **கி.பார்த்திபராஜா,** எம்.ஏ.,பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை & ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635 601 வேலூர் மாவட்டம்




## திருவள்ளுவர் பல்கலைக்கழகம்

சேர்க்காடு, வேலூர் – 632 115.

செப்டம்பர் – 2017

# மதிப்பீடு

- சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் கலைஞர்கள் தங்களுக்குப் பரிசில் அளித்துப் புரக்கும் நிலத்தலைவனை அல்லது அரசனை, வெறுமனே பரிசில் அளிக்கும் கொடையாளியாக மட்டும் காணவில்லை. அவர்களுக்கிடையிலான உறவு நிலையானது தனித்துவம் மிக்கதாக உள்ளது. தங்களின் கலைத்திறனை வெளிப்படுத்திப் பரிசில் பெற்றுப்போகும் உறவு மட்டுமின்றி, மன்னனின் இறப்புவரையும்கூட நெருக்கமான உறவினைப் பேணியுள்ளனர் கலைஞர்கள். பரிசிலுக்காகப் பாடப்பட்ட பாடல்கள் மட்டுமின்றித் தலைவனை இழந்த தங்களின் கையறுநிலையை வெளிப்படுத்தும் பாடல்களையும் அவர்கள் புனைந்துள்ளனர்.

- புலவர்களுக்கும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களுக்கும் பண்பு அடிப்படையில் மெலிதான இடைவெளி தோன்றிப் பிற்காலத்தில் நிலைத்தது. எனினும் அவர்கள் இரு பிரிவினரும் பரிசிலர், இரவலர் ஆகிய பொதுச் சொற்களாலேயே குறிப்பிடப்படுகின்றனர்.

- புலவர்கள் தங்களைப் பரிசில்கள் அளித்துப் புரக்கும் அரசர்களைப் புகழ்ந்து பாடும் படைப்புகளைப் படைத்துள்ளனர். அவர்களைக் குறிப்பிடும் பாடல்களின் தங்களைப் போன்ற கலைஞர்களின் வாழ்க்கை அமைப்பையும் செல்நெறியையும் இணைத்துப் பாடியுள்ளனர். எனவே புலவர்களின் பாடல்களில் நிலத் தலைவர்கள் பற்றிய குறிப்புகளோடு இரவலர்களின் நிலை பற்றிய பல்வேறு குறிப்புகளையும் காணமுடிகிறது.

- புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் தங்களின் படைப்புத் துறையிலும் அவற்றை அரங்கின்மிசை அளிக்கும் தன்மையிலும் நுண்ணிதான வேறுபாடுகளைக் கொண்டிலங்குகின்றனர். புலமைத் தொழிலில் நுட்பமான வேறுபாடுகள் தலைகாட்டத் தொடங்கியமைக்கான அடிப்படைகளை அவர்தம் படைப்புச் செயல்பாடுகள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனாலும் பரிசில் பெறுபவர்கள் என்னும் அடிப்படையில் புலவர்களும் பாணர் உள்ளிட்ட கலைஞர்களும் ஒரே நிலையில் காணப்படுகின்றனர்.

- சங்க இலக்கியப்பாடல்கள் பலவற்றில் கூத்தர், பொருநர், பாணர், பாடினி, விறலி ஆகிய கலைஞர் பெருமக்களின் வறுமைநிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மிகவும் பின்தங்கிய அடித்தட்டு மக்களைவிட மிகவும் வாழ்நிலையில் கீழான நிலையில் கலைஞர்கள் வாழ்ந்தமையைப் பல பாடல்கள் சித்தரிக்கின்றன. ஆனால், புலவர்கள் ஒப்பீட்டளவில் கலைஞர்களைப் போன்று வறுமையில் வாடியமை குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் பதிவு பெறவில்லை.

- புலவர்கள் தங்களின் பாடல்களில் கலைஞர்கள் பெற்ற பரிசில்களைப் பதிவு செய்துள்ளனர். அதன் நோக்கம், தலைவனது வள்ளல்தன்மையைச் சிறப்பிப்பது மட்டுமல்ல; தனக்கும் தன் புலமைக்கும் தக, தலைவன் மிகுதியான பரிசில் அளித்து வரிசை செய்ய வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்கும் ஆகும்.

- புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து பாடும்போது, கலைஞர்கள் பற்றிய பல்வேறு குறிப்புகளையும் இணைத்துப் பாடியுள்ளனர்.

- புறநானூற்றில் மட்டும் 19 புலவர்கள், தங்களின் 23 பாடல்களில் கலைஞர்களின் கூற்றாகப் பாடியுள்ளனர். புலவர்கள், கலைஞர்களின் கூற்றாகப் பாடல் பாடும் மரபு வளமிக்கதாக இருந்தது என்பதைச் சங்கப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. கலைஞர்களின் கூற்றுக்களாகப் பாடல்களை அமைக்கும் மரபு தமிழ்க்கவிதைப் பரப்பில் இருந்ததெனினும் கூத்தர்களின் கூற்றாகப் புலவர்கள் பாடல்கள் ஏதும் புனையவில்லை என்பதும் கருத்திற்குரியது.

- அகத்திணையில் தலைவனுக்கும் தலைவிக்குமான ஊடலைத் தீர்க்கும் வாயிலாகப் பாணர், விறலியர் ஆகியோர் செயல்பட்டனர். அதைப்போலப் புறத்திணையில் புலவர்கள் தங்களைப் பாணராக வரித்துக் கொண்டு மன்னர்களுக்கிடையே தூது சென்றுள்ளனர்.

- பாணர்குடிப் புலவர்கள் என்று அறியப்படும் புலவர்கள், ஔவை, காக்கைப்பாடினி நச்செள்ளையார், நெடும் பல்லியத்தனார் ஆகியோர் ஆவர். கூத்தர் என்ற அடைமொழியை இயற்பெயராக உடைய புலவர்கள்

8 பேர் உள்ளனர். இவர்கள் கூத்துக் கலைஞர்களாகத் தெரியவில்லை. கூத்து மரபிலிருந்து வந்தவர்களாகவோ அல்லது கூத்தர்களைத் தங்களின் மரபு முன்னோடிகளாகக் கொண்டவர்களாகவோ இருக்க வேண்டும்.

- புலமைத் தொழிலில் ஈடுபட்டு வந்த பாணர்கள், கூத்தர்கள், பொருநர்கள், விறலியர், புலவர்கள் ஆகியோர் நிலத்தலைவர்களிடமும் சீறூர்த் தலைவர்களிடமும் மன்னர்களிடமும் தங்களது திறன்களை வெளிப்படுத்திப் பரிசில் பெறுவதைத் தங்களின் முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். எனவே புலமைத் தொழில் என்பது தனித்த தொழிலாக வளர்ச்சி பெற்ற காலகட்டமாகச் சங்க காலத்தைக் குறிப்பிடலாம்.

- இரந்து பெறும் பொருளைத் தான் மட்டும் வைத்து வாழாது, தங்களது சுற்றத்திற்கும் பகிர்ந்து கொடுத்து வாழும் நிறைவான வாழ்க்கையைப் புலவர்கள் வாழ்ந்துள்ளனர். இவ்வாறு சுற்றத்தாரையும் பேணி வாழும் வாழ்க்கை, புலமைத் தொழிலில் ஈடுபடுவோர்க்கு மட்டுமின்றிச் சங்க காலக் குடிமக்களின் பொது வாழ்க்கைப் பண்பாக இருக்கிறது.

- தலைவர்களிடம் தங்களது திறனை வெளிப்படுத்திப் பரிசில்களைப் பெறும் புலவோரும் கலைஞர்களும் தங்களது ஆளுமைகளை மிகச் சிறப்பாக வெளிப்படுத்தத் தவறுவதில்லை. அவர்கள் வெளிப்படுத்தும் ஆளுமைத் திறன்களின் வாயிலாக நிலத்தலைவர்களும் அவர்களிடம் பெரும் மதிப்புக் கொண்டுள்ளனர் எனலாம்.

- அரசர்கள் தங்களது அரசாட்சியிலும் குடிகளைப் பேணுதலிலும் குறைபாடுடையவர்களாகவும் தவறு செய்பவர்களாகவும் இருந்தால், தயக்கமின்றி அவர்களது குறைகளைச் சுட்டிக்காட்டும் பொறுப்புணர்வு மிகுந்தவர்களாகவே பெரும்பாலான கலைஞர்களும் புலவர்களும் இருந்துள்ளனர். நிலத்தலைவர்களின் குறைகளை மிகவும் நயமாக வெளிப்படுத்தும் நயத்தக்க நாகரிகம் கொண்டிருந்தனர்.

- புலமைத் தொழிலில் ஈடுபட்ட பிரிவினர் தாங்கள் பொருள் இரப்பவர்களாக இருப்பினும் தங்களது வறுமை நிலையினை நேரடியாக மிகுதியும் வெளிப்படுத்தவில்லை. மாறாக, வறுமை நிலையில்

இருப்பதாகப் பாடுவது ஒருவகையான பொருண்மை சார் உத்தியாக உள்ளது எனலாம்.

- பரிசில் பெற்று வாழும் இரவலர்களாகப் புலமைத் தொழிலினர் இருந்தபோதிலும் அவர்களுக்கான சமூக மரியாதை மிகவும் சிறப்பானதாக இருந்திருக்கிறது. தன் மதிப்பும் தற்சார்பும் உடையவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளவே இரவலர்கள் விரும்பியுள்ளனர். புலமைச் செருக்கு அவர்களிடம் மிகுந்திருந்தது. பொதுநிலைச் சமூகமும் அரசு சார் சமூகமும் அவர்களுக்கு மிகுந்த மரியாதை கொடுத்திருக்கின்றன. அரசர்களும் புலமைத் தொழிற்பிரிவினருக்கு உரிய மரியாதையை உறுதிப்படுத்தியுள்ளனர்.

- புலமைத் தொழிற்பிரிவினர் மிகுந்த நன்றியுணர்ச்சி உடையவர்களாகவும் அந்நன்றி உணர்ச்சியைத் தங்களது படைப்புகளில் தயக்கமின்றி வெளியிடுபவர்களாகவும் உள்ளனர். தங்களின் வாழ்க்கையும் இருப்பும் கொடைகளை வாரிக்கொடுக்கும் வள்ளல்களாலேயே சாத்தியமாகிறது என்பதை அவர்கள் உணர்ந்தவர்களாக உள்ளனர். அதனால் தங்கள் வாழ்க்கையைச் சாத்தியமாக்கும் வள்ளல்களுக்கு வாழ்வின் இறுதிவரை நன்றிக்கடன் பட்டவர்களாகத் தங்களை வெளிப்படுத்திக் கொண்டுள்ளனர்.

- வள்ளல்களிடம் பெற்ற பொருள்களைத் தங்களது உறவுச் சுற்றம் மட்டுமின்றி விருந்தினர் உள்ளிட்ட பிறருக்கும் பங்கிட்டு அளிக்கும் பண்புடையவர்களாகப் புலமைத் தொழில் புரிவோர் இருந்தனர். தாங்கள் பெற்ற வளத்தைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்துள்ளனர்.

- நிலத்தலைவர்களாகிய வள்ளல்லகளிடம் இரந்து உண்ணும் வாழ்க்கை விதிக்கப்பட்டவர்களாயினும், ஆளுவோரிடம் முரண்பாடுகள் காணுமிடத்து அவற்றைச் சுட்டிக்காட்டத் தயங்காத துணிச்சல் மிக்கவர்களாகவும் புலமைத் தொழில் புரிவோர் இருந்துள்ளனர். நயமாக உரைத்தல், பணிவாக உரைத்தல் என்பதையும் தாண்டிச் சில வேளைகளில் கடுமையான முறையில் மறுத்துரைக்கவும் சுட்டிக்காட்டவும் செய்துள்ளனர் எனலாம்.

- அரசர்களிடம் புலமைத் தொழில் புரிவோர் கொண்டிருந்த உறவு தனித்துவமானது. அரசர்களின் வரிவிதிப்பை முறைப்படுத்துதல், நீர் வளம் பற்றி அறிவுறுத்துதல், ஒற்றுமையின் சிறப்பினை எடுத்துரைத்தல், அரசர்தம் மனைவியை அவர் பிரிந்திருப்பதைக் கடிந்துரைத்தல், கொலைக்குற்றம் புரியாமல் தடுத்தல் ஆகிய செயல்பாடுகளில் ஈடுபட்டனர்.

- அதிக வரி வசூலித்த பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரி கொள்ளும் முறைமை குறித்தும் அவ்வாறு முறைமையின்றி வரிகொள்ளும்போது ஏற்படும் இழப்புகள் குறித்தும் பிசிராந்தையார் அறிவுறுத்துகிறார். அரசனது ஆட்சிக்கு எதிராகக் குடிமக்கள் திரண்டுவிடக்கூடாது என்ற எண்ணத்திலேயே இவ்வறிவுரைகளை அவர்கள் வழங்கியிருத்தல் கூடும்.

- அரசன் தனது அரசு நிர்வாகத்தில் முதன்மையாகக் கொள்ளவேண்டியது நீர்வளத்தைப் பெருக்குதலாகும். இதனைச் சுட்டிக்காட்டிப் பாடல்களைப் புனைந்த பரிசிலர்கள் உளர். அரசர்களின் குடிப்பெருமையை அவர்களுக்கு எடுத்துக்காட்டி, சிறுமைகளிலிருந்து அவர்களைத் தடுத்தாட்கொள்ளும் பெரும்பணியையும் புலமைத் தொழிலினர் செய்துள்ளனர். ஒற்றுமையின் சிறப்பை எடுத்துக்காட்டி, ஒரு குடிக்குள் கொள்ளும் பகை இழுக்கானது என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளனர். பேகன் தனது மனைவி கண்ணகியைப் பிரிந்திருந்தமை கண்டு அவனது பிரிவினைத் தவிர்க்குமாறு சுட்டிக்காட்டியுள்ளனர் புலவர்கள். மலையமானின் குழந்தைகளைக் கொல்ல நினைத்த கிள்ளி வளவனின் பாதகச் செயலை உணர்த்தி, அதிலிருந்து குழந்தைகளை மீட்டெடுத்த புலவர்கள் உளர்.

- மன்னர்களின் அரசும் அரசு எந்திரமும் ஆட்சியும் எதை நோக்கி அமைய வேண்டும் என்பதையும் புலமைத் தொழில் புரிவோர் சுட்டிக்காட்டியுள்ளனர். புகழ் ஈட்டுதலின் இன்றியமையாமை குறித்தும் எடுத்துரைத்துள்ளனர். மன்னர்களுக்கு அன்பின் ஆழத்தையும் அருளின் ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தி, அறநெறியில் பற்றுக் கொள்ளச் செய்துள்ளனர்.

- அரசு என்பது சமூகத்தின் இன்றியமையாத அலகு என்பதையும் அரசு எந்திரம் தனக்குரிய செயல்பாடுகளைத் தெளிவாக வகுத்துக்கொண்டு செயல்பட வேண்டும் என்றும் புலமைத் தொழில் புரிவோர் வற்புறுத்தியுள்ளனர்.

- முழுமையான அதிகாரம் பெற்றவர்கள் சங்க காலத்து அரசர்கள். ஆனாலும் அவர்கள் புலவர்களையும் கலைஞர்களையும் மதித்து அவர்தம் கருத்துக்களுக்குச் செவிசாய்த்துள்ளனர். நல் குணங்களைக் கொண்டவர்களாகவும் அவர்கள் வெளிப்பட்டுள்ளனர். காட்சிக்கு எளியவர்களாகவும், சுற்றம் காத்தவர்களாகவும், மக்களைத் தாய் போன்று காப்பவர்களாகவும், மக்களின் நலத்தை நாடுபவர்களாகவும் இருந்துள்ளனர்.

- தன்னப் புகழும் இரவலர்களின் வறுமையைப் போக்குவதோடு மட்டுமின்றித் தனது அரசுக்கு வருவாயைக் கொடுக்கும் மக்களின் வறுமையைப் போக்கும் செயலிலும் அரசர்கள் ஈடுபட்டுள்ளனர். வேளாண்மையைப் பெருக்க உதவுதல், பாதுகாப்பளித்தல் ஆகியன அதன் வெளிப்பாடுகள் ஆகும்.

- அரசர்கள் ஈகைத்திறன் உடையவர்களா இருந்தமையைப் புலமைத் தொழிலோர் எடுத்துக்காட்டியுள்ளனர். கனவிலும் பெறமுடியாத பொருட்செல்வத்தினை வள்ளல்கள் வழங்கியுள்ளனர்.

- ஈதல், பெறுதல் குறித்த சிந்தனை சங்கச் சமூகத்தில் தெளிவானதாக இருந்துள்ளமையைப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. புலமைத் தொழில் புரிவோர், புரவலர் குறித்த இச்சிந்தனை, பொதுநிலைச் சமூகத்தில் பரவலான தாக்கம் பெற்றிருந்தமை புலப்படுகிறது.

- புலவருக்குப் புரவலர்கள் அளித்த பரிசில்கள் பல திறத்தனவாக உள்ளன. அதாவது, எண் அளவில் பொன் கொடுத்தல், ஊர்களை அளித்தல், அரச வருவாயில் பங்கு கொடுத்தல், ஆட்சி உரிமையில் இடமளித்தல், குன்றேறி நின்று கண்ணிற்கண்ட பரப்பை எல்லாம் கொடுத்தல், ஆட்சியை அளித்தல், புலவருக்காக வேள்வி செய்தல், தன்

மகனையே புலவருக்குத் தொல் கடனாற்றப் பணித்தல் முதலாகப் பல பரிசில்கள் புலமைத் தொழில் புரிவோருக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

- புலவருக்கும் அரசருக்குமான நட்பு செம்மாந்த நிலையில் அமைந்துள்ளது. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு, ஔவை - அதியமான் நட்பு, கபிலர் - பாரி நட்பு முதலானவை எடுத்துக்காட்டுகள் ஆகும்.

- புலவர்கள் பெரிதளவும் அரசர்களின் பரிசில்களை எதிர்நோக்கிப் பாடினர். ஆனாலும் தன் மதிப்பும் கொண்டிலங்கினர். நேரில் காணாது பரிசிலை அனுப்பிய அதிகமானிடம் புலவர் பெருஞ்சித்திரனார் முரண்பட்டார். 'வாணிகப் பரிசிலன் அல்லேன்' என்று தன்னைப் பிரகடனம் செய்த புலவர்களும் உளர்.
- மன்னர்களைப் பலநிலைகளில் இடித்துரைத்த புலவர்களும் புலமைத் தொழிலோரும் உளர். நாட்டுவளம், குடிகளைக் காத்தல், ஆட்சி முறைக்கு ஆலோசனை வழங்கல், புற ஒழுக்கத்தை இடித்துரைத்தல் முதலான பலநிலைகளில் புலமைத் தொழிலோர் அரசனிடம் உரையாடியுள்ளனர்.

- முகக்குறிப்பு அறிந்து ஈயும் புரவலர்களைக் குறித்துப் பலவாறாகப் புகழ்ந்து போற்றியுள்ளனர். பரிசிலர் தம்மை வரிசை கருதியிருக்கின்றனர். அவ்வரிசை உணர்ந்து புரவலர் பரிசளிக்க வேண்டும் என்று எதிர்பார்த்துள்ளனர். அவ்வரிசை அறியாத ஈயலில் முரண்பட்டு மறுத்திருக்கின்றனர்.

- அமைப்பியல் என்பது இலக்கிய, சமூகக் கட்டமைப்பினை அதன் கட்டமைப்புக் கூறுகளைக் கொண்டு மதிப்பிடும் முறைமை ஆகும். அமைப்பியல் கோட்பாட்டின் அடிப்படையில் சங்க இலக்கியப் பனுவல்களை ஆராயும்போது புதிய ஆய்வு முடிவுகளை அடையமுடியும்.

- சங்க இலக்கியம் தொகுக்கப்பெற்ற முறையும் பகுக்கப்பட்ட செறிவும் சிறப்புத் தன்மை வாய்ந்ததாக உள்ளது. அடிவரையறை, அகம் - புறம் என்ற திணைப் பாகுபாடு, ஐந்திணை அடிப்படையிலான பாகுபாடு என்று

பல நிலைகளில் சங்கப் பாடல்கள் வகைதொகைப் படுத்தப்பட்டுத் தொகுக்கப்பெற்றுள்ளன.

- முதற்பொருளையும் கருப்பொருளையும் உரிப்பொருளையும் உள்ளடக்கிய தெளிவாக வகுக்கப்பட்ட இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையிலேயே புலவர்கள் பாடல்களைப் புனைந்தனர். உள்ளுறை, இறைச்சி போன்றவை கவிதையை இன்னும் செறிவானதாக்க உதவியிருக்கின்றன. படிமம், உருவகம் போன்ற உத்திகளின் வாயிலாக செம்மையான கவிதை உருவாக்கத்தைப் புலவர்கள் நிகழ்த்தியுள்ளனர் என்பது புலனாகிறது.

- தகவல் தொடர்பியல் உத்திகள் பலவற்றைத் தமது படைப்பாக்கச் செயல்பாடுகளில் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். விமர்சன உத்தி, விளம்பர உத்தி, அறிவுறுத்தும் உத்தி, வர்ணனை உத்தி முதலான உத்திகள் அவை.
- சங்கப் புலவர்களின் புலமைத் தொழிற் செயற்பாட்டில் பல்வேறு தொடர்பியல் கோட்பாடுகளை இனம்காண முடிகின்றது. அவை, சங்கச் சான்றோரின் இலக்கியத் தொழிற்பாட்டு நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

- சமூகத்தில் நிகழுவதை எடுத்துக்காட்டும் பொறுப்பு மிக்கவர்களாகச் சங்கச் சான்றோரை அடையாளம் காணமுடிகிறது. அதாவது, காலத்தின் பதிவுகளைச் செய்யும் வரலாற்றுக் கடமைகளை உணர்ந்தே சங்கப் புலமைத் தொழிலோர் செயல்பட்டுள்ளனர். எனவே, தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, 'பிரதிபலிப்பு வெளிப்பாட்டுக் கோட்பாடு' தொடர்புடைய பல அம்சங்களைச் சங்கச் செய்யும் மரபில் காணமுடிகிறது.

- புரவலர்களின் வலிமையையும் சிறப்பையும் பண்பாட்டு நிலையையும் வலுப்படுத்தும் நோக்கத்தோடு பல்வேறு இலக்கியப்படைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. புரவலர்களின் புகழை எட்டுத் திக்கும் கொண்டு சேர்க்கும் பெரும்பணியையும் புலமைத் தொழிலோர் செய்துள்ளனர். எனவே புரவலர்களுக்குக் கருத்தியல் வலுச் சேர்க்கும் பணிக்குக் கவிதையைக் கொண்டு செலுத்தியுள்ளனர் என்பதை அறிய இயலுகிறது.

இது தற்காலத் தொடர்பியல் கோட்பாடுகளில் ஒன்றான, 'வலுவூட்டல் கோட்பாட்டுக்கு' எடுத்துக்காட்டாக அமைகின்றது.

- சமுதாயப் பொறுப்புக் கோட்பாடு என்னும் கருத்துருவத்தின் வெளிப்பாடாகப் பல சங்கச் செய்யுள்களை எடுத்துக்காட்டலாம். இலக்கியம் படைத்தல், புரவலர்களிடமிருந்து பரிசில்கள் பெறுதல் என்பதையும் விடுத்துச் சமுதாயக் கட்டமைப்பை எடுத்துக்காட்டுவதும் அவரவர் பொறுப்பு நிலைகளை வற்புறுத்துவதும் புலமைத் தொழில் புரிவோரின் கடப்பாடாக இருந்துள்ளது. இக்கடப்பாட்டை அவர்கள் விரும்பி ஏற்றதோடு மட்டுமல்லாமல், அவற்றை மிகவும் சீரிய முறையிலே செய்துள்ளனர் என்பது அவர்தம் கவிதைகளில் வெளிப்படுகிறது.

- சங்கக் கவிதைகளை வரலாற்று இன வரைவியல் கவிதையாக வாசிக்கும் நவீன வாசிப்பு முறை தற்காலத்தில் முதன்மை பெற்று வருகிறது. அதாவது, குறிப்பிட்ட இலக்கியப்படைப்பு அது தோற்றம் பெற்ற இனக்குழுவின் பல்வேறு பண்பாட்டு அம்சங்களை, அசைவுகளைத் தெள்ளத் தெளிவாக வெளிப்படுத்தும் தன்மை கொண்டதாக இருக்கிறது என்பது. அவ்வாறாக, பொருளியல் சார் தேவைகளுக்காகப் பாடப்பட்ட பாடல்களாகப் பல செய்யுள்கள் இருப்பினும், அவை பொருளியல் கோரிக்கைகளையும் தாண்டி இலக்கியமாகவும் குறிப்பாக அக்காலகட்டத்துச் சமுதாயத்தின் பல்வேறு இன வரைவியல் செய்திகளை உள்ளடக்கிய அரிய கருவூலமாகவும் திகழ்வதைக் காணமுடிகிறது.

- சங்க காலம் என்பது அரசு உருவாக்கம் நிறைவுபெற்ற காலகட்டமும் அதன் துணை அமைப்புகளாகிய சட்டங்கள், இராணுவம் முதலானவை கட்டமைக்கப்பட்ட காலமும் ஆகும். எனவே நிலத் தலைவர்கள் அல்லது அரசர்கள் தனித்த அதிகாரம் மிக்க மையங்களாக விளங்கினர். சட்டம் அவர்களின் காலடியின் கீழேயே இருந்தது. நீதி வழங்குவதையும் அவர்களே தங்களது சொந்தப் பொறுப்பில் வைத்துக் கொண்டிருந்தனர். இந்நிலையில் அதிகாரம் ஓரிடத்தில் குவியும்போது இயல்பாக எதிர்ப்படும் எதேச்சதிகாரப் போக்கு அவர்களிடத்திலும் தலையெடுத்தது. அவ்வேளைகளில் மக்களின் குரலை மென்மையாகவும் நயமாகவும் சில

வேளைகளில் கடுமையாகவும் வெளிப்படுத்த வேண்டிய தேவை சங்ககாலப் புலமைத் தொழிலோருக்கு இருந்தது. அச்செயல்பாட்டினை மிகவும் செம்மையாகச் செய்தனர் என்பதையே சங்கப் பனுவல்கள் மெய்ப்பிக்கின்றன.

- இலக்கியத்தைச் சமூகத்தை அப்படியே பிரதிபலிக்கும் கண்ணாடியாகக் கொள்ளமுடியாவிட்டாலும் சமூகத்தின் அசைவியக்கத்தை வெளிப்படுத்தும் மிக இன்றியமையாத வெளிப்பாட்டுக் கருவியாகக் கொள்ள இயலும். அந்த அடிப்படையில் சங்கப் புலவர்கள், கலைஞர்கள் உள்ளிட்ட புலமைத் தொழில் புரிவோர் சமூக வெளிப்பாட்டுக்குரிய களமாகத் தங்கள் படைப்புகளை அமைத்தார்கள்.
- புலமைத் தொழில் புரிவோர் தங்கள் கவிதைகளைப் படைப்பதற்கான கருவிகளும் சூழல்களும் தனித்துவமானவை. அதாவது செய்யுள் கட்டமைப்பில் அவர்கள் தங்களின் படைப்புகளை உருவாக்கினர். மிகவும் எளிய கட்டமைப்பை உடைய அகவற்பா அமைப்பு அவர்தம் படைப்பாக்கச் செயல்பாடுகளுக்குக் கைகொடுத்தது எனலாம். பொதுநிலைச் சமூகமும் அரசு சமூகமும் இலக்கியப் படைப்புகளுக்குக் கொடுத்த சிறப்பிடத்தைப் புலமைத் தொழில் புரிவோர் மிகுதியும் உணர்வுப்பூர்வமாகப் பயன்படுத்திக் கொண்டனர் எனலாம்.